உ

திருச்சிற்றம்பலம்.

# ஒழிவிலொடுக்கம்.

கண்ணுடையவள்ளலார்
திருவாய்மலர்ந்தருளிய
மூலமும்
திருப்போரூர்ச்

## சிதம்பரசுவாமிகள்

அருளிச்செய்தவுரையும்,

பாரிப்பாக்கம்
**முனியப்பமுதலியாரால்**
பார்வையிடப்பட்டு,

**அ-வீராசாமிநாயக**
**ரவர்களால்**

புங்கத்தூர்
ம-சபாபதிமுதலியாரவர்களது
கல்விவிளக்கஅச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது

காளயுக்தி௵ இஃது புத்தகம். வைகாசிமீ

1918

# அதிகார அட்டவணை.





ஆக செய்யுள்-௨௱௫௰௩.



# செய்யுளகராதி-



செய்யுளகராதி முற்றும்.

உ

திருச்சிற்றம்பலம்.

# ஒழிவிலொடுக்கம்.

## காப்பு.

(விநாயகர் துதி.)

நிம்பநிழற்பா...... .................... ※
அம்பன்முகத்தார். ...... .... .... .... ...... ※
செம்பதுமத்தா..... ............ ......... ※
னம்புகருத்தே. ....... . ........ ....... ...... ※

(சுப்பிரமணியர் துதி.)

ஒழிவிலொடுக்கத்துரைவரநாயேற்குச்..... ....... ※
செழுவிலொடுங்கருணைசேர்க்கு—முழுதின்பப். .... ※
பண்டைவளநாட்டும்பரமகுருப்போரூரன் .... ...... ※
றண்டைவளநாட்டிருத்தாள்.. .... . ... .... ... ....... ※

(திருஞானசம்பந்தசுவாமிகள் துதி.)

வள்ளலுரைத்தவழுவிலொழிவில்லொடுக்கத் ....... ※
துள்ளவுரைநாயேற்குறச்செய்யு—முள்ளமே.. ....... ※
யெம்பந்தநீக்குமிறைவன்றமிழ்க்காழிச்... ........ ... ※
சம்பந்தன்பூஞ்சதங்கைத்தாள். .... ......... ......... ※



உ

கடவுள் துணை.

# ஒழிவிலொடுக்கம்

## மூலமுமுரையும்.

## பொதுவிதுபதேசம்.

அஃதாவது,

ஆசாரியர் அநுசாரியர் இலக்கணமுதலியவும் இந்நூலிற்கூறிய கருத்தெல்லாவற்றையுந்தொகுத்துப்பொதுவாவுபதேசமாகக்கூறினமையான் இவ்வதிகாரத்திற்குப்பொதுவிதுபதேசமென்று பெயராயிற்று.

(அவதாரிகை.) குருதோத்திரம்.

வேதாகமப்பவுரி வீசுங்களாசநிலை.................*
யாதாரவெற்பிலபிடேகம் - போதத்.................*
திருவிலெழுபானுவெனதொழிவினின்பக்.................*
கருணைபொழிவானெனுந்தகை.................*

( இதன்பொருள். )

(வேதாகமப்பவுரி வீசுங்களாசநிலை) என்பது. வேதாகமங்களினதுபவுரிக்கூத்தினைப் பிரமம்போலுங் கைவாரங்கொண்டுவீசி நிறுத்தும் ஒருண்மைநிலை (ஆதாரவெற்பிலபிடேகம்) எ-து. ஆறுதாரங்களாகிய பொருப்பனையன்முடியிற்சூட்டும் ஓர்மகுடம் (போதத்-திருவிலெழுபானு) எ-து. ஆன்மபோதத்தின் கண்ணதாகிய வானவிருளைக்கிழித்தெழாநின்ற ஞானசூரியன் (எனதொழிவின்பக்- கருணைபொழிவானெனுந்தகை) எ-து. எனது போதநாசத்தின்கண்ணே அருளானந்தத்தைப்பொழியாநின்ற பிள்ளையார் உபரவெளிநின்றுச்சுட்டே மெய்ப்பொருளைக்காட்டிய திருவத்தமானதென்றவாறு. *

[பதசாரம்] அரங்கின்கண் ணடிக்கின்ற கூத்தர் பலருக்குமுதல்வனாகிய கூத்தன்வந்து கூத்தைக்கைவாரங்கொண்டு நிறுத்தி அவ்வ

ரங்கின்கண்ணுள்ள குறுமன்னிபர்கட்கெல்லாமுதல்வனாகிய மகாமன்னியனையேபுகழ்ந்து சுட்டிநின்றாற்போல வேதாகமங்கள்கூறிய பல சமயநெறிகளையும் அச்சமயங்கட்குரியகடவுளரையுங்கடந்துநின்றகடவுளருக்கெல்லாம் முதல்வனையே பிள்ளையார் பரஞானக்கண்ணினாலுணர்ந்து புகழ்ந்து சுட்டிநின்றமையால் - வேதாகமப்பவுரிவீசுங்களாசநிலையென்றும், நிராதாரமாகிய அருளினின்று மீதானமாகிய மெய்ப்பொருளிற்சுட்டோடும் அதீதப்பட்டு நின்றமையால்- ஆதாரவெற்பிலபிடேகமென்றும்-ஆன்மபோதத்தைமறைத்த வாசனையிருளைநீக்கிச்சிவத்தையறிவிக்குந் திருவருளைப்போல் இறைவனைப்பிறர்க்கறிவித்தமையால்-போதத்திருளிலெழுபானுவென்றுங்கூறினார் (இதற்குதாரணம்)தோடுடையசெவியன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக், காடுடையசுடலைப்பொடிபூசி யென்னுள்ளங்கவர்கள்வ, னேடுடையமலரான்முனைநாட்பணிந்தேத்தவருள்செய்த, பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே - என்றுந்திருக்கடைக்காப்பான் - மெய்ப்பொருளைத்தெரிசித்துச்சுட்டிப்புகழ்ந்துநின்றபோது திருவுள்ளமகிழ்ந்துமெய்ப்பொருட்கிருபாநோக்கம்வைக்க அக்கிருபாநோக்கத்தின் வழித்தாய்ச்சென்று சிவத்தில்அதீதப்பட்டுநின்றானென்பதும்பிறர்க்கறிவித்தானென்பதும் எனதுள்ளங்கவர்கள்வனென்பதனாலும்பெம்மானிவனன்றேயென்பதனாலுங்காண்க - பிரளயாகலருக்கனுக்கிரகித்தனுமது,வேதாகமங்களைமுதற்பொருளாக்கி அவையொன்றோடொன்றொவ்வாதுகூறும் பலபேதசமயங்களைக்கூத்தாக்கினார், ஆதாரமாறையுமூடுருவிநின்றசுழிமுனையை மேருவென்றும் இடைபின்கலைகளைஅதனைவலம்வருஞ்சூரியசந்திரரென்றும் யோகிகள் கூறுவாராகலினாதாரவெற்பென்றார், முடிகூறினமையால் வெற்பென்னுமஃறிணையையுயர்திணையாககூறப்பட்டது - கைகையென்பதை - மூன்றிடத்துங்கூட்டுக-கையாங்கொள்ளுதல் - கூத்தைநிறுத்தற்பொருட்டோகோவென்னுமடக்குமொழிகூறிக் கரமுயரவெடுத்து வீசுதல்- களாசமென்பதுபிரப்பு பிரம்பாடும் வீசுமெனக்கூட்டுக. (௧)

(அ-கை.) அதிதீவிர பக்குவர்க்காயினும் ஞானாசாரியரா
லன்றிப் போதநாசங்கூடாதென்றுகூறுதல்.

ஆல்விழுப்பமையென்னகற்றுச்சாதிப்பான்சற்குருவா.*
மன்றுபெருஞ்சியமதயானை - தன்னடைமேற்........*
சொற்பனைத்தேதோன்றிற்றுடிப்பற்றுக்கேவலமாய் ...*
நிற்பதுபோற்பாரானெனின்.........................*

(இ-ள்.) (தன்னிழப்பையென்னகற்றச்சாதிப்பான்) என்-து. ஒருவன்றற்போதவொழிவைச்சாத்திரங்களைக்கற்று அவற்றாற்கூறியவாறே தனதுபோதத்தானிட்டைகூடி யெங்ஙனஞ்சாதித்தடைவான் (சற்குருவா-மன்னுபெருஞ்சீயமதயானை-தன்னடைமேற் -சொற்பனத்தே தோன்றில்) என்-து. ஞானாசாரியனாகிய அருணிலைபெற்ற பெரியசிங்கம்போல்வான் சீடனாகிய மதயானையினது மேலாம்பக்குவத்தாற் பிரவஞ்சமாகிய சொப்பனத்தின்கட்டோன்ற (துடிப்பற்றுக் கேவலமாய்-நிற்பதுபோல்) என்-து. மதம்பொழியாநின்றயானையினது சொப்பனத்தின்கட் சிங்கந்தோன்ற அதனது மதமெறுவிதம்யாவுங்கெட்டு மருட்கேவலப்பட்டு நின்றாற்போலச் சீடனாகிய யானையினது உட்புறனைச் சீவிபாநின்றபோதப் பகைப்பெல்லா மற்றருட்கேவலமாய் நிற்கும்படி (பாராமெனினன்) என்-து. அப்போதத்திற்கு முட்புறனாகிய கிருபாநோக்கஞ்செய்யானாயினென்றவாறு. *

[ப-ம்] போதவொழிவின்கண் மெய்ப்பொருளிருத்தலின்மெய்ப்பொருளைத்தன்னிழப்பென்றார், மெய்ப்போதத்தாற்பொய்ப்போர் தம் அழிவதன்றி இதனை இதனாலழிக்கத்தொடங்கின் மேன்மேல்வளர்ச்சியாய் அழிவுகூடாமையில் - தன்னிழப்பையென்னகற்றுச்சாதிப்பானென்றார் - யானையைச் சிங்கங் கொல்லுவதுபோல ஞானத்தால் அஞ்ஞானத்தைக் கெடுத்தலிற் சற்குருவாம் மன்னுபெருஞ்சீயமென்றும்-ஞாதுருஞானஞேயமாயிவைகளொன்றுந்தோன்றாது ஆன்மா அப்பார்வையாற்சிவத்தில் அதீதப்படுதலிற் கேவலமாய்நிற்பதுபோற்பாராமெனினென்றுங்கூறினார், குருவாஞ்சீயமென்றமையாற்சீடனுமியானையென்று வருவிக்கப்பட்டது. துடிப்பற்றுக் கேவலமாய் நிற்பதுபோலென்று உவமையாகக் கூறினமையால் சுவப்பியானையுஞ் சிங்கமும் வருவிக்கப்பட்டது., சிங்கம்போல்வான்பாரானாயினெங்ஙனஞ் சாதிப்பானெனமுடிக்க, நடை-பக்குவம் - மேலாயபக்குவமெனமாறுக, சீயம்பாராமெனினெனமுடிந்தது. ராஜசிங்கம் வந்தானென்பதுபோலக்கொள்க. (௨)

(அ-கை.) ஆசாரியனையும் அனுசாரியனையும் மாணாக்கனுக்கு அறிவித்தல்.

கூடவித்தொழிலாளர்கொண்டுவிற்போர்போன்றகுரு*
வேலைப்பகிடிகளைமேவாதே - காலம்போற்..........*
பார்த்திருக்கவைத்த பரமகுருவைப்பரவ...........*
வார்த்தையிலைத்தீண்டாமனம்..............................*

(இ-ள்.) (கூலித்தொழிலாளர் கொண்டுவிற்போர்போன்றகுரு-வேலைப்பகடிகளைமேவாதே) எ-து. வேலைசெய்துகூலிவாங்கிக்கொள்ளுங்கூலித்தொழிலாளனாயும் ஓர்பொருளைக்கொண்டோர் பொருளைவிற்கும்வணிகனாயும்போன்ற-பிறர்க்குக்கிரியைகளைச்செய்துகாட்டியும்உபதேசங்களைக்கூறியும் அவர்கையி லருத்தம்பறிக்குந் தமக்கியையாதகுருவென்னும்பெயர்கொண்ட தொழிற்செய்யும்பகடிக்கூத்தாடிகளை மாணா நீ மெய்க்குருவென்றடையாதே (காலம்போற்- பார்த்திருக்கவைத்தபரமகுருவைப்பரவ - வார்த்தையிலைத்தீண்டாமனம்) எ-து. கதிர்வலம்வருதலாற் கணம்நாழிகை நாண்மாதமிருதுவருடமுதலியகாலங்களும் இக்காலங்கள்தோறுந்தோன்றும பிரவஞ்சங்களும் அனந்தபேதமாய்த் திரியவும் தனக் கோர் திரிவின்றியவற்றொடுந் தாக்கற்றிருந்த காலதத்துவம்போல மாயையிற்றோற்றியகருவிகளும் இக்கருவிகளாற் காரியப்பட்ட பிரவஞ்சங்களும் அனந்தபேதமாய்த்திரிபவுந் தனக்கோர்திரிவின்றி யிவற்றொடுந்தாக்கற்றிருந்த அருளேவடிவாகக் கிருபாநோக்கம்வைத்து மாணாக்கனைச் சுட்டற்றிருக்கவைத்தமேலாகிய ஞானாசாரியனைத் தோத்திரம்பண்ண ஓர் வசனமுமில்லை தியானிக்கவெனின் மனமும் அவனைத்தீண்டாதாகலின்இக்குருவையடைதியென்றவாறு. *

[கருத்து] கதிர்வலம்வருதலாற் கணமுதலிய காலபேதங்களும் பிரவஞ்சபேதங்களும் நானாவாய்த்தோற்றினும் இவைகள்தோற்றற்கும் அதுவலம்வருவதற்கும் காலதத்துவமேதுவானாற்போல மாயையிற்கருவிகளும் பிரவஞ்சங்களும் நானாவாய்த் தோற்றினும் இவைதொழிற்படுவதற்கும் இவைமாயையிற்றோற்றுதற்கும் திருவருளேதுவாயிற்றென்பதுங்காண்க. ப-ம். பரமகுரு சூக்குமைவாக்குந் தற்போதமுங்கடந்த சிவமென்றறிவிக்கவேண்டி வார்த்தையிலைத்தீண்டாமனமென்றார். (௫)

(அ-கை.) ஆசாரியனுக்கும் அவனிடத்துக்கேட்டஅபக்குவனுக்குங் குற்றம்வருமென்றறிவித்தல்.

குட்டித்திரட்காடியாறொழுக்ககோன்குறித்துக் ...*
கட்டிப்புதைந்தகதையாகுந் - துட்டமலப்..........*
பித்திலேமூத்தவர்கள்பேய்பிதற்றும்பேதையர்க்குப்...*
புத்திபோற்காட்டும்பொருள்.........................*

(இ-ள்.) (குட்டித்திரட்காடியாறொழுகக்கோன்குறித்துக்-கட்டிப்புதைந்தகதையாகும்) எ-து, பலகுட்டிகளோடுங் காடியானது நதி

வெள்ளத்தோடுஞ்செல்ல அதனது கரைக்கண்ணின்ற ஓரிடையன் அதனை யாடெனக்கருதி அந்நீரிற்குதித்து அதனைப்பற்ற அஃதிவனைப் பற்ற அஃதும் இவனும் அவ்வெள்ளத் தாழ்ந்தனவொன்று உலகத்தார் கூறுங் கதைபோலவாகும் (குட்டமலப் - பித்திலெழுந்தவர்கள்பே யபிதற்றும்பேதையர்க்குப் - புத்திபோற்காட்டும் பொருள்) எ-று. கொடிதாகிய மும்மலப்பயித்தியத்தான் முதிர்ந்த ஆசாரியரல்லார் ஓர் காற்கூறியதோர்காற்கூறாது பேய்பிடித்தாற்போலும் பிதற்றுநின்ற அபக்குவர்க்குபதேசம்போலுங்கூறிய அருத்தமென்றவாறு. *

[ப-ம்] பரஞானமென்பது சிறிதுமில்லாதார் அபரஞானங்களைக்கற்றுக்கொண்டு மனைவிமுதலிய குடும்பவெள்ளத்திலாழ்ந்து கிடக்கின்றபேர் சிலர் டம்பநிமித்தங்கேட்க அவர்க்கருத்தநிமித்தம் உபதேசித்த அந்தவுபதேசப்பொருளா லிருவருக்குந் தோஷமேலிட்டுப் பிறவிசாகரத்தாழ்வராகலின் அக்கதையையிப்பொருளுக்குவமையாகக்கூறினார். இடையன் கரடியை ஆடென்றுங் கரடி அவனை நதிகடத்தும்புணையென்றுங் கருதினதுபோல் அபக்குவனைப்பக்குவனென்றும் அனுசாரியனை யாசாரியனென்றும் இருவரு மாறுபாடாய்க்கருதிறென்பதுமாம். (௪)

(அ - கை.) அனுசாரியரிலக்கணமும்
ஆசாரியரிலக்கணமுங் கூறுதல்.

குருட்டரிப்பனார்க்குங்குபேரனென்றுபேரோ ......*
கருப்பிரதமோத்தையோகாட்டு - மருட்டரித்த ......*
வாசானைப்போல்வரோ வாறாறுக்கப்புறத்தே............*
பேசாதிருத்தவல்லாப்பேர்........................ ..........*

(இ-ள்.) (குருட்டரிப்பனார்க்குங் குபேரனென்றுபேரோ - கருப்பிரதமோத்தையோகாட்டும்) எ-து. பிறவியந்தகனாகிய அரிப்பாளனுக்குங்குபேரனென்றுபேருமுண்டுகொலோ கரும்பினதிரதத்தை மோத்தையாடறிந்துகூறுமோ அவைபோலும் (அல்லாட்பேராறாறுக் கப்புறத்தேபேசாதிருத்தவருட்டரித்தவாசானைப்போல்வரோ) எ-று. அருள்வடிவமல்லாத மாயாவடிவங்கொண்ட அனுசாரியரானார் முப்பத்தாறுதத்துவங்களையுங் கடந்துநின்ற சிவத்தோடு மான்மாக்களை யிரண்டறக்கலப்பித்து மவுனமாய்வைக்க அருளேதிருமேனியாகக் கொண்டெழுந்தருளிவந்தஞானசாரியனைப்போலுமாவரோ-எ-று. (௫)

[ப-ம்.] குருட்டரியபனுக்குக் கைப்பரிசமேயன்றிக் கட்பார் வையின்மையால்பொற்பொடியேதோன்று அங்ஙனமிருப்ப அவனை யுஞ்செல்வத்தான் அளகேசனென்று கூறக்கூடுமோ அதுபோல் அ ஞ்சாரியனுக்கு கிரியைத்தொழிலன்றி ஞானமேயில்லை யங்ஙனமிருப் பஇவையுங்குருவென்று கூறக்கூடுமோவென்று,மோத்தையாடுகொ ழுந்தாடைதின்பதேயன்றிக் கரும்புதின்ன அறியாதாதலின் அதனிர தத்தையறிந்து இங்ஙனந்தானுந்தின்று தனதுகுட்டிக்குக்காட்டவறி யுமோ அதுபோல் அனுசாரியாராகமங்கள்கூறு மந்திரகலை தந்திரக லையுபதேசகலைகளுள்உபதேசகலையைவிட்டிருவகைக்கலைகளை யாராய் ந்து அவற்றுட்கூறியசரிதாதிகளைச்செய்து அவற்முன்வரும்விடையா னந்தானுபவம் பெறுவதேயன்றி சிவானந்தானுபவம் அனுவளவே னுமறியார்அங்ஙனமிருப்பப் பிறர்க்கச்சிவானந்தானுபவ மெங்ஙனங் கூறுவாரென்றும்,இந்தஉவமைகளாலறிவித்தவாறுகாண்க. அஃதன்றி யும் ஆடோகாட்டுமென்னும் எதிர்மறையோகாரம்‘அவ்வாட்டைமறு த்தியானையைக்காட்டிநின்றதாகலிற்கருப்பந்தோட்டத்தைப்போற்சி வாகமம்‘அதனுட்புகுதும் ஆடு யானைபோல் இதனுட்புகுதுங் கிரியா குருஞானகுரு, ஆடுகரும்புவிட்டு இலையைத்தின்று அதனதுசுவையை த்தானுமறிந்து தனதுகுட்டித்குங்காட்டுதல்போலவும் கிரியாகுருமந்திரதந்திரகலைகளை யாராய்ந்து அவற்றட்கூறிய சரிதாதிகளை யனு ட்டித்தவற்றுன் வரும்விடை யானந்தத்தைத் தானுமனுபவித்துத்த ன்னையடைந்தசிஷனுக்கும் அவ்வுபதேசங்களால் அவ்வானந்தத்தைவ ருவிப்பனென்பதும், ஞானகுரு மந்திரகலைதந்திரகலைகளைவிட்டுஉப தேசகலையை ஆராய்ந்ததனுட்கூறியஞானானந்தத்தைத்தானும்பெற்று த்தன்னையடைந்தபக்குவனுக்கும் அந்தஞானானந்தத்தை வருவிப்பா னென்பதுங்காண்க.— (இதற்குதாரணம் - பிரபுலிங்கலீலை.) புறம்பு காண்குவன்புல்லியனிசனை- யறிந்தஞானிபகமுறக்காண்பனுமெலறும் பிகாண்குறிலின்கரும்பேனொனுந்- செறிந்தவாடிலைதின்பனவென்ப வே - அஜெஜாந்திரமென்னுங் கிரந்தசம்மதியுமது, குருட்டரீப்ப னென்பதைக் குருட்டரிப்பனொன் றிறிப்பின்கட் பன்மையாகக்கூறி னர், கட்பார்வையின்மைபோன் -ஞானமின்மை - கைப்பரிசமறிதல் போற்- கிரியைகளைச்செய்தலென்பதுங்காண்க. (௫)

(அ-கை.) சாத்தியனையன்றிச் சாதகன் ஞானோபதேசம் பண்ணுதல் குற்றமெனவறிவித்தல்.

தன்னறிவுசாட்சியல்லாற் சாயுச்சியப்பயனைச்........*
சொன்னபிழைகெட்டேன் றுலைப்பரோ - முன்னே ...*
நடவாவழியொருவன் சொல்லநடந்து..................*
தடுமாறிநொந்தறியாதார் ..................................*

(இ - ள்.) (தன்னறிவுசாட்சியல்லாற் சாயுச்சியப்பயனைச் - சொன்னபிழைகெட்டேன் றுலைப்பரோ) எ - து, சிவானுபவ நன்றாய்விளங்கிற்றென்பதற்கு மலநின்றென்பதற்குந் தனக்குத் தன்னறிவுதானே சாட்சியாயிருக்கவும் பயனைக்குறித்து மயக்கத்தாலந்த அனுபவந் தனக்குண்டுபோற்காட்டிப் பிறர்க்கு வீடடையும் நெறியானவுபதேசப்பொருளைக் கூறியபாவங்களைக் கெட்டே னென்றக்காலம் நீக்கிக்கொள்வரோ (முன்னே- நடவாவழியொருவன் சொல்லநடந்து- தடுமாறிநொந்தறியாதார்) எ-து. அஃதன்றியுந் தாமுன்செல்லாதவூர்களுக்குப்பின்செல்லுங்கால் அவ்வூரடையுநெறியாதென் றந்நெறிகட்டான் முன்னடவாவொருவனைக்கேட்ப அவன் அதன்கட்சென்றுமுன் போன்றநெறியல்லா நெறிகூற ஈதுண்மை யெனக்கருதி அந்நெறிக்கட்சென்று முன்னிருந்த வூரும்பின்னடையு மூருமன்றிநடுவிடைத்தடுமாறி மனமுடல்வருந்தி யறிந்தவரலரென்றவாறு. *

[ப-ம்.] ஐயன்காளிசந்நிதியில் அசத்தியங்கூறினோர்க்கும் இம்மைக்கண்ணே துன்பம்வருதலிற் பூரணசிவத்தின் சந்நிதியில் அசத்தியங்கூறியபாவந் தொலையாதாகலிற் கெட்டேன் றுலைப்பரோவென்றும், வாக்காற்கேட்டறிந்து காயத்தாற் சென்றடையுமூர்க்குநெறியறியாவொருவ னெறிகூறக்கேட்டு அதன்கட் சென்றதனால் வருந்தி டரனுபவித்தறிந்தவர், மனத்தானுஞ்சென்று கூடுதற்கரியவீடடையும் நெறியைத்தாமறியா திருந்தும் அறிந்தார் போன்றுபிறர்க்குக்கூறாராகலின் இங்ஙனமுவமை கூறினார் - சேறலின்கட்டம்மென்னும்பன்மை தன்னென்னு மொருமையாய் வந்தது. அல்லாலென்பதை மயக்கத்தாலெனக்கொள்க - முன்னே யென்பதையிரண்டிடத்துங் கூட்டுக - கெட்டேனென்ப திரக்கக்குறிப்பின் கண்வந்தவழக்கச்சொல். (ரு)

(அ - கை.) ஞானாசாரியராயினும் பக்குவமறிந்துபோதியா ராயின் அவரையுமாசாரியரலரென்றுங்கூறுதல்.

பொய்ப்போகப்போகப்பொருந்திப்பொருடாரு.
சையோகபோகத்தரங்கத்தி-னையும்........................*

பரிபாகங்கண்டுபேதையாமற்பார்க்கும் ....................*
குருவேகாண்ஞானக்குரு ..................................*

(இ-ள்.) (பொய்போகப்போகப்பொருந்தி) எ-து, பொய்யாகிய கருவிகண் முப்பத்தாறுநீங்க அவை நீங்கவே அவைகளைப் பகுத்தறிந்துநீங்கிநின்ற அறிவுதானென்றுதன்னையருளாலுள்ளபடிகண்டுபின் பருட்டெரிசனப்பரா தெரிசனம்பராயோகமென்னும் இவற்றையடைந்து(பொருடானுஞ்சையோக போகத்தரங்கத்திலேயும்-பரிபாகங்கண்டுபேதையாமற்பார்க்கும்-குருவேகாண்ஞானக்குரு) எ-து. மெய்ப்பொருடானாகிய அனுபவசத்தியிற்றோன்றும் ஆனந்தபோகசமுத்திரத்தலையில் அவன் கரைந்துபோகுந் தீவரதரபக்குவமீதென்றுகண்டுமொழுக்கனந் போதமறுவளவும் பேதையாதடங்கக்கிருபாநோக்கம்வைக்கும ஆசாரியனே ஞானசாரியனுவனென்றவாறு. *

[ப-ம்] ஜீவகரணம் பராயோகமளவுந் தொடர்தலிற் - பொய்போகப்போகவென்றார் - சையோகமென்றது அனுபவசத்தி அநுபவயோகத்திற்குஞ் சுகாதீதத்திற்கும் இடையேதோன்றும் ஆனந்தப்பேற்றிற்கிடம், போகத்தரங்கத்தென்றமையாற் சமுத்திரம்வருவிக்கப்பட்டது. தரங்கமானந்தமேலீடு, அவ்விடத்தான்மபோதங் கெடுமாகலினையுமென்றார் - அடிதுடங்கி யனுபவமுற்றுங்கூறினமையாலிவ்வனுபவமுற்றுப்பெறுமவனதிதீவரபக்குவனென்பதுங்காண்க( )

(அ-கை.) ஆசாரிய னுபதேசங்கூறுமாறு மாணாக்கனேற்றுக்கொள்ளுமாறுமறிவித்தல்.

தேனுண்டுமிழுந்திறம்போற்சிவானந்த............*
மோனந்துனும்பிமொழிபாலத் - தேதின்று..........*
தோன்றிருதுபோதுமொன்றைச்சுட்டாதுகேட்பவர்க *
ளான்றதவம்வேதமது.................................*

(இ-ள்) (தேனுண்டுமிழுந்திறம்போற்சிவானந்த-மோனந்துனும்பிமொழிபாலத்தே) எ-து. தேனைநிறையவுண்டு அதனைமீட்டுங்கக்குந்தன்மைபோல் உட்புறத்தேயக்குதிறைந்து மவுனமாயிருந்தசிவானந்தவெள்ளங் காருண்ணியத்தாற்றதும்பி ஞானசாரியருபதேசமொழிகளைக் கூறுங்காலத்தளவு (தீ ...று-தோன்றிருதும்போதுமொன்றைச்சுட்டாதுகேட்பவர்களான்றதவம்வேதமது) எ-து. பணிவிடைசெய்துநின்று தோன்றப்பட்ட விருதுகாலம்போதும் அதுவிதுவென்

றென்றையுஞ்சுட்டாது பதைப்பறவிருந்து அதனைக்கேட்பவர்களுக்கு மாட்சிமைப்பட்ட தவமுடிவும் வேதமுடிவும் அங்ஙனநின்று கேட்குங்கேள்வியாமென்றவாறு. *

[ப-ம்] ஆசாரியர்மாணுக்கனதுபக்குவமறிந்து வலியக்கூறுதலேயன்றி அவனாயிவன்வலியக்கேட்கலாகாதாகலின் - மௌனந்தனும்பிமொழிகாலத்தென்றும்- இருதுவிற் பத்திரபுட்பபலாதிகள் தோற்றினும் அவ்விருதுவிசாரமின்றி யிருந்தாற்போற் கருவிகளோடுங்கூடியிருந்தும் அவற்றுட்டாக்கற்றுநின்றுகேட்க வேண்டுமாகலினிருதுபோலுஞ்சுட்டாது கேட்பவர்களென்றுங்கூறினர் - மௌனந்தனும்பிமொழிகாலத்தென்றமையானு மொன்றைச்சுட்டாது கேட்பவர்களென்றமையானுஞ் சொல்லாமற்சொன்னதென்றுங் கேளாமற்கேட்டதென்றுமாயிற்று - சுட்டறநிற்கைத்தது தபப்பயனாகலின் அதனைத்தவமென்றும் அங்ஙனநின்று கேட்குமொழி பிரமோபதேசமாகலின் அதனைவேதமென்றுங்கூறினர். அங்ஙனஞ்சொல்லுவது மிங்ஙனங்கேட்பதுஞ்சாம்பிரதாயம். (அ)

(அ-ஙக.) ஞானாசாரியரது திருவாக்குச்சிறப்பு கூறுதல்.

இருளிற்சுடரொன்னவிந்திரவியென்ன................*
வருளைக்கடந்தபரானந்தர் - திருவாக்.....................*
அமுதமழையம்பரச்சொனன்னிமித்தமாங்கே ........*
மமதையிராதென்றேமதி ............................. *

(இ-ள்) (இருளிற்சுடரொன்னவிந்திரவியென்ன - வருளைக்கடந்தபரானந்தர்-திருவாக்கு) புகலிருளின்கட்டோற்றும் விளக்குப்போலுஞ் சந்திரன்போலுஞ் சூரியன்போலுஞ்பிரகாசித்து ஆணவவிருளை நீக்கித் திருவருளையுங்கடந்த சிவானந்தமயமா யெங்கு நிறைந்துள்ள ஞானாசாரியரருளியவசனம் (அமுதமழையப்பரச்சொனன்னிமித்தமாங்கே-மமதையிராதென்றேமதி) எ-று. அமுதமழைபோலும் ஆகாசவாக்குப்போலும் நல்ல நிமித்தப்போலுமாமன்றி யதலேகட்சித்தேனும் அகங்காரமுண்டாகாதென் றறியென்றவாறு. *

[ப-ம்] அருட்டோற்றுங்கான் மூவிதமாய்த்தோற்றலானும் ஒன்றிற்கொன் றதிகமாய்ப்பிரகாசிக்கையானும் விளக்காதி மூச்சுடரையும் உவமையாகக்கூறினர்.—(இதற்குதாரணம் - தத்துவப்பிரகாசம்) பொறிகரணங்களையுயிர்ப்போற் போதப்போதத்தைப் பொருந்திநடத்திடுஞ்செயலாற் போதவுணர்வுணர்த்தே - யறிவினதுசெயலோதா

யெனவுணர்வுற்றிருப்பவர்போதுவிளக்கெனவுமருணன்மதியெனவு
ங்கறைவிடியுங்காலமெனவெளிவந்துற்பவிக்குமென்பதறுற்காண்க
நீர்மழைகைம்மாறின்றிப்பொழியினும்உற்பத்திநாசமுளவாகலின் அ
ம்மழையை யுவமைகூறுதமுதமழையென்றும்ஆகாசவாக்குஉண்மை
யறிவித்தல்போ லுண்மையாகிய சிவத்தையறிவித்தலினமபரச்சொ
ல்லென்றும், நன்னிமித்தங்கேட்டோர்க்குத் தாங்கருதியபொருள் கை
கூடல்போ லிதனைக்கேட்டோர்க்குத் தாங்கருதியவீடு கைகூடுதலின்
நன்னிமித்தமென்றுங்கூறினர், தற்போதத்தாற்கூறுஞ் சொற்கட்கெ
ல்லா மவ்வுவமையிருத்தலினங்கே மமதையிராதென்றார். (௯)

(அ-கை) இதுவுமது.

சாயாபுருடனைப்போலானந்தமேதடித்த..........*
மாயாவயிரிமனமாண்ட - நேயவுரை ..........*
யாவேசர்வீரராசர்மடலாளர்..........*
சாவானந்தர்க்குச்சரி..........*

(இ-ள்) (சாயாபுருடனைப்போலானந்தமேதடித்த- மாயாவயிரிம
னமாண்ட-நேயவுரை) எ - து. வடிவமின்றிய வாகாயத்தில் வடிவம்
போற்றடித்த சாயாபுருடனைப்போல வடிவமின்றியபேரானந்தந்தா
னே யாருங்களியத்தால்வடிவம்போற்காட்டி யெழுந்தருளிவந்தமா
யைக்கோர்வயிரியான ஞானாசாரியரது மலநீத்தமான கிருபாவசனம்
(ஆவேசர்வீரராசர்மடலாளர்-சாவானந்தர்க்குச்சரி) எ-து. ஆவேச
மேறினோர் மாவீரராயினோர் ஒருகுடைக்கீழாளுமரசர் மடலெழுதவர்
தாஞ்சாவதின்பமாய்க் கருதினோராகிய இவர்களதுமொழிகட்குச்சரி
யாமென்றவாறு. *

[ப-ம்] ஆவேசமேறினோர் தற்செயலின்றிக் கூறுதல்போன்முக்
காணங்களையுந் தமதிடத்தடக்கிக்கொண்டருளாய்நின்று கூறினமை
யானு மாவீரராயினோ ரெதிர்த்தாரைக்கொல்வதே கருத்தாகக்கூறுத
ல்போல் அறிவுக்கெதிரிடாய்த் தோற்றுவனவெல்லா மதீனுற்கொல்வ
தே கருத்தாகக்கூறுதலானும் ஒருகுடைக்கீழாளும் அரசர்கூறிய மொ
ழிப்படி இம்மைப்பயனுறுதல்போல் இவர்கூறிய மொழிப்படி மறு
மைப்பயனுறுதலானும்மடலாளர் மற்றொன்றையுங்கூறாது தானச்சிய
மாதினையேபுகழ்ந்து கூறுதல்போலச்சரிதாதிகளைக்கூறாதமது ஞா
னார்த்தத்தையேபுகழ்ந்துகூறுதலானுஞ் சாவானந்தர்தான் சாவதை
யின்பமாகக் கூறுதல்போலத் தற்போதவொழிவையே யின்பமாகக்

கூறுதலானும் ஆவேசமேறினோர்முதலிய வைவர்மொழியையுவமையாகக்கூறினோர் அவரது மொழிக்குவமை கூறினமையால் இவரது மொழிவருவிக்கப்பட்டது. (௰)

(அ-கை.) நூன்மரபு கூறுதல்.

சத்தியநிர்வாணத்தாற்றற்போதத்தாக்கறுத்து......*
வைத்துவழிகாட்டுமறைப்புலவன்-சுத்தன்...... ......*
றமிழ்க்குரிசிற்சீகாழிச்சம்பந்தனென்பா...............*
னெமக்கருளிச்செய்ததிது............................*

(இ-ள்.) (சத்தியநிர்வாணத்தாற்றற்போதத்தாக்கறுத்து -வைத்து வழிகாட்டும்) எ-து. சத்தியநிருவாணத்தீக்கையாலெனதுபோதத்தை யொங்கேறும் பற்றறவொழித்துச் சிவத்தோடிரண்டறக்கலக்கவைத் தென்பால்வந்தடைந்தோர்க்கும் எனதுள்ளே தாமேநிறைந்திருந்து முத்திநெறியையறிவிக்கும் (மறைப்புலவன் சுத்தன்றமிழ்க்குருசில்சீகாழிச்சம்பந்தனென்பா-னெமக்கருளிச்செய்ததிது) எ-து, வேதங்களையெல்லாம் ஓதாமலுணர்ந்த ஞானப்புலவர் மும்மலங்களையுங்கடந்து நின்றநின்மலர் தமிழினிலக்கணமெல்லாம் அளவிட்டறிந்த தமிழ்வேந்தர் சீகாழியென்னுந் திருப்பதியி லெழுந்தருளியிருந்த திருஞானசம்பந்தப் பிள்ளையாரென்று யாவரும் புகழாநின்ற சுவாமிகள் எம்போல்வார் வீடடைந்துய்யுநிமித்தம் அருளிச்செய்த திந்நூலினருத்தமென்றவாறு. *

- [பு-ம்.] இந்நூல் பிறர்க்குபகாரமாகக் கூறினமையால் வழிகாட்டுமென்பது பிறர்க்கெனக் கொள்க - மறைப்புலவன் றமிழ்க்குரிசிலென்றமையால் உபயகலைகளையுமுடையானென்றறிக. (௰௧)

(அ-கை.) நூற்பயன் கூறுதல்.

தாக்கற்றபூரணத்தேசந்தற்றதம்மைமல..........*
நீக்குந்துயரகலநேசித்தோர்-பார்க்கும்.............*
வழிபலநாம்பைமதித்தவாறுநீமாளா ..............*
வொழிவிலொடுக்கமுணர்ப்போம்.................. ...*

(இ-ள்) (தாக்கற்றபூரணத்தேசந்தற்றதம்மைமல- நீக்குந்துயரகலநேசித்தோர்) எ-து, எல்லாவற்றோடுங்கூடி நின்றும் அவைகளொன்றோடுந்தாக்கற்றிருந்த பரிபூரண சிவத்தோடும் ஆணவநீங்கிய விடத்

திரண்டறக்கலந்து விளங்காநின்ற தம்மையத்த வயிக்கியத்தைத்தெரி
யவொட்டாது மறைந்நிரண்டுபசிற்கும் அவ்வாணவ மலத்தான்பமக
ன்றேக வன்புகொண்டோர்(பார்க்கும் வழிபலநாமவை மறித்ததொறு
நீமாளா -வொழிவிலொடுக்கமுறைப்போம்) எ-து, ஆராய்ந்தறியுஞ்சா
த்திரநெறிகள் பற்பலவுளவா மவைபோலு மறைத்துக் கூறுது நாம்
வைபவிரித்து அதனுளிருந்தபொருள் ஈதென்றுகாட்டுமாறு மாணு
க்கனே நீவொழிவற வொழியுமிடத் தொடுங்கு நெறியைக்கூறுவா
மென்றவாறு. ※

[ப-ம்.] ஆத்மாவிற் சிவத்தோடயிக்கிய மலமறைப்பாற் றெரி
யாதிருத்தலினிங்குந் தயரகல நேசித்தோரென்றார், பார்க்கும் வழி
பலவென்றது பேதம் அபேதம் பேதாபேதங்களாய்க் கூறுநெறிகள்
அநுபவரகசியமெல்லா மறைபாமற் கூறினமையாற் வைமறித்தவா
றென்றார்- ஆன்மாக்கெடாது அதனதுபோதங்கெடுதலின்மாளாவொ
ழிவிலென்றார் - அவ்விடஞ்சுகாதீதம், அதனுளொடுங்குநெறி யிதனு
ட்கூறினமையால் ஒழிவிலொடுக்க முறைப்போமென்றார். (௰௨)

(அ-கை.) நூற்பெயர் கூறுதல்.

சுருதிகுருவாக்குச்சுவானுபவமூன்றுஞ் ............※
சரியொத்தபோதமுனைச்சார்வைத்-தெரிய...............※
வுணர்த்தநூற்பேர்கேளொழிவிலொடுக்கம் ............※
விரித்தநூற்கெல்லாம்விதை .......................※

(இ-ள்) (சுருதிகுருவாக்குச்சுவானுபவமூன்றுஞ்- சரியொத்தபோ
தமுனைச்சார்வை ) எ-து; ஞானகுருசாரியரருளிச்செய்த வுபதேசமொ
ழிகளும் இம்மொழிகண்மேல் ஐயம்பிறவா நிவற்றைத் தெளிவிக்கு
ம்வேதாகமங்களும் இவ்விருவகைமொழிகளின கருத்தப்படியே த
ம்முட்டோன்றுஞ் சுவாநுபவமுமாகிய மூவகையுஞ் சரியொத்தவி
டத்திற்றோன்றும் பேரறிவாகிய பதியையு மவற்றானிப்பதியை யறியு
ம்பசுவையும் இப்பதியைப்பசுவிற்கறிய வொட்டாது மறைத்துநின்
றபாசத்தையும் (தெரிய-வுணர்த்தநூற்பேர்கேளொழிவிலொடுக்கம்-
விரித்தநூற்கெல்லாம்விதை ) எ-து. உள்ளபடிவிளங்கக்கூறிய இந்
நூற்பெயரை மாணாக்கனே நீகேட்டி ஒழிவிலொடுக்க மென்பதாம்
இம்முப்பொருளையும் பற்பலவாய் விரித்துக் கூறியநூல்கட்கெல்லா
ம் இதுவேதார்வித்தாமென்றவாறு. ※

[ப-ம்] குருமொழியே யமையுமெனினுந் தீவிரதரபக்குவமின்றியமற்றறையமூவர்க்கும் அதன்மேலையம்பிறக்குமாகலின் சுருதியே வண்டிற்று: குருவுஞ் சுருதியுமுண்டாய்ச் சுவானுபவமின்றாயின தபரஞானமடைமுறாகலின் இம்மூன்றுஞ் சரியொத்தபோதமென்றார். இக்குறிப்பால் இந்நூலுமிம்மூன்றுமொத்துக்கூறியதென்பதாயிற்று. முப்பொருளினதிலக்கண விரிவையெல்லாஞ்சுருக்கித் தற்போதவொழிவிற்குபாயமேவிரித்துக் கூறலானும் போதவொழிவியலானுமொடுக்கிப் போதவிரிவியாவும்விரிதலானும் இதனைவிரித்தநூற்கெல்லாம் விதையென்றார். (௰௩)

(அ-கை) இந்நூலுபதேசகலையென்றறிவித்தல்.

தந்த்ரகலைமந்த்ரகலைசார்பழுந்தச்சாற்றுமது ......*
மந்த்ரசரிதாதிமார்க்கமிது - முந்தைத் ...............*
தபதிவிரத்தியனாச்சார்பழியச்சாற்று .............*
முபதேசமென்றேயுணர் .........................*

(இ-ள்) (தந்த்ரகலைமந்த்ரகலை சார்பழுந்தச்சாற்றுமது - மந்த்ரசரிதாதிமார்க்கம்) எ-து. குண்டமண்டலவேதிகாதிகளைக்கூறுந்தந்திரகலைகளுங் கிரியைகட்குரித்தாகிய மந்திரங்களைக்கூறு மந்திரகலைகளும் ஆன்மாவை மேன்மேலு மலச்சார்போடழுந்தக்கூறும் அக்கலைகள் மந்திரதந்திரக் கிரியாபாவனைகளாற்செய்யுஞ் சரிதை கிரியா யோகநெறிகளாகும் (இதுமுந்தைத்- தபதிவிரத்தியனாச் சார்பழியச் சாற்று - முபதேசமென்றேயுணர்) எ-து. இந்நூல் முற்பவங்களினிஷ்காமியதவம்பண்ணின தபோதனர்க்கும் அத்தவத்தானுட்பற்றறுதியுடையோர்க்கு மலச்சார்பறும்படிகூறும் ஞானோபதேசமென்று நீயறியென்றவாறு. *

[ப-ம்] அக்கலைகளாற்போதவிரிவேயன்றி யொழிவின்மையாற்சார்டழுந்தச்சாற்றுமென்றார், இதுதபதிவிரத்தியனாச் சார்பழியச் சாற்றுமென்றமையான் மற்றையவர்க்காகாதென்பதாயிற்று. (௰௪)

(அ-கை) இந்நூற்கதிகாரியிலக்கணமறிவித்தல்.

உடற்குயிர்போற்கட்கிமைபோலுஞ்சிறாலொத்து...*
விடற்புலிதீப்பாம்பினில்வீழ்வார்க்காஞ்- சுடர்ச்சுடிலும்.
வாழைக்காகாதே திமட்கலத்துச்சாகாவா .............*
றேழைக்காகாதறிது.............................*

(இ-ள்) (உடற்குயிர்போற்கட்கிமைபோலுஞ்சிறாலொத்து - விடற்புலிதீப்பாய்பிலில்வீழ்வார்க்காம்) எ-து. உடம்பை யுயி ரபிமானித்

தல்போலுங் கண்ணிமையானது காத்தல்போலு மூசிசென்ற விடந்தோறுஞ் சரடுபின்சேறல்போலும் ஞானசாரியனைப் பிரியாதுநின்று அவர்திருமேனியை அபிமானித்தும்பாதுகாத்தும் அவர்திருவுள்ளக்குறிப்பின்படியே சென்று வழிபட்டு அவர்பார்த்துப் புலிதீபாம் பாதிகளிற்செலுத்தினும்பின்னிடையாதவை மேல்விழும் அதிபக்குவர்க்கேயிந்நூல் கொடுக்கலாகும் (சுடர்ச்சுடினும் வாழைக்காகாவேதி மட்கலத்துக்காகாவாறேழைக்காகாதிது) எ-து,மிகுந்தஅக்கினியாற்சுடினும் வாழைத்தண்டைச் சுடக்கூடாதவாறும்போலும் பரிசனவேதியை மட்கலத்திற்பரிசித்துப் பொன்னுக்கக்கூடாத வாறுபோலும் அங்ஙனமாசாரியனை வழிபடமாட்டாத அபக்குவர்க் கிந்நூல் கொடுப்பினும் அனுபவஞ்சித்தியாதென்றவாறு. *

[ப-ம்.] உயிரானது உடம்பைத் தானாயபிமானித்துத் தன்பசிதுன்பத்தலொப்பனை செய்தன்முதலிய வுபசாரங்களை யதற்குச்செய்வதுபோலும் அவர்திருமேனியைத் தன்தேகமா யபிமானித்துச் செய்யவேண்டு முபசாரமெல்லாஞ் செய்யவேண்டு மாகலின் உடற்குயிர்ப்போலென்றும்,இமையானது கண்ணைவிட்டுநீங்காதிருந்து அதன்கட்டுரும்பாதிவந்து சார்வதற்குமுன்னேநின்று பாதுகாக்கவேண்டு மாகலிற்கட்கிமைபோலென்றுங்கூறினர் - தேகாபிமானம்விட்டு அவரைமெய்ப்பொருளாய்க் கருதினவனாகலிற் புலிபாதிகண் மேற்செலுத்தினும் வீழ்வானென்பதாயிற்று. அக்கினிக்கும் பரிசனவேதிக்கும்விறகைச்சுடுதற்கு மூலோகங்களைப் பொன்னாக்குதற்குங் கூடுமேயன்றி வாழைத்தண்டையுமட்கலத்தையும் அங்ஙனஞ்செய்யக் கூடாததுபோல் இந்நூலாற்பக்குவர்க்கு ஞானம்விளங்குமேயன்றி யபக்குவர்க்கு விளங்காதென்றதிக. (௰௫)

(அ.கை.) இந்நூல்கேட்டுமிலக்கணங்கூறுதல்.

ஆயிங்கனத்திலேயைந்திணையுப்பாடுவோன்........*
மாலின்பவாரிமறிதிரைபோற்-காலப்பூக் ..............*
கிண்கிணிவாய்ச்செய்ததுபோற் கின்னரிப்பாட்டில்லாசங்
கொண்டவர்போற்கண்டவர்க்காகும்................*

(இ-ள்.) (ஆயிங்கனத்திலே யைந்திணையும்பாடுவோன் - மாலின்பவாரிமறிதிரைபோல்) எ-து,மாதர்கூட்டரவிற்செய்யுமைவகையாலிங்ஙனத்தான்வரு மின்பமைந்திணையும் அனுபவித் ததிற் றொருவன்கூறும்பாட்டினைப் பாடுமோர்விடன் இக்கவி யருத்தத்தா னுய்வினிப்பெற்றான் போன்றுளத்தின் கண்ணம்மபக்கவின்பவாரியெழுந்து

அலை மறிவதுபோலும் (காலப்பூக்கிண்கிணிவாய்ச் செய்ததுபோல்) எ-து. உதயகாலத்துத் தாமரையரும்பு கிண்கிணிவாய்ச் செய்தலர்ந்தாற்போன்முகமலர்ச்சியோடும் (கின்னரிப்பாட்டில்லாசங்கொண்டவர்போற்கண்டவர்க்காகும்) எ-து. மற்றொன்றினையுங் கேளாதொருவன்பாடுங் கின்னரிப்பாட்டோசையையுல்லாசமாயுட்கொண்டவர்போலும் இந்நூலைக்கேட்டறிந்தோர்க்கே ஞானந்தமுளதாமென்றவாறு. *

[ப-ம்] ஐந்திணையும்பாடுவோன் அந்நூலைப்பார்ந்தோறும் அவ்வின்பம்பெற்றான் போன்முளத்தின்ப மேன்மேலெழுதலின் மறிநீர்போலென்றார். அவனைப்போல் இந்நூலைக்கேட்குந்தோறுமிவனுக்குஞ்சிவானந்தம்பெற்றான் போன்முளத்தின்மேன்மேற் சந்தோடந்தோன்றவேண்டுமாகலினு முகமலர்ச்சியோடு மற்றொன்றைப்புகழ்களாதிதனையே கேட்கவேண்டுமாகலினுங் காலப்பூக் கிண்கிணிவாய்ச்செய்ததுபோலென்றுங் கின்னரிப்பாட்டில்லாசங் கொண்டவர்போலென்றும் இங்ஙனமூவமைகூறினார். ஆலிங்கனபரிசபேதத்தாற் சுகமுமைந்துபதப்பட்டதெனக்கொள்க. அஃதைந்தென்ப தாலிங்கனம் ஐந்தும் அதரபானம் பதினொன்றுமென்னுங்காமநூலிற்காண்க

(அ-கை) இவைகளிங்ஙனமிருப்ப யாமெங்ஙனம்அவையடக்கங்கூறுமாறென்று குறிப்பானவையடக்கங்கூறுதல்.

வணங்காவுரைக்கு வணக்கமிலைத்தீங்கை ............*
வணங்கிவாழ்த்தென்னில்வளமியா - வணங்குகினு... ...*
மெல்லார்க்குநன்றுயிருப்பதிலையாதொன்று .........*
மெல்லார்க்கும்பொல்லாதிலை........................*

(இ-ள்) (வணங்காவுரைக்குவணக்கமிலைத்தீங்கை - வணங்கிவாழ்த்தென்னில்வளமியா) எ-து. போதமடங்காதவமாப்பாற்கூறு நூலுக்கடக்கமேயில்லை, தீமைகளைச்செறித்தோர் நூலாக்கி அதற்கடக்கங்கூறி யிதனையிகழாது புகழுங்கோளென்னின் அதனான்வரு நன்மையாதொன்றுமில்லை (வணங்குகினு - மெல்லார்க்குநன்று யிருப்பதிலையாதொன்று - மெல்லார்க்கும்பொல்லாதிலை). எ-து. நன்மைகளைச்செறித்தோர் நூலாக்கியதற்கடக்கங்கூறினு மியாவர்க்கு நன்மையாயிருப்பதிலை, இவைகளன்றி மற்றியாதோர் நூலாயினு மியாவர்க்கும் பொல்லாங்காயிருப்பது மில்லையென்றவாறு. *

[ப-ம்] அடங்காவுரை யெனவே அவனடக்கங்கூறினு மடக்கமின்றென்பதாயிற்று, தீங்கினைச்செறித்தடக்கங்கூறிப் புகழச் சொன்னமையான் வருநன்மையொன்றுமின்றாயிற்று, நன்மைகளியாவுஞ் செறித்தடக்கங்கூறினும் பொறுமைமுதலியவற்றாற் சிலரா லிகழப்படுதலின் எல்லார்க்குநன்றா யிருப்பதில்லையென்றும், பயனின்றாய்க்கூறு மியாதோர் நூலாயினுஞ் சிலரங்கீகரித்தலின் எல்லார்க்கும் பொல்லாதில்லையென்றுங்கூறினர். தீமை நன்மைகளை முற்கூறினமையான் யாதொன்றுமெய்ப தினைகட்குப் பொதுவாயிருந்த வுலககதைகளைக்கூறுநூலெனக்கொள்க. உரையென்பதுந்தீங்கென்பதுமாகுபெயர் தீங்கென்றமையா னன்மையென்பது வருவிக்கப்பட்டது. வணக்கமடக்கம்-வளமியாவென்பதிரக்குறுக்கமாகலின் றளைதட்டாதென்பதுங்காண்க. (௰௭)

(அ-கை) சத்தத்திற்குப் பஞ்சநிகாரவழுவுண்டாயினும் அருத்தமெல்லா நூல்களினதருத்தங்கட்கு முடிவென்று கூறுதல்.

அறைந்தபறைதுழற்குமாடினர்க்குமேற்க........*
மறந்தழுவார்வாய்ப்பாட்டோவாரா - திறங்கேளிர்.........*
கூடக்கனாவதல்லாற்கூறிற்பயனில்லாப் .............. *
பாடற்கார்பார்ப்பார்பயன் ..................................*

(இ-ள்) (அறைந்தப்பறைதுழற்குமாடினர்க்குமேற்க- மறந்தழுவார்வாய்ப்பாட்டோவாரா) எ-து. கரத்தாலறையப்பட்ட மத்தளத் தொனிக்கும் இத்தொனிக்கேற்ப வூதுங்குழலோசைக்கும் இவைகட்கேற் பநடனமிடுவோர்க்கு மேற்பத்தன்னைமறந்தழுமகளிரது அவ்வழுகையாகிய வாய்ப்பாட்டொத்துவாராது அதுபோலும் இந்நூற்றற்போதமிழற்றுநின்று கூறியதாகலின் எழுத்துமுதலிய வைந்திலக்கணங்களோடொத்துவாராது அங்ஙனமாயினும் அதன்கட்கூறியபொருட்டானங்ஙளம்வாவெனின் (திறங்கேளிர் - கூடக்கனாவதல்லாற்கூறிற்பயனில்லாப் - பாடற்கார்பார்ப்பார்பயன்) எ-து. இந்நூலின்பொருட்டிறமையை நீர்கேட்பீராக அஃதெங்ஙனமெனின் இப்பொருளைக் கேட்போர் இப்பொருளோடுங்கூடத் தாமுங் கனாத்துபோவதேயன்றிச் சொல்லுமிடத்துத் தாமுந் தமக்குவரும் இம்மைப்பயன்களுமில்லாதபாடற் றியாவ ரருத்தம்பார்ப்பாரொன்றவாறு. *

[ப-ம்] தாளமுமோசையுஞ் சரியொத்தநடனத்திற்குத்தன்ப மேலிட்டாற் றம்மைமறந்ததன்மையமாயிருந்தழுவார் அழுமோசை

யவற்ரூெடொவ்வாததுபோல இன்பமேலிட்டாற் றம்மைமறந்து இதன்மயமாயிருந்துகூறிய இப்பாட லிலக்கணத்தோடொவ்வாதெ ன்பது குறிப்பா னறியும்படிகூறினர். இதனகருத்தம் போதவொழி வுஞ்சிவானந்தப்பேறுமாகலினும் இதனைக்கேட்ட அதிபக்குவ ரக்க ணமே போதமிழந் தானந்தமயமாவராகலினுங் கூடக் கூவதென் றும், பயன்பெறும் போதமொழிவதனுற் பயனில்லாப்பாடலென்று ங்கூறினர். (௰அ)

(அ-கை) மெய்ப்பொருளையறிதற்குபாயங்கூறுதல்.

போதவொழிவையுணாபோய்த்திண்டாப்பூதலத்தோர்...*
பாதமனங்கண்போலப்பற்றுமோ - நீதெளியிற் ..............*
கண்ணாடியிற்கடலைக்கைவசமாக்காட்டுவபோற்.. ............*
கண்ணுரிசன்னையைப்போற்காண் ...............................*

(இ-ள்) (போதவொழிவையுணாபோய்த்திண்டாப்பூதலத்தோர் - பாத மனங்கண்போலப்பற்றுமோ) எ-து, ஆத்மபோதவொழிவிற் முனு யிருந்துள்ள சிவத்தைவேதாகம சாத்திரங்களால் அளவிட் டறியக்கூ டாது அஃதன்றிக்காலானடந்துசென்றுமனத்தாணினைத்துங்கண்ணாற் பார்த்தும் இப்பூதலத்தோர் ஓரோர்பொருளையறிந்துபிடிப்பதுபோ ற்கருவிகளாலும் அதனையறிந்து பிடிக்கக்கூடாதாகலின் அங்ஙனமறி ந்து பற்றுவதன்றி (நீதெளியிற்-கண்ணாடியிற்கடலைக் கைவசமாக்கா ட்டுவபோற் - கண்ணுரிசன்னையைப்போற்காண்) எ-து. நீ யச்சிவத் தையறியுமிடத்துச் சிறிதாகியகண்ணாடியிற் பெரிதாகியகடலை மகவு க்குப் பிரத்தியக்கமாகக் காட்டுமாறுபோலும் ஓர் நாரியோர் புருட னுக்குக் கட்சைகையாற் கலவிக்கிடங்காட்டுமாறுபோலும் யாம் அத னையறிவிக்குங்குறிப்பா னியதிநியென்றவாறு. *

[ப-ம்] போதவொழிவாகலின் அப்போதத்தானறியுங்கலைகளா னுங் கருவிகளானுமறியக்கூடாதாகலின் உணாபோய்த்திண்டாவென் றும், பாதமனங்கண்போலப் பற்றுமோவென்றுங் கூறினர். பரிபூர ணசிவத்தினிலக்கணமெல்லா நன்றுய்விளங்கும்படி வேதாகமமுடி விற்கூறிய சிலவுபதேசமொழிகளையெடுத்து இந்நூலுட்கூறுதலிற்- கண்ணாடியிற்கடலைக்கைவசமாக் காட்டுவபோலென்றும், பூரணநோ க்க மவுனமுத்திரைமுதலிய குறிப்பா னச்சிவத்தையடைதற் குபாய மறிவித்தலாற் - கண்ணுரிசன்னையைப்போலென்றுங்கூறினர். (௰௯)

(அ-கை) இதுவுமது.

ஆனைக்கைபோலபினவத்துவிதானந்தமா ..........*
மோனத்தைவாக்குமனமூட்டுமோ - ஞானத்தாற்......*
காக்கையிருந்தமனைகைமேற்பிறையென்ற ............*
லாற்கருதினீசிவமாவை ................................*

(இ-ள்)(ஆனைக்கைபோலபினவத்துவிதானந்தமா-மோனத்தைவாக்குமனமூட்டுமோ) எ-து. பரிசமறியுங்கையுங் கெந்தமறியுநாசியும் ஒன்றுபிருக்கின்ற யானையினது துதிக்கைபோன்று பின்னமின்றிச் சிவமுமான்மாவு மிரண்டற்றிருந்த அத்துவிதமாகிய மோனானந்தத்தை வாக்காற்கூறுங்கலைகளு மனோபாவனைகளுந்தீண்டுமோ (காக்கையிருந்தமனைகைமேற்பிறையென்ற-லான்ஞானத்தாற்கருதினீசிவமாவை) எ-து- ஓர்மனையையும் பிறையையும் ஒருவற்கொருவனறிவிக்குங்கால் காக்கையிருந்தமனையென்றுங் கைவிரன்மேற் பிறையென்றும் இங்ஙனமறிவித்தலான் அவனறிவதுபோலு மியாஞ்சிவத்தைக் குறிப்பானறிவிக்கு முபதேசங்களை ஞானத்தாற்கூர்ந்து விசாரித்தறிதியெனினீயுமச்சிவமாவை யென்றவாறு. *

[ப-ம்.] கைநாசியென்றிரண்டுறுப்பா யிரண்டுவிடயங்களையும் வேறுபிரித்தறிவதாயிருந்தும் பிரிபடாது அதுவேயிதுவாயிதுவே யதுவா யிருப்பதுபோற் சிவமென்றும் ஆத்மாவென்று மிரண்டு பொருளா யிரண்டுஞானங்களும் வேறாயிருந்து மயிக்கத்துப்பிரிபடாது அதுவேயிதுவா யிதுவேயதுவாயிருத்தலி னியானைக்கைபோலபினவத்துவிதமென்றார். மனைகள்பலவற்றையுங் கடந்துசென்று காக்கையிருந்த மனையை நீயடைதியென்றொருவனறிவிக்க அறிதல் போற்கருவிகள் பலவற்றையுங் கடந்துசென்று நாததத்துவத்தின் முடிவினின்ற சைதன்னியநீ யென்றறிவிக்கவறிதலாற் காக்கையிருந்தமனையென்றும், ஒருவற்கொருவன் பிறையையறிவிக்குங்கால்விரன்மேற்பிறையென்று சுட்டிக்காட்டியறிவிக்க அவ்விரனேரே நோக்கியப்பிறையைத் தெரிசித்தல்போல நாதாந்தத்தின் முடிவினின்றநீதிருவருளை முன்னிட்டுக் கொண்டு சிவத்தைத்தெரிசிக்க வேண்டுமென்றறிவிக்க அம்முறையேசென்று சிவத்தைத்தெரிசித்தலாற்கைமேற்பிறையென்றுங்கூறினார், கலைபோலுமான்மா - விரல்போலுந்திருவருள்-பிறைபோலுஞ் சிவமெனக்கொள்க. (௨௰)

(அ-வை) தருக்கவாதிகள் துற்குணமும் அவரது மொழிகளைக் கேட்கலாகாதென்பதும் அறிவித்தல்.

மூலையுண்ணிநீருண்ணுமோட்டெருமைமூடர்..... *
சலமின்றிச்சந்துரைப்பார்தற்கர் - பலதாரை ........*
வட்டிலேபோலுமவர்மாயோகவாசகத்தைக்...........*
கிட்டினரகங்கிடீர்..............................*

(இ-ள்) (மூலையுண்ணிநீருண்ணுமோட்டெருமைமூடர்-சலமின்றி
ச்சந்துரைப்பார்தற்கர்) எ-து. பசுவினதுவிம்மிச்சுரந்த மூலையிற்க
டித்தவுண்ணிபோலுந் தடாகத்தினீரருந்து மூழ்ந்த வெருமைபோ
லும் அறிவேதுமின்றிய மூடர்போலும் நீரின்றிச் சந்தமுரைப்பா
ர்போலுமாவார் தருக்காயினோர் (பலதாரை- வட்டிலேபோலுமவர்
மாயோகவாசகத்தைக்-கிட்டினரகங்கிடீர்) எ-று. பன்முலைவட்டிலைப்
போலும் பலபடக்கூறுகின்ற அவரது மாயைக்கூட்டரவாகியமொழி
களைக்கேட்பினு நிரயமென்றறிவீரொன்றவாறு. *

[ப-ம்] மூலையுண்ணிப்பாலுண்ணவறியாது உதிரமருந்தல்போ
ன்றலாற் சிவானந்தப்பேறடையா திம்மைப்பயங்கோடலான் மூலையு
ண்ணியென்றுந், தடாகத்திற்றன்தாகத்திற்கு நீரருந்தாததனுள்வீழ்
ந்து சேறுக்கிச்செல்லுமெருமைபோன் ஞானிகள்பாற்சேறினும் அ
வர்கூறுஞானமொழிகளைக்கொள்ளாது தருக்கமாடி அவர்சித்தத்தை
க்கலக்கிச்சேறலானெருமையென்றும், மூடரியாவதோருநன்குகூறினு
ந்தாம்பிடித்தபிடிவிடாது நிற்றல்போலத் தீதாயினுந் தருக்கவலியா
ற்றும்பிடித்தபிடியை முற்றுஞ்சாதித்தலின் மூடரென்றுஞ், சலமின்
றிச் சந்துரைப்போர்க்குக் கைவருத்தமேயன்றிப் பயனின்றாயது
போல் இவர்பலரோடுந் தருக்கமாடலான் வருதல்வாய்வருத்தமேயன்
றிப் பயன்வேறின்றாகலிற் சலமின்றிச்சந்துரைப்பாரென்றும், பலதா
ரைவட்டிலினீர்தாரைகளோடுஞ் சேறல்போலோர் நெறிகூறுங்கால
தனை முற்றுப்பெறக்கூறாது பன்னெறியாய் மலைவுபிறக்கக்கூறலிற்ப
லதாரைவட்டிலென்றுந், திருவருட்போதமன்றி மாயாம்பாதத்தாற்கூ
றலின் மாயோகவாசகமென்றுங்கூறினார். *

இதனாற்கல்வியுடையோரேனும் பிரவஞ்சிகளினுங் கேடென்ப
தாயிற்று. கல்வி பொருளென்னு மிரண்டுசெல்வங்களு நல்லோர்பா
ல்வரினன்மையுந் தீயோர்பால்வரிற் றீமையுமேன்மேல்வளர்தலி னிவ
ர்தீயரென்பதாயிற்று. இவரதுமொழிகளை யுண்மையாகக்கொள்வோ
ர்க்குந் தீதுவருமாகலிற் கிட்டினரகமென்றார். (உக)

(அ-ஙச) பக்குவவிலக்கணங்கூறுதல்.

குன்றழலினொந்துநீர்தேடுங்குருடனைப்போற் .....*
கன்றுபசுவைப்பார்க்குங்காலம்போ-லொன்றின்றில் *
வேட்டவதிமோகிவிடையப்போற்சற்குருவைத்.........*
தேட்டமதிபக்குவமாய்த்தேர் .........................*

(இ-ள்) (குன்றழலினொந்துநீர்தேடுங்குருடனைப்போற் கன்றுபசுவைப்பார்க்குங்காலம்போ - லொன்றின்றில் - வேட்டவதிமோகிவிடையம்போல்) எ-து. முதிர்வேனிற்காலத்து மலைக்கட்படுந்தீவெப்பத்தான்மெய்வருந்தி நீரெங்குளதென்று தேடுமந்தகனைப்போலும், ஆவின்கன்றுதன்தாயைத்தேடுங்காலம்போலும், விடையங்கள்பலவற்றுள்ளும் ஓரோர்விடையத்தை நச்சியிருந்த அந்த விடையமோகிபோலுஞ் (சற்குருவைத்- தேட்டமதிபக்குவமாய்த்தேர்) எ-து. ஞானாசாரியனெங்குளனென்றுதேடுந் தேட்டமே யதிதீவிரபக்குவமென்றறிதியென்றவாறு. *

[ப-ம்] அழலினொந்தகுருடர் வெப்பத்துன்பந் தணிப்பானீர் தெரியாது தேடுமாறு மிகுந்த பக்குவர்க்குப் பிறவித்துன்பமாய்த் தோற்றலின் இத்துன்பந்துடைப்பானாசாரியனைத் தெரியாது தேடலினீர் தேடுங்குருடனொன்றும், கன்றுகாலைமாலையாகிய காலத்துத்தன் தாயை மிகுந்தவன்போடுந்தேடல்போன் முற்காலம்போலன்றி இக்காலத்திற் பிரவஞ்சம்பொய்யாய்த்தோற்றி மிகுந்தவன்போடு ஞானாசாரியனைத்தேடலிற் கன்று பசுவைப்பார்க்குங் காலமென்றும், ஓர்விடையத்தை நச்சியவதிமோகி யதனான்வருமின்பத்தைக் கருதிக்கருதியவ்விடையமென்றுகிடைக்குமோவென்றதனையேதேடல்போற் பேரின்பத்தைக்கருதிக்கருதி இதனைக்கொடுக்கு ஞானாசாரியனையென்றைக்கடைவோமென்று அவனையே தேடலா னதிமோகிவிடையம்போலென்றுங்கூறினார் விடையமோகிபோலென்றுங்கூட்டுக. (உஉ)

(அ-ஙட) பதியொன்றுளதென்றறிவித்தல்.

பெண்ணாணலியாட்பிறந்துவளர்ந்தேயழியு......*
மெண்ணுதபேதமிபல்லின்றிப் - பண்ணுங்காற்.........*
காரணகர்த்தாவொருவனுண்டவனைக்காட்டுநூ .........*
லாரணமுமாகமமுமாம்..................................*

(இ-ள்) (பெண்ணாணலியாப்பிறந்துவளர்ந்தேயழியு-மெண்ணுதபேதமிபல்லின்றிப் - பண்ணுங்காற்- காரணகர்த்தாவொருவனுண்டு)

எ-று. ஓரியல்பின்றி யனந்தபேதங்களாயும் பெண்வடிவாயும் ஆண்வடிவாயும் இவ்விருவகையுங்கூடிய வலிவடிவாகியுந்தோன்றிநின்றழியப்பட்ட இத்தேகாதிப்பிரவஞ்சத்திற்குத் தற்சுதந்திரமின்மையாற் றானேகாரியப்படமாட்டாதாகலின் இதனை அறுபியிலேபடைத்தற்கு நிமித்தகாரணனாகிய கருத்தனொருத்தனுண்டு அஃதெங்ஙனமெனின், (அவனைக்காட்டு நூ-லாரணமுமாகமமுமாம்) எ-று. அக்கருத்தனையறிவிக்குநூல்கள் வேதாகமங்களாகும் இவற்றானறிந்து கொள்ளுதியென்றவாறு. *

[ப-ம்] காரியங்களுண்டாவதற்குக் காரணம் - முதற்காரணந்-துணைக்காரணம் நிமித்தகாரணமென மூன்றுவகையாயிருக்கும்-இவற்றுண்முதற்காரணம்மண் - துணைக்காரணந் தண்டுசக்கரம் - நிமித்தகாரணங்குலாலன் - நிமித்தகாரணனாகியகுலாலன் முதற்காரணமாகியமண்ணைத் துணைக்காரணமாகிய தண்டுசக்கரங்களைக்கொண்டு கடகலசாதிகாரியங்களை யுண்டாக்குவன் அவைபோற் குலாலன்போலும் நிமித்தகாரணனாகியசிவன் மண்போலும் முதற்காரணமாகியமாயையைத் தண்டுசக்கரம்போலுந் துணைக்காரணமாகிய தனது கிரியாசத்தியாற் றனுகரணபுவனபோகங்களாகிய காரியங்களை யுண்டாக்குவனாகலினுங் கடமாதிகாரியங்களைக்கண்டு இவற்றைக்காரியப்படுத்துங்குலாலன் ஒருவனுளனென்றறிவதுபோலுந் தனுகரணாதிகளைக்கண்டு இவற்றைக் காரியப்படுத்துங்கருத்தா வொருத்தனுளனென் றறிய வேண்டுமாகலினும் பண்ணுங்காற் காரணகத்தாவொருவ னுண்டென்றார். *

மற்றையநூல்களில் இவற்றைப்போலுண்மையா யவனையறிவிக்கமாட்டாதாகலின் அவனைக்காட்டு நூலாரணமு மாகமமுமாமென்றார். பெண்ணுமொன்றும் பன்மைபோலலியையும் பன்மையாகக்கூறினமையாற் பெண்ணாணுக்குரியகுறிகள் இருவகையுமின்றியபுன்முதலியனவும் புழுமுதலியனவுமலியெனக்கொள்க. பண்ணுங்காலென்னுமேழனுருவை நான்கனுருவாகக்கொள்க. *

(இதற்குதாரணம்-சித்தியார்) காரியங்காரணங்கண் முதற்றுணை நிமித்தங்கண்டாம் - பாரின்மண் டிரிகைபண்ணுமவன்முதற்றுணைநிமித்தந்-தேரின்மண்மாயையாகத்திரிகைதன்சத்தியாக-வாரியன்குலாலனாய்நின்றாக்குவனிலமெல்லாம்-என்பதனாற்காண்க. (உரு)

(அ-கை) பதியிலக்கணங்கூறுதல்.

தன்னையறியாதுவேறுண்டாய்த்தானறியா ....... ..*
துன்னிலொழிவாமுத்திப்பேறென்றுமிலைச் சன்னிதிக்கே*

யஞ்சுதொழிலாமதனையானந்தவாக்காலே.. ............*
கிஞ்சளவுங்கட்கனுமாகும்.............................*

(இ-ள்) (தன்னையறியாதுவேறுண்டாய்த்தானறியா-துன்னிலொழி
வாமுதிப்பிரொன்றுமில்லை) எ-து. நீர்கூறியசிவந்தன்னையறிந்துகொ
ண்டிருக்குமோவெனின் மலரகிதமாயிருத்தலின் அது தன்னையறியா
து,மற்றோர்பொருளைத்தானறிந்துகொண்டிருக்குமோவெனிற்றன
துபரிபூரணத்திற்சகலமுமடங்கியிருக்குமாகலிற் றனக்குவேறாயோ
ர்பொருளுண்டாய் அதனையறியாது, நினைவோடு தான்கூடியிருக்கு
மோவெனின் நினைப்புண்டெனின் மறப்புமுண்டாகலின் அதுநினைப்
புமறப்புமின்றிபநிருவிகாரி - அது தானோர்காலத்துண்டாயதோவெ
னின் உற்பத்தியுண்டெனின் நாசமுமுண்டு அஃதன்றிநித்தியமாகலி
ன் உற்பத்திநாசங்க ளொன்றுமில்லை - இங்ஙனமலரகிதமாய்ப் பரிபூ
ரணமாய் நிருவிகாரியாயன்றி நித்தியமாயிருந்துள்ள அச்சிவமெங்ங
னம் மாயையைக்காரியப்படுத்துமெனின் (சன்னிதிக்கே - யஞ்சுதொ
ழிலாமதனையானந்தவாக்காலே - கிஞ்சளவுங்கட்கனுமாகும்) எ - து.
அச்சிவத்தின் சந்நிதிக்கண்ணே பஞ்சகிருத்தியங்களுளவாம் அக்கிரு
த்தியத்தை யான்மாக்கண்மேல்வைத்த காருண்ணியத்தான்மவுனாந்
தந்ததும்பியது கூறுமானந்தவாக்காற் கிஞ்சளவுங்கேட்டதுமாகுமெ
ன்றவாறு. ※

[ப-ம்] சூரியனிச்சாயெத்தனமின்றியிருக்கவுஞ் அவன் சந்நிதியி
லொன்றுமுகைபாயுமொன்றலர்ந்துமொன்றுலர்ந்தும் தாமரைதொ
ழிற்படல்போற் சிவசந்நிதானத்திலே மாயையிற்சிருட்டியாதிதோற்
றலாற் சந்நிதிக்கேயஞ்சுதொழிலாமென்றார், ஆனந்தவாக்கு வேதா
கமங்கள், கிஞ்சளவுங்கேட்கனுமாகுமென்றமையாற் பஞ்சகிருத்தியத்
தின்பெருமையை யளவிடக்கூடாதென்பதாயிற்று. (௨௬)

(அ-கை) இதுவுமது.

உதியாதுளதாகியோங்கிப்போம ....................*
லிருக்குமங்குறைந்தாகாமற் - பதையாத ............*
வாகாயமுங்காலும்போலவசைவற்ற.......................*
தேகாண்பரிபூரணம்.....................................*

(இ-ள்) (உதியாதுளதாகி யோங்கிப்போம - லிருக்குமங்குறை
ந்தாகாமல்) எ - து. தானொன்றிலுற்பத்தியாகா தெக்காலமு முள்ள
தாய்க் கருவிகண்முப்பத்தாறையுங் கடந்திருப்பதாய்ப் போக்குவர

வற்றதாய் நண்ணியபொருள்கட்கெல்லாம் நண்ணிதாயோர்காலத்திற்குறைந்தோர் காலத்துவளராததாய் (பதையாத-வாகாயமுங்காலும்போலவசைவற்ற-தேகாண்பரிபூரணம்) எ-து. முடிவுகாலத்திற்சலனமின்றாய்வாய்வும் ஆகாசமும் பிறிவற்றென்றாயிருப்பதுபோற்சடசித்துக்களாயுள்ள பிரவஞ்சமுந் தானும்பிறிபடாதொன்றா யசைவற்றிருப்பதே அச்சிவத்தினது பரிபூரணசொரூபமென்றவாறு. ※

[ப-ம்] தனுவாதிகளை மாயையிற்றோற்றுவிப்பதும் ஆன்மாக்களையவற்றுட்கூட்டுவிப்பதும் அஃதாகலினும் அதற்குமேன் மற்றொன்றின்மையானும் உதியாதுளதாகியென்றும், அசலமாகலிற்பராமலென்றும், இயாவைக்குந்தாரகமாயுட்புறம்பாயிருந்து மொன்றோடுந்தாக்கற்றிருத்தலினதி சூக்குமமென்றும், அகண்டாகாரமாயிருத்தலிற்குறைந்தாகாமலென்றும், ஆகாயத்தில் வாய்வுசரிக்கும்போது அவ்வாகாயத்தையும் வாயுவையும் இவ்வாய்வுக்கட்டோன்றுந் தீதளாதிணமுதலியவற்றையும்பிரித்துக்காணப்படும். அவற்றினடுநிச்சவாய்வுஅவ்வாகாயத்தி லசைவறநிற்பின் முற்றோற்றிய பகுப்புக்களின்றியவ்வாகாயந் தானுயிருக்கும் அவைபோலும்பெத்தகாலத்து முப்பொருட்கு நடுநின்றவான்மபோதஞ் சீவிக்குமிடத்துச் சிவமென்றும்பசுவென்றும் பாசமென்றும் பிறித்தறியப்படும். முத்திகாலத்து அவ்வான்மபோதஞ் சீவியாது சிவத்துளடங்கின் முற்றோற்றிய பகுப்புகளொன்றுந்தோன்றாது சிவந்தானுயிருக்குமாகலின் ஆகாயமுங்காலும்போல அசைவற்றதேகாண் டரிபூரணமென்றுங் கூறினர்()

(அ-கை) பதியானது சட்சித்துக்கெல்லா மிடங்கொடுத்துக்கொண்டு எல்லாந்தானு யிருக்குமென்றீரானல் அட்டமூர்த்தமுதலிய வடிவங்களும் அத்திருமேனிகளை வழிபடுவோர்க்கு அது கொடுக்கும்பயன் முதலியவும் யாவையெனின் பதியினதருட்சத்தி யிலக்கணங்கூறுதல்.

எட்டுருவுமைந்தொழிலுமிச்சைவடிவும்பயனுந்... ※
சுட்டரியபூரணமுஞ்சுட்டுதலு -நிட்டைகளு.......... ※
முன்னிழப்பிலின்பமுதித்தொடுங்குமொன்றிரண்டுந் ※
தன்னருட்கேயாமத்தனே ................................※

(இ-ள்.) (எட்டுருவு மைந்தொழிலு மிச்சைவடிவும்பயனுஞ் - சுட்டரிய பூரணமுஞ் சுட்டுதலும்) எ-து, பிரவஞ்சமெல்லாம் ஓர்பது

வாய்க்கொண்டருளிய அட்டமூர்த்தமும் ரூபாரூபமாகிய சதாசிவ ஞ்செய்யு மைந்தொழில்களுந் தமதுசுதந்தர விச்சையாந் திருமே னிகொண்ட வுருவமாகிய மயேசுரவடிவும் இவ்வடிவுகளை வழிபடுவோ ர்க்கு இவராற்கொடுக்கும் பதப்பிரயோசனங்களும் இவ்வடிவங்க ளெல்லாங்கடந்து ஆன்மபோதத்தாற்சுட்டி யறிதற்கரிய அருபமா கிய பரிபூரணசொரூபமுஞ் சுட்டியறியும்படி யெழுந்தருளிவந்தகு ருவடிவும் (நிட்டைக்கு - மூன்னிழப்பிலின்பமுறித்தொடங்குமொ ன்றிரண்டிந்-தன்னருட்கையாமத்தனே) எ-து, வீடடையுநெறியாகக் கூறிய வுபாயநிட்டைகளிற் றோற்றுவனவும் உனது போதவொழிவி லானந்தந்தோற்ற அதனையறிந் ததனுளதீதப்படும் அத்துவிதமென் பதும் இங்ஙனம் அதீதப்படுவதன்முற்றோற்றுந் துவிதமென்பது மாகிய இவையத்தனையும் அச்சிவத்தினதருட்சத்தியா லுண்டாமென் றவாறு. எட்டுருவென்றது பஞ்சபூதங்களுஞ் சந்திரசூரியருமான்மா வுமெனக்கொள்க. (உ௬)

(அ-கை) முத்தியினு மும்முதலும் பிரிவற்றிருக்கு மென்றறிவித்தல்.

உனையுணர்த்திற்பாசமுதவியுடையோன் ............*
றனையுணர்த்தினீயேதலமாங் - கனலை ..................*
விறகிடமாய்க்காணிலதன்வெம்மையைவேறுக்கி ......*
யறியகிலாப்போலதுநீயாம் ..................................*

(இ-ள்.) (உனையுணர்த்திற்பாசமுதவியுடையோன் - றனையுணர்த் தினீயேதலமாம்) எ-து, பசுவாகியவுன்னை யறிவிக்குமிடத்து மூன் னையறிவிலே மறைத்து நின்றபாசத்தை யறிவிக்குமிடத்தும் பெத் தமுத்தியென்னு மிரண்டுகாலத்து முயிர்த்துணையா யிருந்து உன க்குபகரிக்கும் பதியை யறிவிக்குமிடத்தும் நீயே மற்றையவிரண் டிற்குமிடமாகும்அஃதெங்ஙனமெனில் (கனலை-விறகிடமாய்க்காணி லதன்வெம்மையைவேறுக்கி - யறியகிலாப்போலதுநீ யாம்) எ-து, அக்கினியைக் காட்டத்தினிடமாய்க் கடைந்துகாணின் அவ்வக்கினி வேறுஉஷ்ணம் வேறாய்ப்பிரித் தறியக்கூடாததுபோலச் சுவானுப வத்தான்மலத்தினைநீங்கி உன்னையுள்ளபடியறியில் நீவேறு சிவம்வே றாய்த்தோற்றாதாகலின் அச்சிவம் நீயாகுமென்றவாறு. *

[ப-ம்.] காட்டத்திலடங்கியிருந்த தீக்கடைந்தபோது தோன் றினாற்போல் முன்மலபெத்தத்தாற் றோற்றாதிருந்த ஆன்மா இப் போது சற்குரு சுவானுபவத்தாற்றோற்றலிற் கனலைவிறகிடமாய்

க்காணிலென்றும் அநித்ரேற்றியபதீயில் உஷ்ணமும் பிரகாசமுமி ருத்தல்போற் றன்னையுள்ளபடி கண்ட ஆன்மாவினிடத் தானந்தமும் அவ்வானந்தமேன்மேல் விளைவது மிருத்தலின் அதன்வெம்மை யைவேருக்கி யறியசிலாப்போலென்று மிரண்டிற்கு நீய தலமெ ன்றங்கூறினர். அக்கினியைப்போற்பசு - ருடுபோற்சிவம் - பிரகாச ம்போற்பாசமெனவறிக, ஆனந்தஞ்சிவம் ஆனந்தத்தை யனுபவிப்ப தான்மா ஆனந்தத்தைவிளைவிப்பது மலமெனவறிக, தத்துவமசிவா க்கியார்த்தமும் இங்ஙனங்காண்கவென்று அதுநியா மென்றார் (உஎ)

(அ-கை.) ஆன்மாச் சார்போதனென்பது மிச்சார்போதத்தாற் றுன்பமேயன்றி யின்பமின்றென்பதுமறிவித்தல்.

விடாதவத்தைமூடிவிடம்புசித்தாற்போலச்........*
செடாதிகளுஞ்சேதனனுஞ்சேர்ந்து - படாதுபடு.......*
மச்சைக்கழற்றிலருள்வழிநீயவ்வழியுன் ............ ...*
னிச்சைப்பொருண்மலமென்றெண்..................*

(இ - ள்.) (விடாதவத்தைமூடிச் செடாதிகளுஞ் சேதனனுஞ்சேர் ந்து விடம்புசித்தாற் போலப் படாதுபடும்) எ- து, அனுவளவேனு மிடைவிடாதவத்தைக் கண்மூட அவ்வவத்தைகடோறும் வேறுவே ருயிருந்துள்ள வுடம்பு முதலிய கருவிகளும் ஆன்மாவுங் கலந்துவி டமருந்தினாற்போற் படாததுன்பங்களெல்லாம் படுமாகலின் இங்ங னமென்றறிந்து (அச்சைக்கழற்றிலருள் வழிநீயவ்வழியுன் னிச்சைப் பொருண்மலமென்றெண்) எ-து, அந்த அவத்தைகளாகிய வுடம்புக ளை நீக்குதியெனின் நீயருளிடமாவை அவ்வவத்தைகளிட முன்னுவி ச்சிக்கப்பட்ட பொய்ப்பொருள்களஃதன்றி யுன்னைவாதிக்கு மலமும் அவையென்றறிதியென்றவாறு. *

[ப-ம்.] சாக்கிராவத்தையி லிருக்கும்போது அதனுட்டோன் றுங்கருவிகளியாதொன் றியாதொன்றித்த தனதுமயமாயும் அத ன்கண்ணின்று சொப்பனாதிகளிற் செல்லும்போது ஆங்காங்குத் தோன்றுங் கருவிகண்மயமாயுமீண்டுவரும்போதும் அந்தவவத்தை கடோறும் முற்கூறியகருவிகளைச்சார்ந்துவரலாலும் அந்தவவத்தை களைவிட ஆன்மாவிற்கு வேறிடமின்மையாலும் விடாதவத்தைமூ டியென்றார், விடமருந்தினேனை யவ்விடம்வாதிப்பதுபோ லவத்தை தன்னைச்சேர்ந்த வான்மாவை வாதித்தலா னங்ஙனங்கூறினர். உடம் பும்விடையமுமாகிய இச்சைப்பொருளான்மற்றைறயவத்தைகண்மே

ன்மேற்றொடர்தலின் எல்லாவற்றையுங் கூட்டி யவ்வழி யுன்னிச்சைப்பொருளென்றார். யாதோரவத்தையடுத்த தந்தவவத்தை வடிவாயான்மாவிருத்தலின் அதனையச்சென்றார். *

(அ கை) சிவத்தையெதிரிட்டறியக்கூடாதென்றறிவித்தல்.

தன்னையறிவார்க்கெதிருந்தானும்பயனுமில்லை ......*
யென்னிற்சிவனையறிவென்போமோ - சின்ஞாத ......*
தீதகற்றுமாற்றொளிபோற்றேய்ந்துசிவமாயிருக்கப்...*
போதகத்தைநாமொழிவிப்போம் ..................*

(இ-ள்) தனையறிவார்க்கெதிருந் தானும்பயனுமில்லை - யென்னிற்சிவனையறிவென்போமோ) எ-று. கருவிகண் முப்பத்தாறையுநீங்கித்தன்னையுள்ளபடி யுணர்ந்தோர்க்கு முன்னறிவுக் கெதிரீடாய்த் தோன்றின கருவிகளுமில்லைத் தேகமாகிய தானுமில்லை யித்தேகத்தாலனுபவிக்கும் விடையப்பயனு மில்லையென்று வேதாகமங்கள்கூறுமெனின் அவ்வான்மாவின் அக்கினிக்கு உஷ்ணம்போற்பிரிபடாதிருந்த சிவத்தை யெதிரிட்டறியத் தொடங்கினென்ன விபரீதமாய்ப் போமோயாமறியோம் (சின்ஞாத - தீதகற்றுமாற்றொளிபோற் றேய்ந்துசிவமாயிருக்கப் - போதகத்தைநாமொழிவிப்போம்) எ-து, ஞானநாதனே புடம்போட்டுக் கருமசமகற்றும் பொன்னுக்குமாற்றொளிமிகுதல்போலுன் போதங் குறைந்துகுறைந்து நீசிவப்பிரகாசந்தானாயிருக்க நானாவுபாயங்களாலும் அப்போதத்தை யாமொழிவிப்போம் யாமொழிவித்தபடியே நீயொழிந்துபோகி-எ-று. *

[ப-ம்.] பொன்னுங்கல்லுஞ் சரியொத்தபோது இருபுறமுஞ் சாயாதுமேன்முள்ளேநிற்குங் கீழ்முட்போலத் தன்னையுள்ளபடி யுணர்ந்தோனுக்குக் கேவலசகலங்களிற்சென்று அதனதன்மயமாயிருந்தவறிவு அவைகளைச்சாராது பிரிந்தருளுட்டத்தில் அசைவறநிற்றலாற் றன்னையறிவார்க்கெதிருமில்லையென்றுந், தேகந்தானாயிருந்த அறிவதனைப்பிரிந் தறிவாய்நிற்றலாற் றானுமில்லையென்றும், அருட்பூரணம் என்றைக்குவிளங்குமோவென்று அவ்வருண்மேலிச்சையைவைத்து விடையவிச்சையைநீங்கிநிற்றலாற் பயனுமில்லையென்றுங்கூறினார். புடம்போடுந்தோறும் இடைகுறைந்து மாற்றுயர்தல்போலத் தற்போதத்தாற் சிவத்தை யெதிரிட்டறியாதறிந்தசைவறநிற்குந்தோறும் அப்போதங்குறைந்து சிவப்பிரகாசமேலிடலாற் றீதகற்றுமாற்றொளிபோலென்றுவமைகூறினார். (௨௯)

(அ-கை) மலத்தடையால் ஆன்மாவிற் கானந்தமுந்
திருவருளுந் தோற்றாதிருந்ததென்றறிவித்தல்.

பூரணவானந்தமாந்தானேபுறம்புபால் ..............*
வாரியின்மீன்போன்றமலவாழ்வைப்-பாரீ...... ... ...*
ருறியாதநின்றவொளியையிருளாக்கு..............*
மதுகாணுமக்கினித்தம்பம்...........................*

(இ-ள்.) (பூரணவானந்தமாந்தானேபுறம்புபால் - வாரியில்மீன் போன்றமலவாழ்வைப்-பாரீர்) எ-து, உட்புறனடுக்கீழ் மேல்பக்கமெ ன்றுகூறப்பட்ட எவ்விடத்துநிறைந்துள்ள பரிபூரணசுகமாகிய சிவ ந்தானே அதனைவிட்டுநீங்காத ஆன்மாவிற்குப் புறம்புபாற்கடலி ற்சஞ்சரித்தும் அப்பாலைப்புசிக்கறியாது செந்துக்களை புசிக்குமீன் போலும் அப்பூரணானந்தத்திருந்தும் அதனையனுபவிக்க அறியாது மாயாமலமாகிய விடையங்களை யனுபவிக்கும் இந்த ஆன்மாக்களின து மலவாழ்க்கையைக் கண்டீர்கொலோ அஃதன்றி (உறியாதநி ன்ற வொளியையிருளாக்கு - மதுகாணுமக்கினித்தம்பம்) எ-து, உ தயாத்த மனமின்றி யெக்காலத்தும் ஒரியல்பாய்நின்ற ஞானசூரிய னைத்தெரியவொட்டா திருள்போற்காட்டும் அதுகாணும் அக்கினித் தம்ப மந்திரம்போலும் ஆன்மாவை யனாதியேமறைத்திருந்த ஆண வமாவதென்றவாறு. *

[ப-ம்] கூகைக்குவிழிக்கண்ணீரிருந்தகுற்றத்தாற் சூரியப்பிர காசம் இருளாய்த்தோற்றியதுபோல் ஆணவமலக் குற்றத்தால் ஆன் மாவிற்கு ஞானவொளி யிருளாய்த் தோற்றினமையால் ஒளியையி ருளாக்குமென்றும். அக்கினியோடு மந்திரமபின்னமாயிருந்து அவ்வ க்கினிமுழுதுமறையாது அதனதுசூட்டை மறைத்ததுபோல் ஆன் மாவோடாணவமபின்னமாயிருந்து அவ்வான்மா முழுதுமறையாது அதனது ஞானத்தைமறைத்தலானதுகாணும் அக்கினித்தம்பமென் றுங்கூறினர். (௩௰)

(அ-கை.) திருவருளான்மாக்கள் கன்மத்துக்கீடாய்நடத் துமாறும் அவ்வான்மாக்கள் கரணங்களோடுங்கூடி யிந்தியவழிச்சென்ற விடையங்களைப்புசிக்கு மாறு மிங்ஙனமென்றறிவித்தல்.

கூடல்சிவநீரான்மாவுப்புமலங்கன்ம ..............*

மடர்வாயுப்போதமலைகா-ணிடைவிடா ............ ...*

தவ்வாதியுட்காரணமைம்பொறியிற்பம்பாம்போ...... *
லிவ்வாறுனைச்சுழற்றுமென்............................*

(இ-ள்.) (கடல்சிவநீரான்மாவுப்புமலங்கன்ம-மடர்வாயுப்போதமலைகாண்) எ-று. கடல்போலுஞ்சிவம், அதனுள் நீர்போலும் ஆன்மா, அந்நீருட் பிரிபுடாதிருந்த வுப்புப்போலும் ஆணவம், அந்நீரின்மேன்மேல்வீசுங் காற்றுபோலும் கன்மம், இக்காற்றாலெழுமலைபோலும்போதமாகிய இவற்றுள் (இடைவிடாது -அவ்வாதியுட்காரணமைம்பொறியிற்பம்பாம்போ - லிவ்வாறுனைச்சுழற்றுமென் ) எ-து. காற்றைப்போன்ற கன்மத்துக்கீடா யிச்சாஞானக்கிரியைகள் பஞ்சமூர்த்திகளைச் செலுத்த இப்பஞ்சமூர்த்திகள் அகாரமுதலிய வக்காரங்களைச்செலுத்த அந்தவக்காரங்கள் மனமுதலிய வுட்காரணங்களைச்செலுத்த அவ்வுட்காரணங்களைம்பொறிகளிடத்தும் இடைவிடாதுன்னைப்பம்பாச்சுழல்போலும் இங்ஙனம் எக்காலமுஞ் சுழற்றுமென்றறிதியென்றவாறு. *

[ப-ம்.] அவ்வாதிகளைக் கூறினமையால் இவற்றிற்கு முதற்காரணமாகிய விச்சாஞானக்கிரியை முதலிய வருவிக்கப்பட்டது காற்றாலலையெழல்போல் ஆன்மாக்கள் கன்மத்துக் கீடாய்ப் போதம்பலபடவிரிதலினங்ஙனங்கூறினர்...................................(௲க)

(அ-கை.) ஆன்மாவீதென்றறிவித்தல்.

மண்ணாதிசத்தாதிவாக்குமனமாதி............................*
கண்ணாதிநாதாந்தங்கண்டகன்ற-வுண்மை ............*
தனையறிவென்றேயுணர்த்துஞ்சார்பினையுங்கண்ட.... *
வுனையறிவென்றுள்ளேயுணர்................................*

(இ-ள்.) (மண்ணாதி சத்தாதி வாக்குமனமாதி - கண்ணாதிநாதாந்தங்கண்டகன்ற-வுண்மைதனை) எ-து;பிருதிவிமுதலியபஞ்சபூதங்களுஞ் சத்தாதி விடயங்களும், வாக்காதி கன்மேந்திரியங்களும், மனமாதியந்தக்கரணங்களும், சட்சுவாதிஞானேந்திரியங்களும், காலமாதிவித்தியாதத்துவங்களும், சுத்தவித்தையாதி நாதமீறாய்ச் சொல்லப்பட்ட சிவதத்துவங்களுமாகிய இம்முப்பத்தாறையு மடிதடங்கி வேறுவேறாயநுபவதெரிசனம்பண்ணி யறிந்தவை யெல்லாந் தானன்றென்றுநீக்கி யவற்றின்முடிவினின்ற சைதன்னியத்தை (யறிவென்றேயுணர்த்துஞ்சார்பினையுங்கண்ட-வுனையறிவென்றுள்ளேயுணர்) எ-து. ஆன்மாவென் றுனக்கறிவிக்குந் திருவருளையும் அவ்வருளான்மூன்

கண்டு நீங்கிய கருவிகளிவையென்றுங்கண்டவுன்னை யறிவென்றும் உனக்குள்ளேயறிவென்றவாறு. *

[ப-ம்.] கருவிகண்முப்பத்தாறும் ஒன்றையொன்றறியாமையானுந் தத்தங்குணங்களைத் தாமறியாமையானுங் காட்சிகண்ணையறியாததுபோல் அவைகளான்மாவை யறியாதாகலானுங் கண்காட்சியை யறிவதுபோலக் கருவிகளையிதீதென்று பகுத்தறிந்து நீங்கிநின்றது ஆன்மாவாகலானும் நாதாந்தங்கண்டகன்ற வுண்மைதனையென்றார். தன்னாலறியப்பட்ட கருவிகளைச்சடமென்றும், அவற்றைத்தனக்கறிவித்தது அருளென்றும், அக்கருவிகள்போற் சடமுமன்றித் திருவருளைப்போற் பேரறிவுமன்றி நின்றறிந்த அறிவுதானென்றுந் தன்னையும்பாசத்தையுந் திருவருளையும் அவ்வருளாற்கண்டமையாலுணர்த்துஞ் சார்பினையுமென்றார். தத்துவங்களையெல்லாம் பகுத்துக்கூறினமையால் வித்தியாதத்துவம் வருவிக்கப்பட்டது. அறிவோடுங்கூடியறிவாயிருத்தலின் ஆன்மாவையுமறிவென்றார். *

(அ-கை.) பஞ்சகிருத்தியத்தால்அவத்தைக
ணிகழ்வனவறிவித்தல்.

அஞ்சுதொழிலாவதுவேயஞ்சவத்தைகிஞ்சலிலா ...*
வஞ்சிடத்துங்கொள்ளிவட்டமாகவே-பஞ்சவன்னம் ... *
வைத்தபடிகம்போன்மாறுதுனைமயக்கல்............*
சித்திரக்கூத்தாகத்தெளி ......................*

(இ-ள்.) (அஞ்சுதொழிலாவதுவேயஞ்சவத்தைக்கிஞ்சலிலா-வஞ்சிடத்துங்கொள்ளிவட்டமாகவே) எ-து, சிவனது பஞ்சகிருத்தியங்களியாவையெனிற் சாக்கிரமுதலிய அஞ்சவத்தைகளுமாம் சுருக்கமில்லாத இவ்வஞ்சவத்தைகளிடத்துங் கொள்ளிவட்டம்போலாக அதிசீக்கிரமாய் மாறிமாறிவரச்சுழற்றி (பஞ்சவன்னம்-வைத்தபடிகப்போன்மாறுதுனைமயக்கல்-சித்திரக்கூத்தாகத்தெளி) எ-து, வைக்கப்பட்ட பஞ்சவன்னத்தின் மயமாம் படிகம்போல் நீசேர்ந்த அவத்தையாததன்மயமாக்கி யிடையறுதுனைமயக்குதல் அவனதழகியதிருக்கூத்தாக அறியென்றவாறு. *

[ப-ம்] முப்பத்தாறுகருவிகளோடும் ஆன்மாத்தேகபோகங்களையறிதலிற் சாக்கிரத்தைச் சிருஷ்டியாயும் இச்சாக்கிரத்திற்புசித்தவாசனை சொப்பனத்து மறிந்து நிற்றலா லிதனைத் திதியாயும் இச்சொப்பனம்போற்சிறிது நிழலெழுத்தோல்றி மறைதலாற் சுழுத்தி

யைச்சங்காரமாயும் பிராணவாயு வியக்கமன்றி யொன்றுந்தோன்றாதிருத்தலாற் றுரியத்தைத்திரோபாவமாயும் அதீதங்கருவிகளேதுமின்றி ஆணவவிருளா யிருந்ததாயினும் அதனிமித்தமாய் மாயையிற்றனுவாதிகொடுத்தல் இருவினையொப்புவருவித்தல் ஆசாரியமூர்த்தமாய்வந்து உபதேசித்தன்முதலிய அனுக்கிரகம்பெறுதலின் இவ்வதீதத்தை யனுக்கிரகமாயுங்கூறினர்- கிஞ்சிலிலாவென்ற விதப்பாலுடலுற்றி நின்றழிவது சிருஷ்டி திதி சங்காரம்,உயிருண்மயங்கமூந்தெளிவும் வருவன திரோபாவஅனுக்கிரகம், இங்ஙனமுடலின்மூன்றும் உயிரினிரண்டுமாய் வருவனவும் ஓரிந்திரியத்திலான்மா பிரவேசித்தல் சிருட்டியதனாலறியும் விடையத்தை யனுபவித்தல் திதிஅவ்விடையமயமாயழுந்துதல் சங்காரம் அதனினுருசிப்பித்தல் திரோபாவம் அதனைத்தெளிந்துகோடல் அனுக்கிரக மிங்ஙனமிந்திரியங்கடோறும் வருவனவுமனத்தானோர்பொருளைநினைத்தல் சிருட்டி, அப்பொருளிற்பிரியம்பிறத்தல்திதி, அஃது எப்போதுவருமென்றுநினைத்துநிற்றல்சங்காரம், அப்பொருளின் மயங்குதல்திரோபாவம், அதனைத்தெளிந்துகோடலனுக்கிரகம் இங்ஙனங்கரணத்தில்வருவனவும் இவைமுதலியபேதத்தில்வரும் பஞ்சகிருத்தியங்களும் முத்தியில் அருள்வடிவமாதல் சிருட்டியானந்தப்பேறு திதிஅதிலதீதப்படுதல் சங்காரம் ஞாதுரு ஞானஞேயமென்னு மூன்றுந் தோன்றாதிருத்தல் திரோபாவம் இவைநான்கும் எக்காலமும் விளங்குதல் அனுக்கிரகமாகிய இம்முறைவருவனவுங்கொள்க. (௩௩)

(அ கை.) இந்த அவத்தைகளொன்றுந் தோன்றொழிக்கக்கூடாதோவெனின் அவத்தைநீங்கிநிற்றற்குபாயங்கூறுதல்.

மாயாவிகாரமதுபானம்போன்றுமயக் ............*
கோயாததுன்றொலொழியுமோ-நீயதுவாய்ப்.............*
போகாமலாடும்பவுரியவன்பொய்க்காட்சி ...........*
யாகாதுபோலேயறி..............................*

(இ-ள்.) ( மாயாவிகாரமதுபானம் போன்றுமயக்- கோயாததுன்றொலொழியுமோ ) எ-று, முற்கூறியவவத்தை மாயாகாரியமாகிய கருவிக்கூட்டங்களினதுசேட்டை அது மதுபானங்கொண்டவன் நற்குணத்தைமாறுபடுத்தித் தனதுலகிரிமேலிட்டு அவனைமயக்குதல் போன்றனது ஞானகுணத்தை மாறுபடுத்தித் தமதுகுணமேலிட்டு உன்னையொழிவறநின்று மயக்கும் அஃதத்தை யுன்றொலொழிக்கக்கூடுமோ ஆகுனீர் இங்ஙனங்கூறியவாற்றான் அதனையொழிக்கவே

ண்டாவோவெனின் அதனையொழியா தொழிற்றற்குபாயமுமுண்டு அ ஃதெங்ஙனமெனின் (ஆடும்பவுரியவன் பொய்க்காட்சியாகாதபோ லே நீ யதுவாய்ப்போகாமலறி) எ-து, ஆடப்பட்ட ஓர் பார்ப்பனக் கூத்தன் தோட்டிவேடம் போட்டானாயினும் அப்பொய்வேடக்கா ட்சிதானாகாது தன்னைவேறாகக்கண்டு நின்றாற்போல் அவத்தையுள்ளி ருந்திடியெனினும் நீ யதன்மயமாய்ப் போகா துன்னைவேறுபிரிந்த றிதியெனின் அஃதுன்னைமயக்காதென்றறியென்றவாறு. *

[க-ரை.] இங்ஙனம் பிரிந்துநிற்றல் சாக்கிராவத்தையிலன்றிச் சொப்பனாதிகளிற் கூடாதெனினும் அச்சாக்கிராவத்தையைப் பிரித் துநிற்பிற் றிருவருட்டோற்றும் இத்தோற்றமேலிடில் அச்சாக்கிரா வத்தைமறையும் அதுமறையவே அதனது வாசனையான சொப்பனா திகடோன்றாவாகலிற்பொதுப்படக்கூறினர். (௩௪)

(அ-கை.) பஞ்சகிருத்தியத்தா னுண்டா மைஞ்சவத்தையுங்கடந் து சிவத்திலதீதப்பட்டு நின்றோர்க்கோரோர் காலத்தோரோர வத்தைகள்தோன்றுமோவெனின் சிவயோகியையவத்தைகள் சா ரமாட்டாதென்றறிவித்தல்.

பழுதையைப்பாம்பென்றபயம்போனாற்பாவித்......*
தழுதுடம்பையாட்டுகினுமாமோ-தொழிலொழிவி ... *
னின்றசிவயோகிநினைந்தொருகாலிவாரா...............*
பென்றழைத்தாலும்பழுதையாதென்...........................*

(இ-ள்.) (பழுதையைப்பாம்பென்றபயம்போனாற்பாவித் - தழு துடம்பையாட்டுகினுமாமோ) எ-து, இருளாற்பழுதையைப்பாம் பென்றுகண்ட பயகம்பனாதிகள் சுடராற்பழுதையென்றறிந்து அப் பாம்பென்றுகண்டபயகம்பனாதிகள்போனால் இப்போதுசுடராலறி ந்தபழுதையின் முன்னிருளாற்றோற்றிய பாம்பிருப்பதாய்ப்பாவித் துப்பயந்ததுபோல் அழுதுடலைநடுக்கினு முன்போலும் பயகம்ப னாதிக ளுண்டாகாததுபோலும் (தொழிலொழிவி -னின்றசிவயோகி நினைந்தொருகாலிவாரா- வென்றழைத்தாலும்பழுதையாதென்) எ-து, மூலமலவிருளான் மெய்போற்றோற்றிய அவத்தைகளெல்லாமிப் போது ஞானசூரியனாற் பொய்யாகக்கண்டு அவத்தைகளை நடத்து ம் பஞ்சகிருத்தியங்களையுங்கடந்து மேனின்றசிவத்தி லதீதப்பட்ட சிவயோகி-கருதி-யவத்தை யொருதரமீட்டிங்கு நீ வருதியென்றழை ப்பினும் மூலமலமாயா திருக்கவுந்தானே வந்து கொள்ளிவட்டம்

போற்சுழல்வது இப்போ தனுவளவேனும் அசையாதிருந்த நிலைதெ ன்கொலோயாமறிகிலேமென்றவாறு. *

[ப-ம்] சிவயோகிக்கு ஜீவனாருண்ணியமுதலியவற்றான் மனுலைந்தந் தனும்பிற்றுயிலுந் திருவருள்வடிவாய் நிற்பதன்றி மாயாவடிவமாகாதாகலினுஞ் சூரியப்பிரகாசத் திருடோற்றுகது போன் ஞானப்பிரகாசத்தின் மாயாந்தகாரந்தோற்ற மாட்டாதாகலினும் அழைந்தாலுமென்றும் பதையாதென்றுங்கூறினர். (௩௫)

(அ-லக.) இங்ஙனமிருந்த சிவயோகிக்குபதேசித்தன்முதலியவற்றாற் றன்பிறவொன்று தோற்றுவதென்னெனின் சிவயோகிதா மிதர்போற்கூறினும் இவையவனுக்கில்லையென் றறிவித்தல்.

கன்னிக்கதலிதனை நார்கழிப்பான் கண்போலத் ... ...*
தன்னையறியாவறிவே தான்மீளச்-சொன்னாலு ... ...*
நாவென்றநாவேபோனாலென்றசொல்லளவே ... ...*
யாமன்றித்தானெதிராகா ... ...*

(இ-ள்.) (கன்னிக்கதலிதனை நார்கழிப்பான் கண்போலத்- தன்னையறியாவறிவே தான்மீளச்சொன்னாலும் ) எ-து, ஈனுவாழையினது மட்டை நார்கழிக்கத் தொடங்கினோன்கண் அம்மட்டையுளதுளதென்று சுட்டிப்பார்க்குந்தோறும் அவனது கைமட்டைகளையெல்லாங்கழிந்தச்சென்று அதனுளிருந்த குருத்தையும்விரித்து விடுத்தபோது ஆன்றோன்போற்சுட்டிதற்கு வேறொன்றுமின்றிச் சும்மாயிருந்த அக்கண்போலும் ஆசாரியன் விபவிக்கத் தான்முப்பத்தாறுகருவிகளையுங்கடந்து சென்றவற்றின் முடிவினின்ற அருளையும்பரையையுங்கடந்து அதன்மேற்றோன்று மானந்தத்தையுமெதிரிடாது அதனுளதீதப்பட்டிருந்த சிவயோகி தன்னையறியாவறிவேயாவன் அவ்வறிவாயிருந்தோன் மீட்டு நானென்று பிறித்து அவ்வறிவு வேறறற்பொருட்டு மாணாக்கனுக்கறிவித்தானெனினும் ( நாவென்ற நாவேபோனாலென்றசொல்லளவே-யாமன்றித்தானெதிராகா)எ-து நாவானது தன்பெயரை நாவென்று கூறினும் அப்பெயர்க்குரிய பொருள்வேறின்றித் தானேயிருந்த அந்நாவைப்போலும் நீநானென்று சொன்ன சொன்மாத்திரமே யாமன்றித் தானும் எதிரும் அவனுக்குண்டாகாதென்றவாறு. *

[ப-ம்.] தன்னையறியாவறிவு சிவம்நிதலைத்தன்னையறியாதவே றுண்டாய்த் தானறியாதென்று முற்கூறியபாட்டானுங்காண்க சிவ

யோகி தற்போதம்போய்ச் சிவமயமாயிருத்தலிற் றூனென்பதும் அச்சிவப்பிரகாசத்திற் பிரபஞ்சமறைதலிற் பிறனென்பதும் அவர்க்கில்லையாகலிற் றூனெ நினாகாவென்றூர். (௩௬)

(அ-கை.) தம்மைத்தா மூள்ளபடியறிவ தெங்ஙனமெனின் தம்மையறிவ திங்ஙனமென் றறிவித்தல்.

தம்மாலறிந்ததெல்லாந் தாமல்லவென் றுணைத்தாற் *
சும்மா விருப்பதுவாய்த்தோன் றுதோ-விம்மி ... ... *
யரிந்ததலைவாபடங்குமவ்வளவேயல்லா ற் ..............*
றெரிந்திடுமோ நீயேதெளி.......................... ... *

(இ-ள்.) (தம்மாலறிந்ததெல்லாந்தாமல்லவென்றுணைத்தாற்- சும்மாவிருப்பதுவாய்த்தோன்றுதோ ) எ-து, தமது போதத்தால் ஈதீதென்று பகுத்தறிந்து நீங்கிய கருவிகளெல்லாந் தாமல்லவென்று வேதாகமங்கள் கூறுமெனில் அவற்றைப்பகுத்தறிந்து நீங்கிநின்றவறிவு தாமென்றருளாலறிந்து மவுனமாயிருப்பதாய்த் தோற்றுமோ ஆனுற் றன்னையறிந்த அநுபவஞ்சொல்வதெங்ஙனமெனின் (அரிந்ததலைவாய்விம்மி யடங்குமவ்வளவே யல்லாற்றெரிந்திடுமோ நீயே தெளி) எ-து, உறுப்புக்கட்கெல்லா முதலாயதலையை யரிந்தபோது அவ்வாய்திறந்தடங்கு மவ்வளவேயன்றித் தலைபோயிற்றென்று கூறவியாது அதுபோலுங்கருவிகண்முப்பத்தாறையுநீங்கியவற்றின்மேல் நின்றமுத்திச் சகலமுத்திகேவலமுநீங்கி யாங்மாவஞ்ஞாற் றன்னை மாத்திர மறிந்திருக்குமிடத்து யாண்டுமேவேமுர் அநுபவந்தெரிந்திருக்குமோ நீயேயிதனைந் தெளிந்தறிதி யென்றவாறு. *

[ப-ம்.] தத்துவங்கண்முடிவிற்றோன்று முத்திச்சகலம் முத்திக்கேவலமின்மையால் அரிந்ததலையென்றும் நேயமும் நிற்ற வறிவுக்குவடிவின்மையாற் சொல்லக் கூடாதாகலின் வாயடங்குமென்று ங்கூறினர். தத்துவங்களையங்கமாயும் முத்திச்சகல கேவலங்களைத் தலையாயும் வைத்துத் தலைபோயவிடத்து ஆன்மாவுக் கவ்வணுபவங்களொன்றுமின்றிச் சும்மாவிருத்தலின் அரிந்ததலை வாயடங்கு மவ்வளவேயன்றி தெரிந்திடுமோ நீயேதெளியென்றூர் அரிந்ததலைவிம்மி யடங்குமெனக்கூட்டுக. (௩௭)

(அ-கை.) தலைவனைத்தான் தன்னலறியக்கூடாதோவெனின் திருவருளாற்சிவத்தையறியும்போதுஞ்சிறிதும்போதஞ்சேரியாதுநின்றறிய வேண்டுமென்றுகூறுதல்.

மறவாததம்மையறிவார்மருளோ......................*
வறிவோவிடையம்போலாகி-லறிவை......... .........*
யறிவதறிவாகையினலாறாறுந்தத்த,........... .........*
மறிவையறியாபோலறி........................ ........*

(இ-ள்.) (மறவாததம்மையறிவார்மருளோ- வறிவோவிடையம்போலாகில்) எ-து, சகலகேவலங்களாகிய நினைப்புமறைப்புங்கடந்த றிவாய்மறவாதிருந்ததம்மைமறந்து அதுபோல்நினைத்தறியத்துடங் குமவர்க்கெதிரிட்டறியும்விடயம்போற் றம்மைத் தமக்குத்தோ ற்றுமாகில் அதுமருட்போதமோ வருட்போதமோ (அறிவை-யறி வதறி வாகையினலாறாறுந்தத்த-மறிவையறியாபோலறி) எ-து, அறி வாயிருந்ததன்னை யறியத்துடங்குவது தன்னறிவைக் கொண்டாகலி ன்முப்பத்தாறு தத்துவங்களுந் தத்தமறிவைத் தாமறியாதிருப்பது போற் றன்னைப்பிரித்தறியாது சும்மாவிருப்பதுவே தன்னையறிவ தென்றறிதியென்றவாறு. *

[ப-ம்.] முற்சகலகேவலமாயிருந்த ஆன்மாத் தன்னையாரொன் றுபார்த்தபோது தான்வேறு அவைவேறாய்ப்பிரிந்தாற்போல் இப் போதுசுத்தமயமாயிருந்த ஆன்மாத் தன்னையெதிரிட்டுப் பார்ப்பி ன்இச்சுத்தம்பிரிந்து கேவலசகலங்களிற் செல்லுமாகலின் ஆறாறுந் தத்தமறிவையறியாபோலறியென்றார்- நினைப்புமறைப்பின்றியறிவா யிருத்தலின் மறவாததம்மையென்றார். (௩௮)

(அ-கை.) இதுவுமது.

ஊன்றுநிலமசையினாதமொழிந்தசிவந்..............*
தோன்றுந்துணையுனக்குத்தோன்றுமோ-தோன்றில் ...*
விரற்றுனியைத்தீண்டுவபோல்வாய்முகத்தைமென்று...*
சிரிப்பதுபோற்பார்த்துத்தெளி......... ... .........*

(இ-ள்.) (ஊன்றுநிலமசையினாதமொழிந்தசிவந்- தோன்றுந்து ணையுனக்குத்தோன்றுமோதோன்றில்) எ-து, ஓர் தண்டாலன்றிச் சடமாயுள்ள நிலமு மசையுமெனின் எல்லாத் தத்துவங்களுக்குமுடி வாகிய நாததத்துவத்தையுங்கடந்து உனதுயிர்க்குட்டோன்றுந்து ணையாயிருந்தசிவத்தை யுன்போதத்தையூன்றி நின்றறியவெனின் அஃதுனக்குத்தோன்றுமோ வுன்போதத்திற் கதுதோற்றுமெனின் (விரற்றுனியைத்தீண்டுவபோல்வாய்முகத்தைமென்று-சிரிப்பதுபோ ற்பார்த்துத்தெளி) எ-து, ஓர்விரற்றன்றுனியைத்தான்றொடல்போலு

ம்முகத்திற்கண்ணிருந்தவாய் அம்முகத்தையெதிரிட்டுக்கலித்தமெ ன்று சிரிப்பதுபோலுமாம் இதனையாராய்ந்து தெளிந்திடுதியென் றவாறு. ※

[க-று.] நட்பத்தானுண்மாவுள்ளும் பூரணத்தால் அதற்குட்பு றம்புமாய்ப்பிரிபடாது சிவமிருத்தலின் ஆன்மாவால் அதனைப்பிரி த்தறியக்கூடாதாகலின் இங்ஙனமுவமைகூறினார். சிரிப்பதுயான்சிவ த்தையறிந்தேனென்று பிறருக்குக்கூறிமகிழ்தல். (௫௧)

(அ-கை.) இதுவுமது.

பற்றியதுதானும்படிகநீபற்றுவிடப்........................※
பற்றையெதிரிட்டுப்பார்த்தாலென்-சற்றும் .............※
பிரியாச்சிவனைப்பிரித்தறியத்தேடு........................ ※
மறியாமைகாணவம்...................................... ......※

(இ-ள்.) (பற்றியதுதானும்படிகநீபற்றுவிடப்- பற்றையெதிரிட் டுப்பார்த்தாலென்) எ-து. தன்னைச்சார்ந்தநிறமியாதும் அந்நிறந்தா னாயிருக்கும் படிகம்போலும் இயாதோர்கருவியடுத்த தன்மையதா லவ- நீயக்கருவிக ணீங்குதற்பொருட்டு உனக்குள்ளிருந்த சிவமா கியபற்றை யெதிரிட்டுப்பார்த்ததனாற் பயனென்னையுள(சற்றும்-பி ரியாச்சிவனைப் பிரித்தறியத்தேடு- மறியாமைகாணவம்) எ-று, ஓராணவனேனும் உன்னைவிட்டுப்பிரியாதிருந்தசிவத்தை யுஞ்சோ தத்தாற்பிரித்து உன்னைவிட அஃதோர்முதலாய்க்கண்டு அதனையறி யத்தேடும் பேதமைகாணாணவமாவதென்றவாறு. ※

[ப-ம்.] கேவலசகலங்களைநீங்கி யருளாற்றன்னையுள்ளபடியறிந் தஆன்மாத்தனக்குவேறறவிருந்த சிவத்தையும் அவ்வருளாலறிதல்வே ண்டும் அதனைக் குருவுபதேசத்தா லறிந்துகொள்க (உதாரணம்) அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை யருளினா லறியா தே யறிந்தென்னுஞ் சித்தியாருட்காண்க. சிவத்தைப்பிரியாதந்நு ளடங்கிற் கருவிகள்தொடரா அதனைப்பிரிக்கிற் றொடருமாகலிற்ப ற்று விடப்பற்றை யெதிரிட்டுப்பார்த்தா லென்னென்றார், ஆங்கு மலமின்றாயினும் அதனதுவாசனையாற் போதமெழுதலின் அறியா மைகாணவமென்றார், ஆன்மாவைப்பற்றுவிடாதிருத்தலிற் சிவத் தைப்பற்றென்றார். ※

(அ-கை.) அந்தச்சிவத்தைச்சென்றடையுமிடம் எவ்விடமெனி ன் ஆன்மாச்சிவத்தோடிரண்டறக்கலந்த அத்துவிதமிவ்விடமெ ன்பதும் இதுவேதாந்தமுடிவென்பதுமறிவித்தல்.

ஆனந்தமுந்தானாகி அவ்வானந்தமிதுவென்று கூறற்கூடாத ஆனந்தாதீதமுந் தானாகி யெழுந்தருளி யிருந்த ( 'ஓதாமலேவேதமுணர்ந்தோன் வேதாந்தசித்தாந்தமேபிறவாவீடென்றான்' ) எ-து, ஓதாமறியாமற் றமது திருவருண்ஞானத்தால் நன்குவேதங்களையு முழுதுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் இந்த அனுபவமுற்றதுமுண்டானவேதாந்தமுடிவாகியசித்தாந்தமே மீண்டுவாராமுத்தியென்றருளிச்செய்தாரென்றவாறு. *

[ப-ம்.] எல்லாந்தானாகியென்றதனால் சுதந்தரமறிவித்தது. ஓதி யுணர்ந்தோரைப்பற்ற வோதாமலுணர்ந்தோர்க் குண்மைமேலலாமுள்ளபடிதெரியும் இங்ஙனமோதாம லுணர்ந்தோரே இதுவே பிறவாவீடென்று கூறினமையால் இஃதுண்மைமுத்தியென் றறிந்துகொள்க. வியாசர்முதலியோர் ஓதாமலுணரினும் அசக்குவிட்டினுபரமென்றும் அகப்பிரமமென்றும் பின்னர் பல்வேறுபிறந்தனாகலின் இவையாட்போலும் அவர்சுதந்தரவதிவிலவெனக்கொள்க. (சஉ)

(அ-கை.) இதுவுமது.

மலையேறிப்போவார்க்குமாநிலமாய்த்தோன்றிக்.....*
கலையாதியைக்கழற்றிக்காட்டித்-தொலைவிலே.. .... ...*
காட்சியொழித்தென்னைக்கரந்தகலாவாதனையின்... ...*
மாட்சிசொலின்மோனமாம்வந்து.....................*

(இ-ள்.) (மலையேறிப்போவார்க்குமாநிலமாய்த்தோன்றிக் - கலையாதியைக்கழற்றிக்காட்டித்-தொலைவிலே -காட்சியொழித்து) எ-து, மாநிலத்திருந்து மலைமேலேறிச் செல்வோர்க்கு ஆங்குயாநிலமாயத்தோற்றி யம்மலைமுடிமே லேறிநின்று மீண்டுபார்க்குமிடத்து முன்னிருந்தமாநிலமும் பின்வந்தமலையிடமுந் தானிற்கு மிடத்திற்கு கீழ்ப்பட்டு அருகித் தோற்றுமாப்போலுங் கலைமுதலிய ஆறத்துவாவையுஞ் சோதனைபண்ணி நீக்கி இவற்றின் முடிவினின்றஆன்மாவை யறிதன்முதலிய அனுபவங்களைக்காட்டி இவ்வனுபவமுடிவிலே முற்றோற்றிய கருவிகளுஞ் பிற்றோற்றிய அனுபவங்களுமாகியகாட்சிகளெல்லாக்குந் தோற்றுவாயொழித்து (வாதனையிலென்னைக்கரந்தகலாமாட்சி - சொலின் மோனமாம்வந்து) எ-து, எனக்கோர் வாதனையுமில்லாதெனைத் தமதுபூரணானந்தத்தொளித்து உள்ளும் புறம்புமா யெழுந்தருளியிருந்த எமதாசாரியரது பெருமையைச் சொல்லுமிடத்து அதனைச் சொல்லவொட்டாதென்னைப் பேரானந்தம்வந்து மவுனமாக்கும் ஈதென்கொலோவதிசியமேயென்றவாறு.

[ப-ம்.] தொலைவிலேகாட்சி யொழித்தென்றதனுன் மலைமு

டிமேலெவிதின்று பார்க்குமிடத்தென்றும் வருவிக்கப்பட்டது-கலை யாதியாத்துவாவாவன-மந்திரம்பதினொன்றும் பதம் எண்பத்தொன்றும்வன்னமைம்பத்தொன்றும் புவனம் 'இருநூற்றிருபத்துநாலுந்தத்துவமுப்பத்தாறுங் கலைகளைந்து மெனக்கொள்க. அநுபவமுடிவுசொல்லக்கூடாமையின் மோனமாம்வந்தென்றார் (௪௩)

(அ-கை.) இதுவுமது.

இதுவென்றதெல்லாம்பொய்யென்றுனெனக்குப்...*
பொதுவன்றித்தங்குமிடம்போச்சு-வதுநாங்கா ... ...*
னென்றுனதன்பேரிரவைப்பகலாக்கு............ ... *
மொன்றேபரமசுகமோ........................ ... ......*

(இ-ள்.) (இதுவென்றதெல்லாம்பொய் யென்றுனெனக்குப்-பொதுவன்றித்தங்குமிடம் போச்சு) எ-து, சுதிதென்று உன்போதத்தாற்சுட்டி யறிந்தறியாது அஃதெல்லாம் பொய்யென்றார் இங்ஙனமருளிச்செய்த வாற்றாலெனக் கென்போதத்தாற்சுட்டி யறிதற்கரிதாயெல்லாவற்றுள்ளும் பொதுவாயிருந்த திருவருளிடமேயன்றி முன்னர்க்கருவிகேடோடும் அதனைதன் மயமாய்த்தங்கு மிடமெல்லாம் இப்போதுபோச்சு (அதுநாங்காரனென்று னதன்பேரிரவைப்பகலாக்குமொன்றேபரமசுகமோ) மூத்தகருவிகளோடுங்கூடிக்கருவிமயமாயும் இப்போ தருளோடுங் கூடி யருண்மயமாயும் அவற்றைப்பாசமென்றும் இதனையருளென்றும் இருந்தறிந்த வோரறிவுண்டே அவ்வறிவு எம்மைவிடவேறோர்முதலன்று அதுவேதாமென்றும் எமதாசாரிய ரருளிச்செய்தார் அங்ஙன மருளிச்செய்த திருப்பெருக்கருத்தம் என்னையிற்றை வரையுமறைத்திருந்த ஆணவவிரவைப்பகலாக்கும் ஞானசூரியனே அஃதன்றி யெஞ்ஞான்றுமொழிக்கக்கூடாதிருந்த தற்போதத்தை விழுங்கியெழுந்த பரமானந்தசாகரமோ யாலறிகிலேனென்றவாறு. *

[ப-ம்.] பகுப்பின்றி யெல்லாவற்றுள்ளும் பொதுவாயிருந்தவின் அருளைப்பொதுவென்றார். அதுநாங்காரனென்றது ஆன்மாவைச்சிவத்தோடிரண்டறவபிந்நியங்கூட்டியதெனக்கொள்க (௪௪)

(அ-கை.) இதுவுமது.

அறிவித்தாலன்றியறியாநீயென்றுன் ..............*
மறவைக்கதவேமருந்தா-யறியவெளி.....................*
லாகாயமெய்யவைத்தவம் பரமவெளிது....................*
மாகாயவாக்காமது .....................................*

(இ-ள்-) (அறிவித்தாலன்றியறியாய்நீயென்றான் மறவைக்கதுவே மருந்தா யறியவெளி லாகாயமெய்யவைத்தவம்பாம்) எ-து, உன துயிர்க்குயிராயிருந் தியமோனந்தினை யறிவித்தால் நீயறிவதே யன்றி உன்சுதந்தரமாயொன்றினையும் அறியாயென்றருளிச் செய்தாரியா னெனதென்று எழுமலப்பிணியைநீக்குதற்கு அத்திருவாக்கே மருந்தா யிங்ஙனமறிவிக்குந்தன்மை யாலறியத் துடங்கலி லியானிருத்தற்கிடமுந் தம்மையறிதற்கெழும்போதத்தற்கிடமும் தமதிடமே யன்றி வேறுகாணேனாகலின் ஆகாயமிலக்கா யதனையெய்யவைத்த அம்புபோலுமாகும். இங்ஙனம் உயிர்க்குயிராயிருந் தறிவிப்பதா யெதிரிட்டறியக்கூடாததாயிருந்த அறிவின்கண் வாக்குத்தோற்று வதெங்ஙனெனின் (அறிவெளிலு மாகாயவாக்காமது) எ-து, அவ ரங்ஙனமிருந்தஅறிவேயெனினும் அவ்வறிவின்கணின்று காருண் ணியத்தாற்றோற்றும் அவ்வாக்கு ஆகாய வாக்கு போலுமா மென்ற வாறு.

ப-ம். அம்பிற்கெய்யாநின்றிற்பதற்கிடமும் எய்தபின் சேறற்கிடமும் அவ்வாகாயமேயன்றி வேறிடமில்லையையான் இதனை அதற்குவமையாகக் கூறினர். வாக்காற் கூறியதுபோற் பிறர்க்குத்தோற்றுவதேயன்றி அவர்க்குத்தோற்றாதாகலின் ஆகாயவாக்கா மதுவெனறார்.

(அ-கை.) மும்மலங்களை நீக்குதற்குபாயமும் அம்மலங்களை நீங்கி அவ்வான்மாத் தற்போதமுங்கெட்டு ஆனந்தாதீதப்பட்டால் அதற்குமேல் வேறுநிட்டையின்றெனபதும் ஆன்மாக்கருவிகடாக்காது நிற்றற்குபாயமும் அடங்கியபோதமீட்டும் விரியாதடக்கவேண்டுமென்பதுமறிவித்தல். (சரு)

மலமாயைகன்மமயக்கவிகற்ப........ ...... ......*
நிலைபோகப்போயொழிந்த நிட்டை - பலவோ... ...*
வறிவுக்கெதிரில்லையாகாயநீழ........... ... .....*
லறநிற்குமாபோனிற்பாய்...........................*

(இ-ள்.) (மலமாயைகன்மமயக்கவிகற்ப நிலைபோகப்போயொழிந்தநிட்டைபலவோ) எ-து, ஆணவமலமாகிய மயக்கத்தைக் கேவலாவத்தையாற்போகச்செய்து மாயையாகிய விகற்பத்தைக் குருலிங்கஜங்கமவழிபாட்டாற்போகச்செய்து கன்மத்தைச் சுத்தநிலையாகிய அருளாற்போகச்செய்து ஆன்மாவிந்தஅருள்வழிச்சென்று சிவா

னந்தத்திற் றற்போதமற்ற வுண்மைநிட்டைபலவிதமாமோ (அறிவு க்கெதிரில்லையாகாயநீழலறநிற்குமாபோனிற்பாய்) எ-து, இங்ஙன ந்தற்போதமற்றுச் சிவமென்றுந் தாமெனன்றும் இரண்டறவிருந்த அறிவிற்கெதிரீடாய்த்தோற்றுவதொன்றுமில்லை, ஆகாயம் எல்லாப் பொருள்களோடுங்கூடியிருப்பினும் அப்பொருள்களிற்சாயைதன் னுட்டாக்கறநின்றாற்போல் எல்லாக் கருவிகளோடுங்கூடி யிருப்பி னும் அக்கருவிகள் குணமுமுன்னைச்சாராது நீநிற்றியென்றவாறு*

ப-ம். கேவலாவத்தையைத்தெரிசிக்கவே ஆணவநீங்குமாகலா னு, மனவாக்குக்காயங்களாற் குருலிங்கஜங்கமத்தைவழிபடவே அம் மனவாக்குக்காயங்களாய்விரித்த விகற்பரூபமாகியமாயை நீங்குமா கலானும், இவற்றைநீங்கிச் சுத்தநிலையிற்றோன்றுந் திருவருளைத்தெ ரிசித்து இந்தத்திருவருளே பெத்தமுத்தியினு மெமக்குபகரிப்ப தென்றறிந்து தான்பிறனொன்று முன்னிலைச்சுட்டொழிந்து நிற்கவே கன்மநீங்குமாகலானு, மலமாயை கன்மமயக்க விகற்ப நிலைபோகவெ ன்றார். சகலகேவலங்கள் நீங்கி ஆன்மபோதமு மொழிந்தநிட்டைக் குமேல் வேறுநிட்டையின்றாகலிற் பலவோவென்றார். *

க-து. ஆகாயந்தன்னது நுண்ணியகுணத்திற்றிரிவின்றி யிருந்த மையான் மற்றப்பொருள்களினிழலுக்கா திருந்ததுபோல் ஆன்மா த்தனது போதஞ்சீவியாதுநுட்பகுணத்தோ டிருந்ததெனிற் சிவத் தோய்வலப்புக்கூடுந் தூலமாகியகருவிகளும் அதனைத் தாக்கமாட் டாதென்பதறிக. (சரு)

(அ-கஉ.) இருவுமது.

போதம்பதைப்பறவேபூரணமாம்பூரணமும்... *
போதம்பதைத்தளவேபொய்யாகு - மீது..... ... ... *
விழித்திமைப்பாநின்றால்வெளியதைந்தாற்காற்றும்... *
பழக்கமலதச்சாட்சியைப்போற் பார்...... ... ......*

(இ-ள்.) (போதம்பதைப்பறவேபூரணமாம்பூரணமும் போத ம்பதைத்தளவேபொய்யாகு மீது விழித்திமைப்பாநின்றால்) எ-து, ஆன்மபோதஞ்சீவியாதடங்கின் அவ்வான்மாதோற்றாதருட் பூரண ந்தானாயிருக்கும் அப்பூரணமும் அப்போதஞ் சீவித்த மாத்திரத்தி ற்றான்தோற்றாது மறையுமவ்வான்மாவா யிருக்கும் இங்ஙனம் இப் போதமடங்கியும் விரிந்துநின்றால் அப்பூரணம் ஓர்காற்றோற்றியும் ஓர்கான்மறைந்தும் விழித்தல்போலு மிமைத்தல்போலுமாம் ஆல்

தெங்ஙனமெனின் (வெளியசைந்தாற்காற்றும்பழக்கமதைச் சாட்சியைப்போற்பார் எ-து, வெளியிலடங்கியகாற்றுத் தான்வேறொரு பொருளாய்த்தோற்றுதவ்வெளியேயாம் அவ்வெளியினின்று யசைந்தாலதனைவிடத் தனிருரு பொருளாய்க் காற்றென்பதாம் இக்காற்றுங்ய சாட்சியைப்போல உன்போதமருளிலடங்கயும் விரிந்துநின்றபழக்கமதையும் பார்த்தறிதியென்றவாறு- *

க-து. போதமடங்கி லருளாகியும் அஃதசையிலான்மாவாகியும்இங்ஙனம்வருதலின் அதனைச்சிறிதுந்தோன்றாதடக்கவேண்டுமென்பதாம். (சஎ)

(அ-கை.) ஆனந்தந்தோன்றுமிடமறிவித்தல்.

வேதாந்தம்போலிருக்கும்வேதாந்தசித்தாந்த... *
நாதாந்தபோதநழுவினர்க்கு - நேதி................ *
தனைக்கழன்றுநற்போதஞ்சார்பழியுஞ்சந்தி...... ...... *
ஞனக்கறிவானந்தமுதிக்கும்...... .......... ......... *

(இ-ள்.) (நாதாந்தபோதநழுவினர்க்கு வேதாந்தம் போலிருக்கும் வேதாந்தசித்தாந்தம்) எ-து, நாததத்துவத்தின் முடிவாயிருந்த வருளையுங்கடந்தமெய்ஞ்ஞானிகட்கு வேதாந்தம் போற்றுவிதநாட்டமின்றியிருக்கும் வேதத்தின்முடிவாகிய இச்சித்தாந்த நூலாதலின் (நேதிதனைக்கழன்றுநற்போதஞ் சார்பழியுஞ் சந்தி ஞனக்கறிவானந்தமுதிக்கும்) எ-து, நீக்குவதாயுள்ளதத்துவ மூட்டத்தாரையுங்கழன்று அவற்றின்முடிவினின்றவருளையும் பலாலையுந் துவிதநாட்டமின்றிக்கழன்றுநிற்றியெனின் உன்தற்போதமும் ஆணவவாசனையாகியசார்வுமொழியும் இவையொழிந்தவிடத்திற்கும்அதீதத்திற்குமிடையாகியசந்தியில்உனக்குஞானந்தந் தோன்றுமென்றவாறு. *

ப-ம். முப்பத்தாறுதத்துவங்களையுநீங்குமளவுமே ஆன்மபோதஞ்சீவித்தறிவது அருட்டெரிசன முதலானந்தா தீதப்படுமளவும் அப்போதஞ்சீவியாதடங்கி அவ்வனுபவங்களைப்பெறவேண்டுமாகலின்வேதாந்தம்போலிருக்குமென்றார். (சஅ)

(அ-கை.) முத்தியிலொன்றென்றும் இரண்டென்றுங் கூறக்கூடாதென்றறிவித்தல். *

தத்துவாதீதத்திமிர்ப்படங்கித்தற்செலவு...... ...... *
மத்தின்வாத்துமசையாத -சுத்தத்லை................ *

யொன்றென்றுனீசற்றுளதாவையாதலினு.................*
லன்றென்றதென்றேயறி.................................*

(இ-ள்.) (தத்துவாதீதத்திமிர்ப்படங்கித்தற்செலவு மத்தின்வாதித் துமைசையாத) எ-து, முப்பத்தாறுதத்துவத்திற்கும் அதீதமாயிருந்த ஆணவமலவாசனையெல்லாம் நீங்கியவிடத்து ஆன்மாச் சிவத்தைச்சென்றுகூடுதலுஞ் சிவம் ஆன்மாவைவந்து பொருந்துதலுமாகியஇருவகையசைவுமின்றியிரண்டற்றிருந்த (சுத்தத்தை யொன்றென்றுனீசற்றுளதாவையாதலினு லன்றென்றதென்றேயறி) எ-து, முத்திக்கட் சிவமொன்றுமேயென்று கூறுதியெனின் அச்சிவமொன்றென்றறிந்துகூறியநீயுஞ் சிறிதுண்டாவையாகலின் அம் முத்திக்கண்ணதிங்ஙனங்கூறுவது மன்றென்றறிதியென்றவாறு. *

ப-ம். உடம்பின்குணமன்றி அதன்கண் ணேறியிருந்த திமிர்ப்புப்போல் உயிரின்குணமன்றி யிதன்கண்ணேறி யிருந்தமையால் ஆணவத்தைத்திமிர்ப்பென்றார். திமிர்ப்படங்காவிடத்துக்கூடினதும்போன்றும் பிரிந்தது போன்றும் அனுபவந்தோன்றலி னங்ஙனங் கூறினர். *

(அ-கை.) இதுவுமது.

வெற்றவெறுமானந்தமேலீடேகேவலத்தி.......*
னிற்பதும்பாலந்தநிலைகழன்றோர் - சிற்போத.........*
வண்டங்கடந்தவமுதத்திற்றுடுலவு.......................*
வெண்டிங்களுங்கிரணமும்..................................*

(இ-ள்.) (வெற்றவெறுமானந்த மேலீடேகேவலத்தி னிற்பது போலந்தநிலைகழன்றோர்) எ-து, நிபதியிட்டவிடமெல்லாங் கழன்றுசென்று தற்போதமொழிந்து எல்லாமானந்த மயமாய்த் தோற்றும் அவ்வானந்த மேலீடாகியவிடமே கேவலாவத்தைப்பட்டு நிற்பதுபோலத்தோன்றும் இங்ஙனந்தோன்றும் அவ்வானந்த மேலீடாகியநிலையுநீங்கினோர் (சிற்போத வண்டங்கடந்த வமுதத்தினோடுலவுவெண்டிங்களுங்கிரணமும்) எ-து, அருளும் பரையுமாகிய ஞானாகாசத்தைக்கடந்துநின்ற ஆனந்தாமிர்தத்தோடு விளங்காநின்ற சிவசந்திரனோடுந் தாமதனைவிட்டுநீங்காத அந்தவானந்தாமிர்தகிரணமாகிநிற்பமென்றவாறு. *

ப-ம். ஆனந்தமேலிட்டபோது பிரவஞ்சமெல்லாம் ஆனந்தமயமாய்த்தோற்றுமாகலின் வெற்றவெறுமானந்தமென்றார் ஆனந்

துமேலீடுவிட்டுநியாமற்றேற்றுவது கேவலாவத்தை யனுபவத்தை யொன்றுந்தோன்று திருந்ததென்றுசொலல வருதல்போல் ஆனந்தானுபவஞ்சொல்லவருதலாற் கேவலத்தினிற்பதுபோலென்றார். அறுதியிலாணவத்தான்மறைபட்டிருந்த வுயிர்க்கனுபவஞ் சொல்லக்கூடாததுபோற் சிவத்திலிரண்டறக்கலந்துநின்ற அனுபவஞ் சொல்லக்கூடாதாகலின் ஆனந்தானுபவத்திற் குவமை கேவலாவத்தையைக்கூறினார். வெண்டிங்களுங் கிரணமுமென்று உவமை கூறினமையாற் சந்திரனைப்போலச் சிவம் அவனைவிட்டு நீங்காத வமுதம்போல ஆனந்தம் அவனையும் அமுதத்தையும் விட்டு நீங்காதகரணம்போல் ஆன்மாச் சிவத்தோடிரண்டறக்கலந்துநின்ற நிலையெனக்கொள்க. (ருய)

(அ-கை.) மாணாக்கனுக்குச் சகலகேவலங்களை முன்னரறிவித்துநீக்கிப் பின்னர்ப்போதமொழித்தற்குஉபாயங்கூறுது அச்சகலகேவலங்களுள் அந்நிட்டைகூறுதலாகாதென்றறிவித்தல். *

நினைப்புமறப்பறுத்துநீயறலைநீக்கா......... ......*
துணைக்கரையநில்லங்ஙனங்ஙனெனக்கதற்றல்... ... *
விப்பிரட்டமந்திரட்டம்வேலையிலேபோட்டசுரா......*
செப்படித்தன்ஞானச்சிறை.......... ...... .........*

(இ-ள்) (நினைப்புமறப்பறுத்துநீயறலைநீக்காதுணைக்கரையநில்லங்ஙனங்ஙனெனக்கதற்றல்) எ-து, முன்னர்நினைப்பு மறப்பாகிய சகலகேவலங்களை யறிவித்து நீக்கித் தன்னையறிவித்துப் பின்னர்த் தனக்குயிர்க்குயிராய்நின்ற திருவருளைத் தெரிசிப்பித்து இத்திருவருளோடுங் கூடியறிகின்றபோதந்தன்சுதந்தரமா யொன்றைப்பகுத்தறியாது அது அருளைமுன்னிட்டுக்கொண்டுதற் போதவொழிவைப் பெறுதற்குபாயங்கூறி அதனைநீக்காது அந்நினைப்புமறப்பாகியசகலகேவலங்களுள்ளைத்து உன்போர்தங்கரைய நீயப்படிநில் அப்படிநில்லென்று மாணாக்கனுக்கோர் நிட்டைபோலுங் கூறுதல் (விப்பிரட்டமந்திரட்டம் வேலையிலேபோட்டசுரை செப்படித்தன்ஞானச்சிறை) எ-து, மிகவும்பிரட்டமு மந்திரத்தாலொருவனுக்கு விநோதங்காட்டலும் கடற்கட்போட்டசுரையோடுஞ் செப்படி வித்தையுஞ்ஞானத்திற்குத் தடையாயுள்ள மலபோதமு மாமென்றவாறு. *

ப-ம். அந்தநிட்டை கூடுவோர் ஞானமுமன்றி முற்செய்தகிரியையாதிகளுமன்றி உபயப்பிரட்டராய்க் கருவிகளோடு மயங்கவின்வுப்பிரட்டமென்றும் ஒருவன்மந்திரத்தால் விநோதவித்தைதோ

ற்றுவபோலுள்ளை நானுவாகிய மாயாவிநோதங்க டோற்றமின்மந் திரட்டமென்றும்சுணாபோடு ஓர்துறைக்கட்சேராது அலேயாடுமை திதல்போல் அறிவுஓர்நிலேநில்லாது நினவோடுஞ் சுழல்வதனுலே வெயிலேபட்டசுணாயென்றும் ஓர்பந்துமுற்றேற்றிப் பின்னர் அ திற்பற்பலபந்துக்தாற்றுவபோல ஓர்காட்சிபோன் முற்றேற்றியது முற்றிலாது பற்பலகாட்சியாய்விரிதலிற் செப்படித்த லென்று மிங்ஙனந்தோற்றுவன சகலகேவலபோதமாகலின் ஞானச்சிறையெ ன்றுங்கூறிஞர் அங்ஙனங்கூறணிட்டையன்முகலின் கதற்றலென்றூர்.

(அ-கை.) சித்தாந்தமுத்தியோ வேதாந்தமுத்தியோ வுண்மையென்று ஐயுறுகின்றமாணக்கனுக்குக் காண்பானுங் காட்சியுமற்றவிடத்திரணடுஞ் சரியென்றறிவித்தல். ✱

சத்தாதிதத்துவம்போய்த்தானுமெதிருங்கழன்றாற்... ✱
சித்தாந்தவேதாந்தச்சீர்மையிலே - முத்தி......... ✱
யனிர்வசனமின்பவதீதமெனிலாங்கே................ ✱
பினமிடுதல்கன்மம்பிளாய்.......................... ✱

(இ-ள்.) (சத்தாதிதத்துவம்போய்த்தானுமெதிருங்கழன்றாற்சித்தாந்தவேதாந்தச்சீர்மையிலே) எ-து, சத்தமுதலிய முப்பத்தாறுதத்துவங்களையும் நீக்கி அவற்றின்முடிவினிற்ற தானுந்திருவருட்டெரிசனமுந்தல் ஆனந்தானுபவமேறப் அவ்வநளாற்முனறியாதறியும்அனுபவங்களாகிய எதிருங்கழன்று ஆனந்தாதீதப்பட்டா லிரணடென்றுகூறுஞ் சித்தாந்தசசிறப்பும் ஒன்றென்றுகூறும் வேதாந்தச்சிறப்புமாங்கில்லே (முத்தி யனிர்வசனமின்பவ தீத மெனிலாங்கேபிணமிடுதல்கன்மம்பிளாய்) எ-து, அங்ஙனம் அதீதப்பட்ட முத்திசொல்லிறந்தசுகாதீதமென்றூற்பிள்ளா யொன்றென்றுமிரண்டென்றும் அம்முத்தியைப் பின்னப்படக்கூறுதலபேதச் சேட்டையாமென்றவாறு. ✱

ப-ம். சத்தாதிவிடயங்கண்மேல் ஆன்மாவுக் கனிச்சைபிறந்தபோது சோத்திராதி பஞ்சப் பொறிகளும் அவ் விடயங்களை யவசரியாதுநீங்கும் அவைநீங்கவே முன்னவசரித்தபோது வசனமெயானதான விசற்கானந் தங்களை விடயீ கரிக்கும் வாக்காதிகளை நீங்கும் அவைநீங்கவே அப்பத்திநதிரியங்கட்கு மிடமாய் நின்ற பூதங்களிங்கும் அவை நீங்கவே விடயங்களைப் பற்றி நிச்சயித்த பிமானித்துச் சித்தித்து நிற்கும் அந்தக்காண வாசனை யொழியும்

௨௯ தொழிபவே விடயங்களைப் பொசித்தற் கோசொல்லியும் அவ்வெல்லையிலுண்டாம் விடயப் பயனும் அவ்விடயத்தைப் பொசிக்கும்போது ஓர்காலங்களினுமறியாததுபோலப் புதுமையும் இனிமேலு மிவ்விடயம் அநுபவிக்க வேணுமென்னுங் கருத்துமுண்டாக்குங்காலதத்துவ நீங்கும் இதுநீங்கவே விடயங்களைப்பொசிக்கும்போது இவனுக்கிவ்வளவுபொசிப்பென்றுமட்டறிந்து வரைந்துநிற்கும் நியதிநீங்கும் இதுநீங்கவே ஆன்மா விடயங்களையிச்சித்துப் பகுத்தறிந்துபற்றி யனுபவிக்க அவ்வான்மாவுக்கிச்சாஞானக்கிரியைகளையெழுப்பும் இராகம் வித்தை கலையென்னுமிம்மூன்றுநீங்கும் இவைநீங்கவே ஆன்மாவைப் பஞ்சேந்திரியங்களினும் கறந்துபோற் கொண்டு சுழற்றும் புருடனிங்கும் இதுநீங்கவேவிடயங்களைப் புசிக்குமிடத்து அவ்விடயமென்றுந் தானென்றும்இரண்டறமயக்கி நிற்குமாயைநீங்கும் இங்ஙனம் வித்தியாதத்துவங்களீங்கவே யிவற்றைப் பிரேரகப்பண்ணுஞ் சுத்தத்துவங்களைந்துநீங்கும் இங்ஙனம் தத்துவமுப்பத்தாறு நீங்கினவிடத்து ஆன்மாவினிச்சைமெத்தத்தில் விடயத்திற் செனித்ததுபோல் சிவத்தின்மேலிச்சை செனிக்கும்- ஞானம் விடயானந்தமசுத்தந் துக்கமநித்தியமென்றுஞ் சிவானந்தஞ் சுத்தசுகநித்தியமென்றும் பகுத்தறிந்துகொண்டுநிற்கும் கிரியை பலஜன்மபழக்கத்தால விடயங்கண்மேற்செல்லினும் அவற்றிற்செல்லாது மறுத்துநீக்கிச் சிவத்தையேநாடிநிற்கும்ஆன்மாவின் இச்சாஞானக்கிரியைகள் இங்ஙனநிற்பது- சிவன்மாக்களை முத்தியிலே யடைவிக்கவேணுமென்னும் இச்சைப்பட்டுநிற்பதாகலிற்றிருவருட்பதியும் இத்திருவருளை முன்னிட்டுக்கொண்டு பசாசதெரிசனமுதலிய அநுபவங்களையறியு மெதிருமவைகளையறிந்ததானுங்கழன்று ஆனந்தாதீதப்பட்டால் இரண்டென்றுமொன்றென்றுங்கூறக்கூடாதாகலின் சித்தாந்த வேதாந்தச்சீர்மையிலையென்றார். கன்மமென்பது சேட்டைமேலேறிற்று- ஆன்மாச்சத்தாதிகளைத் துரிசறவிடுத்தபோது தத்துவமுப்பத்தாறும் இங்ஙனநீங்கலிற் சத்தாதிகளை முன்வைத்துக்கூறினார். முத்திநிலையயறிவிப்பதுவேதாகமமுடிவாகலிற் சீர்மையென்றும் அம்முத்தியிலதனையறிந்துகூறும்போதமின்மையா லனிர்வசனமென்றுங்கூறினார். (உதாரணம் - சிவப்பிரகாசம்) மருவியபொறியிலொன்றுமாபூதமைந்திலொன்றுங்-கருவிகளுங்குநீங்காக்கலாதிகளைந்துங்கூடி - யொருபுலனுகருமிந்தவொழுங்கொழித்துயிருமொன்றைத் - தெரிதராதவனொழிந்தத்திரள்களிற்செயலிலாவே என்றுந் (திருவள்ளுவர் குறள

யொளி யூறோசைநாற்றமென்றைந்தின் வகைதெரிவான்கட்டேயுல
கு-என்றுமற்றும்வருவனவற்றூற்காண்க. (௫௧)

(அ-கை.) சிவஞானிமகிமையறிவித்தல்.

சிந்தைபயமிலச்சைசீலமருவருட்பு......... ......*
வந்தைவிடுஞ்சாந்திகுலமாசார - மிந்தவழி.... .......*
பெட்டுஞ்சிவயோகிக்கில்லையெனமாமறைக........ ...*
டட்டும்பெருமுரசந்தான்...... ........... ..... ......*

(இ-ள்.) (சிந்தைபயமிலச்சைசீலமருவருப்பு வந்தைவிடுஞ்சாந்திகுலமாசாரமிந்தவழிபெட்டும்) எ-து, எனக்கின்னதுவேண்டுமென்னுஞ் சிந்தையுந்துட்டமிருகாதியதோன்றிபக்காலச்சமும் இன்னாரின்னது சொல்லப்போமென்னுநாணமும் சாந்திராயணவிரதமுதலியசீலமும் ஈதசுத்தமென்னுமருவருப்பும் அகந்தையாற்செய்தபாவந்தீர்க்கும் புண்ணியமீதென்று செய்யுஞ் சாந்தியுங் குலாசாரமுஞ் சமயாசார முமாகிய இந்தமார்க்கமெண்வகையும் (சிவயோகிக்கில்லையெனமாமறைக டட்டும் பெருமுரசந்தான்) எ-து, சிவத்தோடிரண்டறக்கூடிநின்றசிவயோகிக் கில்லையென்றுமாமறைகளாகியபெரியம்பரிகைமுழக்குமென்றவாறு. *

க-து. மாமறைகட்டும்பெருமுரசமென்றது அவர்க்கில்லையென்றுபலபடக்கூறுதல் இவையெட்டுஞ்சிவத்திற்கின்முகலின் அதனையடைந்தசிவயோகிக்குமின்றென்பதாயிற்று. (௫௨)

(அ-கை.) இதுவுமது.

தத்துவத்தாரல்லார்சலசந்திரனொப்பார்...... .. ...*
தத்துவத்தாற்செய்யுந்தவாதவங்கள் - சுத்தக்..... ......*
ககனமழைபாற்சுழுவிக்காற்றைக்கனலாற்...... ......*
றெனஞ்செயல்போற்றெளி.........................*

(இ-ள்.) (தத்துவத்தாரல்லார்சலசந்திரனொப்பார் தத்துவத்தாற்செய்புந்தவாதவங்கள்) எ-து, மெய்ப்பொருளாகிய பாதத்துவத்தையடையாதார்தம்பாதத்தாற்செய்யுந் தவாதவங்களினும் அவற்றின் பயன்களினும் உயர்ந்துந் தாழ்ந்துஞ் சலத்திற் பிரதிபலிதமான சந்திரனைப்போலுமாவார் அப்பாதத்துவத்தையடைந்தோர்அருள்வடிவாயிருந்து செய்யுந்தவங்களும் அவற்றான்வரும்பயன்களும் இவர்க்கெங்ஙனமாமெனின் (சுத்தக்ககனமழைபாற்சுழுவிக்

காற்றைக்கனலாற்றெகனஞ் செயல்போற்றெளி) எ-து, நிருமலமா யுள்ளஆகாயத்தைமழையாற்கழுவிக்காற்றைக் கனலாற்சுடுவதுபோ லுமாமென்றறியென்றவாறு. *

க-து. ககனத்தை மழையாற் கழுவுதலும் காற்றைக்கனலாற்சு டுவது மின்றாயினபோற் றற்போதம்போய் பேய்பிடியுண்டவனா ப்போலும் திருவருளேவடிவாயிருந்த மெய்ஞ்ஞானிகள் திருமே னியினிகழுந் தவாதலங்கள் அவ்வருள்விளையாட்டேயன்றி அவர் அ வற்றைச்செய்ததும் அவற்றின்பயன் அவரைச்சார்வதுமின்றெனப தாயிற்று. தவாதவங்கள் தத்துவத்தாரல்லார்க்கும் வருவிக்கப்பட் டது தத்துவமென்றதீண்டுச்சிவத்தை. (ருரு)

(அ-கை.) இதுவுமது.

காலனுக்குப்பாவமென்றுங்காற்றுங்கதிரவனுஞ்...*
சீலமிலாவொன்றுஞ்சிவயோகி மேலொன்றைச்.........*
சுட்டுவதுதம்மைச்சுழற்றிவிடாதாட்டுமலக்............*
கட்டின்பிராந்திவலுக்காண்...... ...... ...............*

(இ-ள்.) (காலனுக்குப் பாவமென்றுங் காற்றுங் கதிரவனுஞ்சீலமி லாவொன்றுஞ் சிவயோகி மேலொன்றைச்சுட்டுவது) எ-து, உயிர்க ளைக்கொறலாற் காலனுக்குப்பாவமுண்டென்றும் அசுத்தநிலத்துச் சலித்தலானும் அந்நிலத்தெறித்தலானுங் காற்றுங் கதிரவனும்ஆசா ரமிலவொன்றுங் கூறுவபோற் சிவபூசையாதி நன்மார்க்கங்களைச்செ ய்கிலனென்றும்நீராடலாதி யாசாரமிலனென்றும் இவைமுதலியகு ணதோஷங்களைச் சிவயோகிமேறசுட்டிக்கூறுவது (தம்மைச்சுழற் றிவிடாதாட்டுமலக் கட்டின் பிராந்திவலுக்காண்) எ-து, தம்மைச் சுழற்றியாட்டப்பட்ட மலபந்தத்தினாற்றோற்றும் பிராந்தி சாமர்த் தியமாமென்றவாறு. *

ப-ம். சரியைகிரியாயோகங்களின் ஞானமொன்றுமே முத் திக்கேதுவாகலின் இஞ்ஞானத்தான் முத்தியை யடைந்திருத்தலிற் சரிதாதிகளையும் அவ்வுடம்பாதி யசுத்தங்களையெல்லாங்கடந்து சுத் தமாயுள்ள ஆனந்தவெள்ளத்தின் மூழ்கியிருத்தலின் நீராடலாதியா சாரங்களுஞ் செய்வதின்றிச் சிவயோகிசும்மாயிருப்பன் அவனங்ங னமிருப்பதுசரிதாதிகளைச் செய்வோர்க்கு மலமறைப்பாற்றெரியா து தம்மைப்போற்பார்த்து அவனையிகழ்தலான் மலக்கட்டின் பி

நாந்திவனுக்கோணென்றூர்.

க-து. காலனுக்குப்பாவமுங் காற்றிற்குங்கதிரவனுக்கும் அசுத்தமுமின்றுயதுபோ னன்மார்க்கஞ்செய்யாமையாற் பாவமுமாசாரமின்மையால் அசுத்தமும்அவர்க்கின்றெனபதுங்காண்க. (ருச)

(அ-கை.) இதுவுமது.

நாயேறிவீழ்ந்தென்னடாத்துகிலென்ஞானிக்குப் *
பேயாஞ்சகம்பழித்தென்பேணுகிலென் - ரேயார்... *
பெருமைசிறுமையிலைப்பின்னுமுன்னுமில்லை ...... *
வளாவற்றுவேண்டியசெய்வார்.................... ...*

(இ-ள்.) (நாயேறிவீழ்ந்தென்னடாத்துகிலென் ஞானிக்குப்பேயாஞ்சகம்பழித்தென்பேணுகிலென்ரேயார்) எ-து, நாய்மேலிவர்ந்தோனதினின்றும் வீழ்ந்ததினு லிகழ்ச்சியென்னை வீழாதிருந்து அதனைநடாத்தியதாற் புகழ்ச்சியென்னை அதுபோல ஞானிக்குப்பேய்க்கூத்தும்போற்ரேற்றும் இச்சகத்திலுள்ளா ரிகழ்ந்தால் அவர்க்கோர்சேதமென்னை, புகழ்ந்தால்ஓர்லாபமென்னை அவரோன்றுடுந்தோயார் (பெருமைசிறுமையிலைப்பின்னுமுன்னுமிலலை வளாவற்றுவேண்டியசெய்வார்) எ-து, அம்மேதல்நியுயர்ச்சிவந்ததென்றுபெருமையும் தாழ்ச்சிவந்ததென்றுசிறுமையும் அவர்க்கில்லை, பின்னுகியசகலமும் முன்னுகியகேவலமுமில்லையாகலித் சுத்தமாகிய அருள்வடிவாயிருந்து அளவின்றித் தாம் வேண்டியவாறேதிருவிளையாட்டாடுவாரொன்றவாறு.

க-து. இகழ்ச்சியாயுள்ள நாயேறிக்குவீழ்ந்தாலும் நடத்தினுலும் இகழ்ச்சிபுகழ்ச்சியின்றுயது போன்ஞானிகள்தமக்கிகழ்ச்சியாயிருந்தவுடம்பையிகழ்ந்தாலும் புகழ்ந்தாலும் அவையவர்க்கின்றெனபதாயிற்று. *

ப-ம். செம்பிற்காளிதம்போன்று உயிரையநாதியிற்பற்றியிருந்தசகசமலநீக்கற்பொருட்டு மாயையிற் றனுவாதிகொடுத்தலிற்சகலத்தைப்பின்னென்றும்ஆணவசம்பந்தமானகேவலத்தைமுன்னென்றுங்கூறினர். (ருரு)

(அ-கை.) ஞானம்பெற்ரேரைப்புகழ்ந்துகூறியபின்னர் இந்த ஞானத்தையருளிச்செய்தற்குத்தலைவராகியபிள்ளையாரைப்புகழ்ந்துகூறுதல். *

சன்மார்க்கமேமுதலாப்த்தாதமார்க்கத்தளவுந்... ...*
தன்மார்க்கமானவெங்கள்சம்பந்தன் - றன்னைத்... ... *
துறவியரசுசுகியோகிபோகி...............................*
யறவன்மறவனெனலாம்.......................... ..........*

(இ-ள்.) (சன்மார்க்கமேமுதலாய்த் தாதமார்க்கத்தளவுந் தன்மார்க்கமானவெங்கள்சம்பந்தன்றன்னை) எ-து, ஞானமுதற் சரிதையீறாய்ச்சொல்லப்பட்ட நான்குபாதத்திற்கு முரித்தாகிய சன்மார்க்கமுதல் தாதமார்க்கமீறாய்ச்சொல்லப்பட்ட இந்நான்கினையுந் தமதருணெறியா லெனக்குண்டாக்கிச் செய்தருளிய எமது சுவாமிகளாகியதிருஞானசம்பந்தப்பிள்ளையாரை (துறவியரசு சுகியோகிபோகி யறவன்மறவனெனலாம்) எ-து, எல்லாவற்றோடுங்கூடியிருந்தும் அவற்றோடுந்தாக்கற்றுநிற்றலிற் றுறவியென்றுஞ் சகல புவனங்களையுந்தாமேயிருந்துநடத்தலின் அரசென்றும் ஆனந்தமயனாயிருத்தலிற்சுகியென்றுஞ் சிவயோகத்தை யனுக்கிரகித்தலின் யோகி யென்றுஞ் சகலதன்மங்களும் ஓர்வடிவா யிருத்தலின் அறவனென்றும் ஆன்மபோதங்களை விழுங்கிக்கோடலிற் போகியென்றும் அடைந்தோர்மும்மலங்களைக்கோறலான் மறவனென்றுஞ் சொல்லலாமென்றவாறு. *

ப-ம். சன்மார்க்கம் சகசமார்க்கம் சற்புத்திரமார்க்கம் தாசமார்க்கமென நான்கு இவற்றுள் சன்மார்க்கமாவது நீயேநான் நானே நீயென்பது - சகசமார்க்கமாவது தோழனுந் தோழனும் - சற்புத்திரமார்க்கமாவது பிதாவும் புத்திரனும் - தாசமார்க்கமாவது ஆண்டவனும் அடியானுமெனக்கொள்க. (கூ)

(அ-கை.) ஞானிகட்குப் பத்திசெய்வார் வீடடைவா மொன்றறிவித்தல். *

தானல்லர்தன்னதல்லர்தத்துவசாலத்தலைவர்.........*
மேனிசதானந்தம்விளையுமிடம் - யானைக்கை...... ...*
போலேயிவனுடம்பிற்போகமெலாம்பூசையித... ...*
னாலேசகம்பிழைக்குமெண்..................... .........*

(இ-ள்.) (தானல்லர்தன்னதல்லர்தத்துவசாலத்தலைவர் மேனிசதானந்தம்விளையுமிடம்) எ-து, தனுகரணபுவனபோகங்களாயுள்ள தத்துவங்களெல்லாந் தமக்கயலாகலின் அவைதாமுமல்லாமல் அசுத்தந்துக்கம்அனித்தமாயிருத்தலின் அவைதமதுமல்லாமல் தத்துவங்க

ளோடுங்கூடியுங் கூடாதஜாலத்தோடும் அவற்றிற்குத் தலைவரா யிரு ந்தமெய்ஞ்ஞானிகள் திருமேனி சதானந்தமென்மேலு முண்டாகு மோரிடமாகலின் (யானைக்கைபோலே யிவனுடம்பிற்போகமெலா ம்பூசையிதனாலே சகம் பிழைக்குமென்) எ - து, எடுத்தபொருளி ன்பரிசமறிவதுபோலிருந்து அதனுளிருந்தநாசிக்குக் கெந்தவிடை யமுமாகும் யானைக்கைபோலிருந்த ஞானிகளது திருமேனியா லனு பவிக்கும்போகமெல்லாம் இத்திருமேனி யனுபவிப்பது போலிரு ந்து இத்திருமேனியுள்ளிருந்த பரிபூரண சிவத்திறதும் பூசையாம்- இப்பூசையினாலே ஜகத்திலுள்ளார் பிறவித் துன்பத்திற்குத் தப்பி வீட்டின்பத்தை யெய்துவாரொன்றறிநியென்றவாறு. *

ப-ம். முற்றனுகரணங்களை யானென்றும் புவனபோகங்களை யெனதென்றும் கருதிநின்ற தற்போதங்கேட்டு இப்போதறிவுதா மாயானந் தந்தமதாயிருத்தலிற் றானல்லர் தன்னதலரொன்றுரா· தே கத்திருந்தபோதத்தையுங் கருவிகளையும் விழுங்கிக்கொண்டு அதனு ட்சிவங்குடியாயிருத்தலின் மேனிசதானந்தம் விளையு மிடமென்று ம்போகமெல்லாம்பூசையென்றுங்கூறினார். (ருஎ)

(அ-கை.) திருவடியைபடைந்தோர் போகமனுபவிப்பினு ம ற்றையர்தமக்குச்சொன்னநெறிநிற்பதேயன்றிப் போகமனுபவிக்க லாகாதென்றறிவித்தல்.

பூசிமுடிப்பனவும்பூண்பனவும்பொற்றுகிலு... ...*
மாசைமிகுத்தவரசியர்க்காங் - காசிற்ற............ ...*
முண்டையர்க்காசீவன்முத்தனுக்குப்போகமல்லாற் *
குண்டையொப்பார்க்கேனிதுவாகும்................*

(இ-ள்.) (பூசிமுடிப்பனவும்பூண்பனவும்பொற்றுகிலு மாசை மிகுத்தவரசியர்க்காம் எ-து, சந்தனமாதிபூசப் படுவனவும் மல்லி கையாதிமுடிக்கப் படுவனவும், கொந்தளப்பொன்னோலை யாதிபூண ப்படுவனவும், பொற்சரிகைச்சேலையாதி யுடுக்கப்படுவனவு மாகிய இவைமுதலியபோகங்களெல்லா மனையவன்மிகவு மிச்சிக்கப் பட்ட சுமங்கலியாகிய வரசியர்க்கே யாகுமது போலும் (சீவன் முத்தனு க்குப்போகமல்லாற்காசிற்றமுண்டையர்க்காகா குண்டை யொப்பா ர்க்கேனிதுவாகும்) எ-து, சிவனதிச்சைப்படியே அவனது திருவடி சேர்ந்த சீவன்முத்தனுக்கே போகமன்றி மங்கலநீங்கிய அமங்கலி க்குப்போகங்களி லொவ்வேறனு மாகா வாறு போலுஞ் சிவனடிசே

ராது தவம்பண்ணுவோர்க்கும் அத்தவத்திற்குரியவிரதஞ்செய்துமு டிப்பதேயன்றிப்போகங்களிலொன்றேனுமனுபவிக்கலாகாது அஃ தன்றிக் குண்டையைப்போலுஞ் சரிதாதிதொழிற் செய்வோர்க்கு மிப்போகமனுபவிப்பதேனுமென்றவாறு. *

ப-ம். தன்முதலாகிய சிவத்தையிழந்து தவம் பண்ணுவோரை மூண்டையொன்றுகுறிப்பாற்கூறினர். குண்டைக்குத்தொழிற்செ ய்வதேயன்றி யவாயனோடுங் கூட்டரவின்மைபோற் சரிதாதிகளைச் செய்வோர்க்குத் தொழிற்செய்வதேயன்றி சிவத்தோடுங் கூட்டரவி ன்மையால் இவரைக்குண்டையொப்பாமென்றார். (ருஅ)

(அ-கை.) ஞானிகிரியைசெய்யினுஞ் செய்யாவிடினுஞ் சிறப் பாவனென்பதும் கருமிகிரியைசெய்யாவிடின் மிகவுமிழிவாவனெ ன்பதுமறிவித்தல், *

ஆனைமதப்பட்டாலலங்காரமன்றிநாய்.......... ......*
தானுமதப்பட்டாற்சரியாமோ - ஞானி........ ......*
தடைமீறினுஞ்சதிராகுங்கன்மி........ ..........*
கடைமீறிலாகாது காண்............ ......*

(இ-ள்.) (ஆனைமதப்பட்டாலலங்காரமன்றிநாய்தானுமதப்பட் டாற்சரியாமோ) எ-து, மதமேறு மூன்னுஞ் சிறப்புள்ளயானை பி ன்மதமேறித் தன்றடைகடந்துசேறினுஞ் சிறப்பேயாமஃதிப் பே யேறுமுன்னும் இழிவுள்ளநாய் தானுப்பின்பேயேறினல்அதுபோ லுஞ்சிறப்பாமோஅவைபோல் (ஞானிதடைமீறினுஞ் சதிராகுங் கன்மிகடைமீறிலாகாதுகாண்) எ-து, மூன்னின்றநிலை கடவாதிருந் தபோதுஞ் சிறப்புள்ள மெய்ஞ்ஞானி பின்னுனந்தமேலிட்டால் அ ந்நிலைசடந்துசேறினுஞ் சிறப்பேயாவன் கருமிநிலை கடவாமூன்னு ம் அம்மெய்ஞ்ஞானிகட்கிழிவாவன் தற்போதத்தால் அந்நிலைகடந் தபோதுமிகவுமிழிவாவனுகலிற் றன்னிலைகடக்க லாகாதென்றவாறு.

க-து. ஆனைமதமேறினல்மிகவுஞ்சிறப்பு நாய் பேயேறினல் மிகவுமிழிவு அவைபோல ஞானிதடைமீறினல்மிகவுஞ்சிறப்பு கரு மிகடைமீறினல் மிகவுமிழிவென்பதுங்காண்க. (ருகூ)

(அ-கை.) தீவிரதரபக்குவனுக்காசிரியர்கூறுமுபதேசமேபோ துமென்பதும் மற்றையபமூவர்க்கும் அவர்கூறுமுபதேசமொழியு மன்றி வேதாகமங்களாலுணர்த்தவேண்டுமென்பதுமறிவித்தல். *

அதிபக்குவத்தார்க்கனுக்கிரகஞ்செய்யும்...... ...*
புதுமைக்குச்சாத்திரங்கள்போதா - திதுவென்றுப்...*
பேறேயனந்தம்பிரகாரம்வந்தாலும்........................*
வேறேயனந்தம் விதம்.......................................*

(இ-ள்.) (அதிபக்குவத்தார்க்கனுக்கிரகஞ்செய்யும்புதுமைக்கு
ச்சாத்திரங்கள்போதாது) எ-து, தீவிரதரபக்குவமுடையார்க்குஞா
னானுக்கிரகம்பண்ணும் அதிசயத்திற்கு வெவ்வேறுவகைப்பட்டசா
த்திரங்களெல்லாம் போதாது அஃதெங்ஙன மெனின் (இதுவென்
றுப்பேறேபனந்தம் பிரகாரம் வந்தாலும் வேறேயனந்தம் விதம்)
எ-து. இதுவென்றொன்றைச் சுட்டுதற்கிடம்வைக்காதகூறும் உப
தேசப்பேறு அவர்க்கனந்தம்விதமாய்க்கூறுஞ் சாத்திரங்க ளாகும்
இங்ஙனம்வந்தபக்குவனும் அனந்தம் பேர்களுள்ளும்வேறு இவனை
யொழிந்தபக்குவர்களும் அனந்தம்விதமாவதொன்றவாறு. *

ப-ம். தீவிரதாபக்குவனதறிவு சிவத்தையன்றி மற்றொன்றை
யும்பகுத்துநாடாதாகலிற் சாத்திரங்கள் போதாதென்றார். மந்தம்
மந்ததரந்திவிரமென்னும் இம்மூன்று பக்குவரும் நானுபேதமாய்
வருதலினும் இவர்க்குபதேசம் நானுபேதமாகக் கூறிப்பக்குவப்ப
டுத்தவேண்டுமாகலினும் அனந்தம்விதமென்றார். (கூய)

(அ-கை.) பலாயோகத்தினிற்போரும் சீவன்முத்தராவா ரெ
ன்றறிவித்தல். *

அறியாமைநீங்கியறிவாயறிவே......... ... ......*
யறியாமலாயிரண்டுமற்றுப் - பிறியாதார்...... ...!...*
தன்னிழப்பின்ஞானசமாதிக்குச்சாதகரா...... ... ...*
மன்னிலக்கேசீவன்முத்தராம்.................... ......*

(இ-ள்.) (அறியாமைநீங்கியறிவாயறிவேயறியாமலாயிரண்டும்
றறுப்பிறியாதார்) எ-து, சகலகேவலமாகிய அறியாமையை நீங்கித்
தம்மையருளாறகண்டு அவ்வருளறிவாகிமுன்மலமாகிய அறியாமை
யின்மறைந்திருந்தாற்போல் இவ்வறிவுதானேயறியாமையாகி யித
னுண்மறைந்து இவ்வறிவென்பதுந் தானென்பதுமாகிய விரண்டு
மறதினைப்பிறியாதிருப்போர் (தன்னிழப்பின்ஞான சமாதிக்குச்
சாதகரா மன்னிலக்கேசீவன்முத்தராம்) எ-து, அங்ஙனமிருக்கவே

தற்சுதந்தரபோதமறும் இச்சுகந்தர போதமறவேபரை தானுகிஞா
னசமாதிக்குச்சாதகராவார் இச்சாதகம்வந்த அக்கணமே சீவன்மு
த்தனுமாவரரொன்றவாறு. *

ப-ம். இம்முறைவந்து பரையோகத்தினின்றோர்க்குச் சுகப்
பேறுஞ்சுகாதீதமுந்தானேகிடைக்குமாகலின் அந்நிலைக்கே சீவன்
முத்தராமென்றார். (சுக)

(அ-கூக.) சிவஞானமில்லார்க்குச் சிவவேடத்தாற்பயனின்றெ
ன்றறிவித்தல்.

மகவான்கண்பார்த்தவர்க்குமாணுப்த்தனக்குப்... ...*

பகமாயிலச்சைவிடாப்பண்பாய்ச்-செகமாணக்... ...*
கண்ணாரிபோல்வேடக்கண்ணுடிகாட்டுதவ... ........*
மெண்ணூழிகாலமிருந்தென்............... .........*

(இ-ள்.) (மகவான்கண்பார்த்தவர்க்கு மாணுய்த்தனக்குப் பகமா
யிலச்சைவிடாப்பண்பாய்)எ-து, இந்திரனது கண்களைப்பார்த்தபே
ர்க்குமாட்சிமையா யவ்விந்திரனுக்கல்குலாய் அவனதுள்ளே நாண
ம்விடாமுறைமையாயிருந்ததுபோல்) செகமாணக் கண்ணாரிபோ
ல்வேடக்கண்ணுடி காட்டுதவமெண்ணூழி காலமிருந்தென்) எ-து.
தவவேடத்தைப்பார்க்கும் பிரவஞ்சத்தோர்க்கு மாட்சிமையாயிரு
ப்பஇவ்வேடத்திற்குரிய ஞானந் தமக்கின்றென்று தம்முள்ளேநாண
முறவேசிபோன்மினுக்கிய வேடமாகிய கண்ணுடிகாட்டப்பட்டத
வத்தார்அளவிறந்தகாலமிருப்பினும் அவ்வேடத்தாற்பயனவர்க்கெ
ன்னையுளவென்றவாறு.

ப-ம். அவனுக்குக் கண்களைப் பார்க்குந்தோறும் இலச்சைவ
ரலால் இலச்சைவிடாவென்றார் அதனையிவர்க்குவமைகூறினமையா
ல்இவர்க்கும் இவ்வேடத்தைப் பார்க்குந்தோறும் இலச்சைவருமெ
ன்பதாயிற்று.

பொதுவிலுபதேசம்-முற்றிற்று.





௨

திருச்சிற்றம்பலம்.

# இரண்டாவது

# சத்திநிபாதத்

## துத்தமரொழிவு.



அஃதாவது, நால்வகைச்சத்திநி பாதத்துத்தமர்களது பிரவஞ்சப்பற்றொழிவுமுறைமைகூறினமையால் இவ்வதிகாரத்திற்குச்சத்திநிபாதத்துத்தமரொழிவென்றுபெயராயிற்று. இவர்இந்நூற்குரியவராகலின்அவ்வதிகாரத்தின் பின்னிவ்வதிகாரம்வைக்கப்பட்டது *

(அ-கை.) தமதாசாரியர் ஞானபக்குவர் நால்வர்க்குமுபதேசிக்குமுறைமையைத் தமக்கருளிச்செய்யும்போது ஆனந்தாதீதராயெழுந்தருளியிருந்தேயருளிச்செய்தாரொன்றறிவித்தல். *

சரிதாதிநான்கினுக்குஞ்சாலோகமாதி............*
வருமாறெனக்களித்தவள்ளல் - குருராயன்...........*
ஞானத்திற்பக்குவர்கணால்வர்க்குபதேச..............*
மானத்தையுநிகழ்த்தினான்...........................*

(இ-ள்.) (சரிதாதிநான்கினுக்குஞ்சாலோகமாதி வருமாறெனக்களித்தவள்ளல்குருராயன்) எ-து; சரியை கிரியை யோகஞ்ஞானமென்னும் இந்நான்குபாதத்திற்குஞ் சாலோக சாமீப சாரூபசாயுச்சியமென்னும் இந்நான்குபதமும்வருமுறைமையை எனக்கருளிச்செய்தவள்ளல் குருராயராகிய திருஞான சம்பந்தப்பிள்ளையார் (ஞானத்திற்பக்குவர்கணால்வர்க்குபதேச மானத்தையுநிகழ்த்தினான்) எ-து ஞானபாதத்திற்குரியமந்தம் மந்ததரந் தீவிரந்தீவிரதரமென்னும் இப்பக்குவமுடையோர் நால்வரிலக்கணமும் அவர்க்குபதேசிக்குமுறைமையையும் அருளிச்செய்தாரென்றவாறு. *

௧-து. முப்பத்தாறு தத்துவங்களையும் நியதிகளை வதுசரிதையவற்றை யறிந்துநீங்கியதன்னை யருளாலறிந்து அவற்றின்முடிவினி

பது சாலோகபதம்ஆங்குத்தனக்கறிவித்த அவ்வருளைத் தெரிசித்துப்பின்னருளென்றந் தானென்றும் பிறித்துநோக்காது தற்போதத்தையடக்குவதுகிரியை அவ்வருளேவடிவாயிருப்பது சாமீபபதம்அங்ஙனமிருந்து தற்போதஞ்சிறிதுந்தோன்றாதொழிப்பதியோகம்ஆங்குப்பனைதானுயிருப்பது சாரூபபதம் அப்பனை நீக்கத் திற்றேன்றும்ஞானுனந்தத்தைப்பெறுவது ஞானம் அந்த ஆனந்தத்திலதீதப்படுவது சாயுச்சியபதமாகலிற் சரிதாதிநான்கினுக்குஞ் சாலோகமாதிவருமாறிங்ஙனமெனக்கொள்க. (க)

(அ-கை.)இதுவுமது.

இன்னரிபைத்தொட்டவர்போற்கேட்டவளவுக்களவு...*
சொன்னதலவெங்கள்சுவாமியுரை - மன்னடத்தி... ...*
லானந்தமூர்ச்சிதர்கையாடகயாழ்தன்னிலே.......... ...*
தானுநலம்போலமொழிந்தான்........ ...................*

(இ-ள்.) (கின்னரியைத் தொட்டவர்போற் கேட்டவளவுக்களவு சொன்னதலவெங்கள்சுவாமியுரை) எ-து, வருடிவாசிப்பார்தாம்நினைத்துக்கேட்டபாட்டினளவுக் களவுகூறுங் கின்னரியைப் போன்றியாணினைத்துவினுவியமட்டிற்கு மட்டுவிடைகூறியதன்று எமதுசுவாமிகளாகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவாக்கு அஃதெங்ஙனமெனின் (மன்னடத்தி லானந்தமூர்ச்சிதர்கையாடகயாழ்தன்னிலேதானுநலம்போலமொழிந்தான்) எ-து, பரமேஸ்வரன் திருநடனத்தில் அந்நடனவதிசயத்தைப்பார்த்து ஆனந்தபரவசராய் நிற்போர் கைப்பிடித்தபொன்னிஞனியற்றப்பட்டயாழ் தன்னிலேதான்வாசிக்குநலம்போல் யான்கேளாதுங்கேட்க எனக்குபதேச மொழிகளையருளிச்செய்தாரென்றவாறு. *

க-து. அவரானந்தபரவசராய் நிற்கவுந் தெய்வ யாழ் வருடாது வாசித்தல்போலப்பிள்ளையார் ஆனந்தாதீதரா யெழுந்தருளியிருக்கவும் அவரதுதெய்வவாக்குநினையாதுகூறிற்றென்பதறிக. கின்னரிபைத் தொட்டவர்போற்கேட்டவளவுக்களவு சொன்னதலவென்றமையாற்கடாவும்விடையுந் தாமேயருளிச்செய்தாரென்பதாயிற்று. தெய்வயாழுக்குமேல் வேறியாழின்மைபோல்இந்த ஆசாரியர்க்குமேல் வேறுசாரிய ரிலரென்பதுங் காண்க. யாழுன்னிவாசியாதிருக்கச்சிதேயும் பிறர்க்கங்ஙனஞ்செய்ததுபோற்றேற்றலிற் றுனு

நலம்போலமொழிந்தானென்று திருவாக்குக்கதனை யுவமையாகக் கூறினர்.

(அ-கை.) ஆசாரியர்உபதேசத்தால் நால்வகைப் பக்குவருந் தெளிந்துகொள்ளுமுறைமையறிவித்தல்.

சும்மாதேபார்த்திருக்கச்சுத்தியாமுத்தமர்க்குத்.....*
தம்மாய்வார்க்கோருரையேசஞ்சீவ- மென்மேலு......*
மாற்றஞ்சகுனப்புள்வாக்குமதுவுண்ட..................*
போற்றும்பியின்பாட்டுப்போல்.........................*

(இ-ள்-) (சும்மாதே பார்த்திருக்கச்சுத்தியாமுத்தமர்க்குத் தம்மாய்வார்க்கோருரையே சஞ்சீவம் ) எ-து, தீவிரதரபக்குவர்க்கோர் மொழியுங்கூறாது ஞானசாரியர் மவுனத்தநோக்காற் பார்த்திருக்கவே யான்மசுத்தியாம் தீவிரபக்குவமுடையராய்த் தற்போதமொழிப்போர்க்கு அப்போதஞ்சிறிதேனும் பதைடாதொழிதற் கேது வாய்க்கூறுமோர்மொழியே சஞ்சீவம்போன்று சுத்தியாம் (மென்மேலு மாற்றஞ்சகுனப்புள்வாக்கு மதுவுண்ட போற்றும்பியின்பாட்டுப்போல்) மந்ததரபக்குவர்க்கு விட்டிசையாகிசைக்குஞ் சகுனப்புள்வாக்குப்போற்சிலசிலசொற்களாற்றெளிவிக்கச்சுத்தியாம் மந்தபக்குவர்க்கு மதுவைநிறையவுண்டதும்பியிடையறாது பாடும்பாட்டுப்போல் வேதாகம சாத்திரங்களானும் நானாவுபாய வுத்திகளானுமிடையறாதறிவிக்கச்சுத்தியாமென்றவாறு. *

ப-ம். திருநோக்கக்குறிப்பால் அந்நிலைதெரிந்துகோடலிற் சும்மாதேபார்த்திருக்கவென்றுஞ் சஞ்சீவத்தாலுடலஞ் சுத்தியாவதுபோல்ஒருரையா லான்மசுத்திபெறுதலிற் சஞ்சீவமென்றுஞ்சகுனப்புள்வாக்காற்றுணிவைத்தபொருள்கிடைத்தல்போற் சிற்சிலசொற்களான் மெய்ப்பொருளைத்தெரிந்துகோடலிற் சகுனப்புள்வாக்குப்போலென்றுமூர்ச்சித்துக்கிடந்த பெண்தும்பியை யாண்தும்பிசூழ்ந்துகொண்டு இடையறாது பாடியாடவேஅதற்கப்மூர்ச்சை தெளிந்துஇதனோடும்பறந்துகூடல்போல் நானாவுபாயவுத்திகளான் இடைவிடாதறிவித்தறிவினதாணவமூர்ச்சையை நீக்கித் தம்மோடுஞ்சேர்த்தலாற் றும்பியின்பாட்டுப்போலென்றுங் கூறினர் சுத்தியாவதுசகலகேவலங்களைநீக்கி அவற்றின்வாசனையோடெழுந்ததற்போதமொழிதல் - மென்மேலுமாற்றஞ்சகுனப் புள்ளென்றதனால்ஆந்தையென்பதாயிற்று. சகுனப்புள்வாக்குப்போலென்றும் மதுவுண்

டதும்பியின்பாட்டுப்போலென்றுங்கூட்டுக. (௩)

(அ - கை.) அறிவானந்தத்தழுந்தியபோதம் விரிந்து விடயானந்தத்திற் செல்லாதோரியல்பிற்றாய் நின்றோர்க்கே யிவ்வானந்தமாறாதுகிடைக்குமென்றறிவித்தல். ✻

முலைமுதிரநாணமுதிர்ந்தடங்கிமூடல்............✻
கலவியிலேநக்கினத்தைக்காட்டச்-சலனையய.........✻
னாலுந்தம்பனைசெய்தானந்தமாக்குவது.............✻
போனாலாமிந்தப் பொருள்.......................✻

(இ-ள்.) (முலைமுதிர் நாணமுதிர்ந்தடங்கிமூடல்கலவியிலேநக்கினத்தைக்காட்ட) எ-து, ஓர்பேதைப்பெண் தனதுமுலைமுதிரமுதிரநாணமேன்மேன்முதிர்ந்து பிறபுருடரோடு முன்போனகையாடலாதிசெய்யாதடங்கி அம்முலையினைமறைத்து தனதுசுயபுருடனுக்குக்கூட்டரவின் கண்ணக்கினத்தைக்காட்ட அதுபோலும் ஒருவனறிவுமுதிரமுதிர முன்போலவிடயங்களிற் செல்வதற்கு நாணமுதிர்ந்து அவ்விடயங்களிற் செல்லும்போதத்தை யுள்ளடக்கித் திருவருளின்மறைத்துநிற்றல் அப்போதத்தையானந்தத்திற் கொப்பிக்கவெனின் அங்ஙனமொப்பிக்குமாறேதில்லாமல் (சலனையனாலுந் தம்பனைசெய்தானந்தமாக்குவது போனாலாமிந்தப்பொருள்) எ- அ போதச்சலனையானாலும் விடயப்பயனை யனுபவிப்பதானாலும் இவ்விடயப்பயனை நீக்கி அப்போதச்சலனையையடக்கி அப்போதத்தையானந்தமயமாக்குவதானாலும் இவ்வானந்தப்பொருளோரியல்பிற்றாய்த்தோற்றாது அங்ஙனஞ்செய்வன போமாயி னிப்பொருளோரியல்பிற்றாய்த் தோற்றுவதாமென்றவாறு. ✻

ப-ம். முதிர்ந்தபெண்முலையையும்அல்குலையும்பிறபுருடருக்குக்காட்டாதுமறைத்துச் சுயபுருடனுக்குக்காட்டுதல்போல் அறிவுமுதிர்ந்தோர் தற்போதத்தை விடயங்களிற் செல்லவொட்டாது மீட்டுள்ளடக்கி அதனைச்சிவானந்தத்திற்கொப்பிக்கவேண்டுமாகலின் அங்ஙனமுவமை கூறினர்' போதம்விடயங்களிற் சென்றழுந்தியும் ஆனந்தத்திற் சென்றழுந்தியும் இங்ஙனமாறிநிற்குமெனின் ஆனந்தமுமாறித்தோன்றுமாகலின் ஆனந்த மாக்குவது போனாலாமிந்தப்பொருளென்றார். ஆனாலுமென்பதனைச் சலனை யென்பதனோடும் ஆனந்தமாக்குவதென்பதனோடுங்கூட்டுக. (௪)

(அ- கை.) பதிபசுபாசங்களினதுண்மையை வேதாகமங்களா

லுணர்ந்தாலும் அப்பதியைச்சுவானுபவத்தா லுணரார்க்குப்பயனி லையென்றறிவித்தல். *

பஞ்சமலமும்பசுவனந்தமும்பதியு.................*
மஞ்சுதொழிலுமவத்தைகளுங் - கிஞ்சறிவுங்...... ...*
கேட்டுசரிதாதிசெய்துகிலேசங்கெடாக்......... ......*
காட்சிமெழுகிற்கனகங்காண்......................*

(இ-ள்) (பஞ்சமலமும்பசுவனந்தமும்பதியு மஞ்சுதொழிலும் வத்தைகளுங் கிஞ்சறிவுங்கேட்டு) எ-து, ஆணவ மாயை காமியந்திரோதைமாமாயை யென்று கூறப்பட்ட பஞ்சமலங்களின திலக்கணமும் இம்மலங்களான் மறைபட்டிருந்த அனேகமாயுள்ள பசுவின திலக்கணமும் இப்பசுபாசங்கட்கு முதன்மைபா யேசமாயிருந்த பதியினதிலக்கணமும் இப்பதிபாற் செய்பாநின்றபஞ்சகிருத்தியவிலக்கணமும் இப்பஞ்சகிருத்தியத்தானடக்குஞ் சாக்கிராதி யைந்தவத்தையினதிலக்கணமும் இவ்வைந்தவத்தைகள்தோறுஞ் சுழலும் ஆன்மபோத விலக்கணமுங் கேட்டறிந்தும் (சரிதாதிசெய்துகிலேசங் கெடாக் காட்சிமெழுகிற்கனகங்காண்) எ-து, சரியைகிரியாயோகங்களைச்செய்தும் அப்பாசத்தைநீங்கிப் பதியைபடைந்து பிறவித்துன்பத்தை நீக்க மாட்டாதாரறிவுமாற் றறியுமெழுகி லடங்கியகனகம்போலுமாமென்றவாறு. *

ப-ம். உரைத்தொட்டவேறிய கனகமுருக்கி யெடாமையின் மெழுகின்மறைந்தாற்போலத் திரிபதார்த்தங்களின துண்மையைக்கேட்டறிந்தவறிவு சுவானுபவத்தான் வெளியாகாது மலத்துண்மறைந்தமையான்மெழுகிற் கனகங்கா ணென்றார். அவரறிவுபிறர்க்குக்காட்சியாய்த்தோற்றலான் அதனைக்காட்சியென்றார். (௫)

(அ-கை.) சிவானந்தத்தைப் பெருதிருந்தும் பெற்றேனென்றசத்தியங்கூறன் மிகவும்பாவமென்றறிவித்தல். *

வாதிவடத்தினமுமாமருத்துவன்பிணியுஞ்.........*
சாதித்தவீரன்மேற்றம்பலமுந் - தீததுபோன்... ...*
ஞானத்திலின்பைநசிப்பித்துநானதுவா................*
மோனத்தையாமொழிவிப்போர்.................. ......*

(இ-ள்.)(வாதிவடத்தினமுமாமருத்துவன்பிணியுஞ் சாதித்தவீரன்மேற்றம்பலமுந்தீததுபோன்) எ-து, பஞ்சலோகங்களையும்பொ

ன்ருக்குவேனென்றுகூறும் இரதவாதிமிடியனுயிருத்தலும் பிறர் பிணிகளையெல்லாம் போக்குவேனென்றுகூறும் மகாவயித்தியன் பிணியனுயிருத்தலும் பகைகளையெல்லாம் வென்று சாதிக்கவனெ ன்றுகூறும் மகாவீரன்மேற்பிறர்போட்டதம்பல மிருத்தலுங்குற்ற மாமதுபோல் (ஞானத்திவின்பைநசிப்பித்து நானதுவாமூனத்தை யாமொழிவிப்போர்) எ-து, சுவானுபவத்தான் ஞானானந்தத்தைப் பெறாது அதனைவிடயச்சேற்றாற் கெடுப்பித்து விடயச் சேற்றில மூழ்ந்திநின்று அவ்வானந்தத்தையடைதற் கேதுவாய்க் கூறும் ஞான சாத்திரங்களைக் கேட்டறிந்தமாத்திரத்தில் நான் அவ்வானந்தமயனு னேனென்று கூறுங்குற்றத்தை யாவர்நீக்குகிற்பாரொன்றவாறு, *

க- து. மிடிபிணிதம்பலம் அவரிடத்திருத்தலாற் றான்சொன் னவாறு செய்பவரலரொன் றறிந்தாற்போல் விடயப்பற்று விடா மையான் இவனிங்ஙனங்கூறுதலேயன்றி அதனையடைந்திலனென் பதறிக. மிடியாதியவர்க்குக்கூறினமையான் விடயமிவர்க்கு வரு விக்கப்பட்டது. இங்ஙனங்கூறுதல் மிகவுந்தோடமாகலி னூனத் தையாமொழிவிப்போமென்றார். (சு)

(அ-கை.) ஆசாரியருபதேசங் கூறுமிடத்து மாணாக்கன்சகல கேவலங்களிற்றாக்கற்றுநின்றுகேட்பின்மூவகைவினைகளும்அறுமெ ன்றறிவித்தல். *

மயலற்றார்கேட்கமகிழ்ந்துரைத்தவார்த்தை....... ...*
யயனுக்குபதேசமாகுந் - துயிலாத்............ ......*
தொறுவனைப்போனின்றுகேடுசேழுக்குநோயு...... ...*
மறுமூலாத்தோநாமூனைப்பதை................ .....*

(இ-ள்.) (மயலற்றார்கேட்க மகிழ்ந்துரைத்தவார்த்தை யயனு க்குபதேசமாகும்) எ- து, தேகாதிப்பிரவஞ்சங்களை யானெனவதெ ன்று கருதுமயக்கமற்ற அதிபக்குவத்தார்கேட்க ஞானாசாரியர் ஆ னந்தமகிழ்ச்சியாலருளிச்செய்த உபதேசமொழிகள் அப்பக்குவர் க்கன்றியயலிருந்தோர்க்குமுபதேசமாகுமாதலின் அம்மொழிகளை (துயிலாத் தொறுவனைப்போனின்றுகேடுசேழுக்குநோயு மறுமூனா த்தோநாமூனைப்பதை) எ- து, சாக்கிரத்தினில்லாச்சொப்பனத்து ஞ் செல்லாநிடையான தன்மையாய்த் துயின்றுந் துயிலாத விடய னைப்போன்று கேவலசகலங்களிற்றாக்கற்று நின்றுகேட்டி, யிங்ஙனங் கேட்டியெனிற் றாசும்மேலேறுமழுக்குப் போன்றேறுவதாய வாக

மிபதுன்பழமொழியும் யாமுனக்குச் சொல்லவேண்டியபுத்தியை
ச்சொன்னோம் இதனைநீயறிதியென்றவாறு. *

ப - ம். இடையன் கோற்கண்டுபிலாது துயின்று மாட்டுமணி
யரவத்தைக்கேளாது கேட்குமுறைமைபோல் இப்போதுஞானோப
தேசங்கேட்கும்போதே சகலகேவலங்கள் தாக்காது கேட்போன்
அநுபவமுற்றும்பெற்று முன்னிலைச்சுட்டுமொழிந்து நிற்பனுகலி
ன் தூசமூத்துநோயுமறுமென்றார். தூசமூக்குநோயு மறுமென்றவு
மையாற்சஞ்சிதபிராரத்தமு மறுமென்பதாயிற்று. அஃதெங்ஙன
மெனில் கருவிகள்சடமாகலின் அவைகளான்மாவைவந்து கூடமா
ட்டா ஆன்மாக் கேவலத்தின் மறைபட்டுக்கிடத்தலின் அவைகளைச்
சென்று கூடமாட்டா கருவிகளைப் பிரேரகம்பண்ணி யிக்கேவல
மறைப்பைநீக்கிச் சகலத்தில்வைத்துப்பெத்தத்திற் றேகாதிபிரவஞ்
சங்களையறிவிப்பது போலவுங் கீழாலவத்தைப்படுத்திக் கேவலத்தி
ல்வைப்பது போலவுமுத்தியில் இக்கேவலசகலங்கள் தாக்காதுவைத்
து சுத்தாவத்தையிற்செலுத்திச் சுத்தத்தில்வைப்பதுந் திருவருளே
யென்றும் இஃதன்றிக் கருவிகளைக்கூட்டுவித்தபோது ஆன்மாவி
ற்குச் சுதந்தரவறிவுதோன்றித் தானல்லாததேகத்தைத் தானென
க்கருதிநின்று யானேயெல்லாவற்றையுமறிவேன் எல்லாவற்றையுஞ்
செய்துமுடிப்பேன் எனக்கெதிரொருவருமின்றென நிற்கும் இங்ங
னநிற்பதனால் இராகிதங்களும் இவற்றான்வரு மிருவினைகளுந்தொட
ரும் இத்தொடர்ச்சியால் அளவிறந்தபிறவிகளி னெடுங்காலஞ்சுழல்வ
திங்ஙனமென்று அந்தப்புல்லறிவைவிட்டுநீங்கிக் கானலைநீரென்றும
யங்கிக்கண்டபோதும் நீரைநீரென்றுள்ளபடி கண்டபோதுந்தனக்
குக்காட்டிநின்றது கதிரொளியென்று கண்கண்டு நின்றாற்போல்
ஆன்மாப் பொய்யைமெய்யென்றுமயங்கி நின்றறிந்தபோது மெ
ய்யைமெய்யென்று தெளிந்துநின்றறிந்தபோதுந் திரோபவித்தும்
அநுக்கிரகித்தும் அறிவித்துநின்றது திருவருளேயென்றும் உள்ள
படியறியிற்றானென்பதும் இந்தமுறைமையே அவனவளது வென்னு
முன்னிலைக்கண்ணுந் திருவருணடப்பித்ததென்றுகண்டு அம்முன்
னிலைகளாற் றனக்கோரிராகிதங்கள்வந்தகாலை அம்முன்னிலைகளை
நாடாது வினைக்கீடாய்த் திருவருள்நடப்பிக்கிறதென்று திருவருளைநா
டிநிற்றலாற் பிறவொன்பதும்போய் எங்குந்திருவருளாய்க் காண்டலா
ல் ஆகாமியமறுமென்பதும் ஞானசாரியர்கிருபாநோக்கத்தாற் சஞ்
சிதமறுமென்பதுமுண்மை; முற்செனனம்புரிந்தவல்வினையுடலுட
னாலுமென்றும், வினைப்போகமேயொருதேகங்கண்டாய் வினைதா

ஞெழிந்தாற் றினைப்போதளவுமில்லாது கண்டாயென்றும் இங்ஙன மீசுரவாக்கியம் - ஞானிகள் வாக்கியங்களிருக்க நீர் பிராரத்தவினையும் போமென்றதென்னையெனின் ஈண்டுக் கூறியமுறையே நின்றி யான்பிறவொன்பதொழிந்து திருவருளே கண்ணாகச்சென்று சிவதெரிசனம்பண்ணி அதிலதீதப்பட்டு நின்றசிவயோகி பஞ்சகிருத்தியங்களையுங்கடந்து பரமுத்தனைப்போலிருப்பனாகலினும் அவன் பிராரத்தம்வருவன போவதென்றி யறிவதேயன்றி அவனைவாதியாதாகலினும் அவனுக்குப்பிராரத்தமுமின்றென்றறிதி - இன்னும்அப்பர் மாணிக்கவாசகர்முதலாயினார்சரித்திரங்களினானுங்காண்க. யான்பிறவொன்பதனால் வினையேறுமென்பதற்குதாரணம் (திரட்டு) தானலாதொன்றுதன்னைத் தானெனக் கருதிக்கொண்டே - யானெலாஞ்செய்தேனென்னு ஞானமஞ்ஞானமத்தா - லீனமார்வினையிரண்டா மிருவினையாலுடம்பா - மூனமாருடம்பா லூழா மூழினாலாகாதுண்டோ, (சித்தியார்) யான்செய்தேன் பிறர்செய்தாரென்னதி யானென்னுமிக்கோணை ஞானவெரியால்வெதுப்பி நிமிர்த்துத்- தான்செய்வதின்றிடவத்தத்துவன் றானே நேசனையளித்து முன்னிற்பவினையொளித்திட்டோடும் - நான்செய்தேனெனுமவர்க்குத் தானங்கின்றி நண்ணுவிக்கும்போகத்தைப்பண்ணுவிக்குங்கன்ம - மூன்செயாஞானந்தானுதிப்பினல்லா லொருவனுக்கு மியானெனதிங்கொழியாதன்றே. (சிவஞானதீபம்) யான்செய்தேன் பிறர்செய்தாரெனுங்கோணீங்கியென்று மற்றும் வருவனவற்றுற்காண்க. பிராரத்தமென்பதற்குதாரணம். (திருவருட்பயன்) மும்மைதரும் பயனுமூளாவர்மூதறிவார்க் கம்மையு மிம்மையேயாம் - என்பதனானுங் காண்க. (எ)

(அ- கை) இருவினையொப்பு மலபரிபாகமுடையோர்க்குப் பக்குவம்நால்வகையாயிருக்குமென்றறிவித்தல். ※

அண்டமுதலாயனந்தம்பிறப்பின்விதங்............※
கொண்டுநரராய்வினைகள்கூடுறுத்துத் - தொண்டிர்...※
சரிதாதிசெய்துதவச்சார்பினிற்போர்க்........ ... ......※
கரிதானபக்குவநாலாம்.......................... ... .........※

(இ-ள்.) (அண்டமுதலாயனந்தம் பிறப்பின்விதங் கொண்டுநரராய்த்தொண்டிற் சரிதாதிசெய்துவினைகள்கூடுறுத்து) எ-து, அண்டசஞ்சுவேதசம்உற்பிசம் சராயுசமென்னும் இந்நான்கினிற்றோற்றும் எழுவகைப்பிறவியினுண்டாய எண்பத்துநான்கு நூறாயிரம்

யோனிபேதங்களினும் அனந்தமுருக்கொண்டு மாறிமாறிச்சுழன்றலைவதலைந்து பின்புநரவடிவுகொண்டு இவ்வடிவு அனந்தகோடியிற்சிவபுண்ணியநேரிட்டு இச்சிவபுண்ணியத்தாற் சிவத்தொண்டுபூண்டு இச்சிவத்தொண்டினாற் சரியைகிரியா யோகங்களைச்செய்து இச்சரியைகிரியாயோகங்களால் இருவினையொப்பு மலபரிபாகம்பிறந்து (தவச்சார்பினிற்போர்க் கரிதானபக்குவநாலாம்) எ-து, உயிர்ச்சார்பு பொருட்சார்வுகளை நீத்துத் தவச்சார்பினிற்போர்க்குக் கிடைத்தற்கரிதாகிய மந்தம் மந்ததரந் தீவிரந் தீவிரதரபக்குவநான்குளவாமென்றவாறு. (அ)

(அ-கை.) அப்பக்குவர்க்கு ஞானசாரியனைத்தேடுந் தேட்டம் இங்ஙனம்பிறக்குமென்றறிவித்தல். *

மேலைச்சுகம்வெறுத்துமேலொடுகீழற்றுவெறுஞ்... *
சாலப்பொய்பாயுடலார்தானுர்தன் - மூலமா... ... ... *
மொன்றுதெரிவிப்பானையெய்துவோமென்றிரண்டா... *
யொன்றுபடத்தேட்டமுதிக்கும்......... ... ...... *

(இ-ள்.) (மேலைச்சுகம்வெறுத்துமேலொடுகீழற்றுவெறுஞ்சாலப்பொய்பாயுடலார்தானுர்தன் மூலமாமொன்று) எ-து, மேலாகியவனிதாதிசுகங்களைவெறுத்து இனிமேலடையும் பதமுத்திகளினும் பூலோகபோகத்தினும்விருப்பற்று அவைகளையெல்லாம்மிகவும்வெறும்பொய்யாய்க்கண்டுஇவ்வுடலுனியாதுஇதனுளிருந்ததானியாவனெனக்குமுதலாயுள்ளபதியாதென்றுவிசாரித்து இவையெம்மாலறியக்கூடுதில்லையாகலின் (தெரிவிப்பானையெய்துவோமென் றிரண்டாயொன்றுபடத்தேட்டமுதிக்கும்) எ-து, இவற்றையறிவிக்குஞ்ஞானசாரியனையடைவோமென்றுகருதித் தானென்றுஞ் சிவமென்றுமிரண்டாய்ப்பகுத்தறிவதாகிப் பின்னர் அச்சிவத்தோடொன்றாகஇங்ஙனம்பதத்தறிவித்துத் தானுக்குமந்த ஞானசாரியனொங்குளமொன்றுந்தேடித்தேட்டம்பிறக்குமென்றவாறு. *

பா-ம். முன்போன் மெய்யாய்த்தோற்றமையின் வெறுஞ்சாலப்பொய்யாயென்றார். (கூ)

(அ-கை.) ஞானசாரியனைத்தேடும்போது பிறக்குங்குணமறிவித்தல். *

வேர்க்குங்கண்ணீர்ததும்புங்கம்பிக்குமெய்நடுங்கும்
வார்த்தைநழுவுமனம்பதறுங்-கூர்க்கதமாய்க்... ...... *

சாந்தருமுரோமாஞ்சலியாகுங்காதலித்தார்க்... ... ...*
கேய்ந்தகுணங்காணிவையெட்டும்.........................*

(இ-ள்.) வேர்க்குங்கண்ணீர் ததும்புங்கம்பிக்குமெய்நடுக்கும் வார்த்தைதழுவுமனம்பதறுங் சார்க்கதமாய்க் காந்துருமுரோமாஞ்சலியாகும்) உடற்கண்வேர்வைபரும்புங் கண்களிலானந்த நீரொழுகு முண்ணடுங்கு முடனடுங்கும் வசனங் குழறும் ஆசாரியனை யென்றைக்கடைவோமென்று மனம்விரைந்து நாடும்மேகம்போல் உள்ளேகுழறியுளமெல்லாம் வெதும்பும்உடல் மயிர்க்குச்செறியும் (காதலித்தார்க் கேயந்தகுணங்காணிவையெட்டும்) எ-து, ஆகிய இவை யெண்வகையும் ஞானசாரியனை விரும்பித் தேடுவார்க்கியைந்தகுணங்களாமென்றவாறு. *

(அ- கை) ஞானசாரியர் எதிர்ப்படாதபோது அவர்க்கிங்ஙனம்அவத்தைகள்தோற்றுமென்றறிவித்தல். *

அனைநோட்டஞ்சிந்தைபெருமூச்சறியாச்.........*
சுரமூட்டமெல்லாந்துறத்த - லுனைதோற்று... ......*
மானமவுனம்விகளமறவைசா...... ......... .........*
வானவிவைபத்துமவத்தை............ ...... .........*

(இ-ள்.) (அனைநோட்டஞ்சிந்தைபெருமூச்சறியாச் சுரமூட்டமெல்லாந்துறத்தலுனைதோற்றுமானம்) எ-து, மவுஞ்சகமுகத்தை விட்டு அகமுகமாய் நிற்றலினருகியநோக்கமும் எப்போது ஞானசாரியனையறிந்தடைவோமென்னுஞ் சிந்தனையும் அவனைநினைக்குந்தோறுநெட்டுயிர்ப்பெறிதலும் இந்நினைவுமேலீட்டாற்பிறராலறியக்கூடாதசுரமேலெழுதலும் இதனாலுணுறக்கமுதலிய வெல்லாந்துறத்தலும்இதனைப்பிறருக்கியாதென்றுசொல்கோமென்று சொல்லாதடக்குமானமும்(மவுனம்விகளமறவைசாவானவிவைபத்துமவத்தை எ-து, இம்மானத்தால் ஒருவரோடொன்றுஞ்சொல்லாதிருக்குமவுனமும் இங்ஙனங்கூறும்விசாரமேலீட்டாற்பித்தமேறலும் இந்தஅவத்தைகள்படுங்காலத்தும் அந்தஞானசாரிய னெதிர்ப்பட்டாராயின் மூர்ச்சித்தலுமிறத்தலுமாகிய இவைபத்தும்அப்பக்குவர்க்குத்தோற்றுமவத்தைகளாமென்றவாறு. *

மறவைசாவென்னுமிரண்டவத்தையுந் தீவிரதரபக்குவர்க்கெனக்கொள்க. (அ)

(அ-கை.) ஞானசாரியர்தமக்கெதிரே யெழுந்தருளியபோது பக்குவர்வணங்கி வினவுமுறைமையும் இவர்க்கவர் பண்ணுந்தீக்கை யிதுவென்பதுமறிவித்தல். *

தேட்டத்திரண்டதிருமேனியுட்புறம்பாய்க்... ...*
காட்டுமளவேகளைபுரண்டு - கேட்ட..................*
வதிபக்குவத்தார்க்ககம்புறமென்றூறு...............௮
விதிவைத்ததீக்கையாமெண்..............................*

(இ-ள்.) (தேட்டந்திரண்டதிருமேனியுட்புறம்பாய்க் காட்டுமளவே) எ-து, தமதுயிருள்ளிருந்துந் தெரியாது தாம்தேடுந்தேட்டமாகியபேரானந்தந்தானே திரண்டஞானசாரியர்தமது திருமேனியைஅவர்கண்ணாற்காணும்படி புறம்பாய்க்காட்டு மாத்திரத்திலே (களைபுரண்டுகேட்ட வதிபக்குவத்தார்க்ககம் புறமென்றூறுவிதிவைத்ததீக்கையாமெண்) எ-து, அன்பெனு மாறுகளைபுரண் டெழுந்து அவ்வாசாரியனைப்பலதரம் வலம்வந்து அட்டாங்கமுதலிய வணக்கஞ்செய்து பின்னெழுந்து அஞ்சலியத்தராய்நின்று ஆனந்தக் கண்ணீரொழுக அனேகந்தோத்திரம்பண்ணி எமது சுவாமிகளடியேற்கிவ்வுடல்வந்தவாறியாது இதனுள்ளிருந்த யானியாவன் எனக்குமுதலாயுள்ள மெய்ப் பொருளியா தென்றுகேட்ட அதிபக்குவமுடையோர்க்கு வேதாகமங்களில்விதித்துவைத்தபடி அவர்பண்ணுமகத்தீக்கை மூன்றுபுறத்தீக்கைமூன்றென் றூறுவகையா யிருக்குமென்றறிதியென்றவாறு. *

தீக்கைகளாறுவன - திருநோக்கு—பரிசம் - வாக்கு - பாவனை நூலியோகமென்டன இவற்றுட்டிருநோக்குபாவனையோகமென்னும் இம்மூன்றுமகத்தீக்கை, பரிசம்வாக்குநூலென்னும் இம்மூன்றும்புறத்தீக்கையெனக்கொள்க. உள்ளென்பதை யுயிருள்ளிருந்துமெனக்கொள்க. (௬௦)

(அ-கை.) ஞானசாரியர்மாணக்கனுக்குத் தீக்கையான்மும்மலங்களையுநீக்குமுறைமையறிவித்தல்.

பரிசித்துஞ்சிந்தித்தும்பார்த்துமலமாயை .........*
கருமத்தையெஃலாங்கழற்றிற் - சரிதாதி.................*
வாதனையாம்போதமயக்கத்தைவாக்காலே.............*
போதைசெய்துபோக்கிவிடப்போம்......................*

(இ-ள்.) (பரிசித்துஞ்சிந்தித்தும்பார்த்துமலமாயை கருமத்தையெல்லாங்கழற்றி) எ-து, பறவைமுட்டையைச்செட்டையாற்பரிசித்தல்போன் மாணாக்கனைக்கரசரணங்களாற் பரிசித்தும் ஆமைகளைக்கண்ணிருந்தமுட்டையைத் தன்மனத்திற் பாவித்தல்போல் அவனைத்தமதருளுருவாய்ப்பாவித்தும் மீன்தனது சினையைப்பார்த்தல்போல் அவனைத்தமதுதிருஷ்டியைப்பார்வையாற்பார்த்தும் ஆணவமலமாயா மலங்கருமமலயாகிய இவையெல்லாநீக்கி (சரிதாதிவாதனையாம் போதமயக்கத்தைவாக்காலே போதைசெய்துபோக்கிவிடப்போம்) எ-து, சரிதைகிரியாயோகங்களைச்செய்யும் வாசனையாகியதற்போதமயக்கத்தை நீக்குதற் கேதுவாகிய வுபதேசமொழிகளைத்திருவாக்காற்போதித்து நீக்கப்போமென்றவாறு. *

யோகத்தைப்பாவனையுளடக்கி நூலைவாக்கிலடக்கி அவ்வாறையுமீண்டுநான்காய்க்கூறினார். (ய)

(அ-கை) ஆசாரியருபதேசித்தபொருள்களை மாணாக்கர் இம்முறைமைகளாமேற்றுக்கொள்வாரென்றறிவித்தல். *

**கா**லமறைதேசமறைகன்மறைபோற்காண்பாரும் *
பாலுணும்புள்ளிப்பிமீன்பக்கிதீக் - காலு..............*
விரும்பினீர்மின்னலிலேயேற்றபணம்பார்ப்பார் .....*
தரும்பொருளைக்கொள்ளுவார்தாம்...... ...... ......*

(இ-ள்.) (காலமறைதேசமறை கன்மறைபோற்காண்பாரும்) எ-து, முன்னோர்காலத்தோர் பொருளையறியாதிருந்து பின்னோர்காலத்ததனை யறிந்து கொள்ளுங் காலமறைபோலும் ஓர்தேசத்தறியாதிருந்தபொருள் ஓர்தேசத்தறிந்துகொள்ளுந் தேசமறைபோலும்முன்மணியென்றறியாதிருந்தும் பின்னதிம்முனோட்ட மறிவார் போலும் பழுகிமணியென்றறிந்து கொள்ளுங் கன்மறைபோலும் ஆசாரியரனுக்கிரகித்தபொருளை யறிந்துகொள்ளுவாருமுளர் அஃதன்றி (பாலுணும்புள்ளிப்பிமீன்பக்கிதீக்காலு விரும்பினீர்மின்ன லிலேயேற்றபணம்பார்ப்பார் தரும்பொருளைக்கொள்ளுவார்தாம்) எ-து பாலுண்ணுமன்னப்புட்போலுஞ் சிப்பிபோலு மீனுண்ணுங்கொக்குபோலும் உலையிலெழக்காய்ந்தவிரும்பினீர்போலு மின்னலொளியிலேற்கப்பட்ட பணநோட்டமறிவார்போலும்அவரருளிச்செய்த பொருளையிங்ஙனமேற்றுக்கொள்ளும்பக்குவருமுளரென்றவாறு *

யம். ஆசாரியரனுக்கிரகித்தபொருள் அக்காலத்துத்தோற்று

திருந்த சின்னாட்குப்பின்னர்தம்முளேதெரிந்துகோடலாற் காலம்றையென்றும்அவர்கொடுத்தநூலிற்றெரியாதிருந்து அந்நூற்பொருளைக்கூறுமற்றோர்நூலிற் றெரிந்துகோடலாற்றேசமறையென்றும் தான்கற்றநூல்கற்றோரோடும்பழகித் தெரிந்துகோடலாற் கன்மறைபோலென்றுங்கூறினார். அன்னம்நீரைநீக்கிப்பாலுண்டல்போற் சரிதாதிகளைநீக்கி ஞானமொழிகளைக் கோடலாற் பாலுண்ணும் புள்ளென்றும்சோதிமழைக்கங்காந்திருந்து துளிவீழ்ந்த மாத்திரத்தின் வாய்மூடிக் கொள்ளும் இப்பிபோலெப்போது கூறுவா ரென்றிதயமலர்ந்துகேட்டு அங்ஙனங்கேட்டபொருளையுள்ளடக்கிப் பயன்படுத்திக்கோடலான் இப்பியென்றும் துறைக்கண்ணசைவறநின்றுமீன்வந்தழிக்கவருங்கொக்குப்போற் சித்திரப்பாவைபோலசைவறவிருந்துபயன்றருமொழிவருந்தோறு மேற்றுக்கோடலான் மீன்பக்கியென்றும்தானேற்கு நீர்மாத்திரமேற்றுக்கொண்டு மீளவிடாதவிரும்பினீர்போலத் தமக்குவேண்டியவுபதேச மொழிகளைப்பெற்றுக்கொண்டு மீளவிடாதிருத்தலா னிரும்பினீரென்றும் கட் கூர்மையான் மின்னலொளியிற் பணம்பார்ப்பதுபோ லறிவு கூர்மையான் அதிசீக்கிரத்திற்கூறிய மொழிகளி னருத்தமெல்லாம் அறிந்துகோடலின் மின்னலிலேபணம்பார்ப்பாரென்றுங்கூறினார். *

க-து. நான்மறையாதிமூன்றிற்கும் இன்னகாலத் தின்னபொருளுளதென்றும் இன்னதேசத் தின்னபொருளுளதென்றும் இன்னமலைக்கப்பால் இன்னபொருளுளதென்றுந் தமக்காப்தனு யுள்ளவன்கூற அம்மொழியை யுண்மையாகக்காண்பார்போற் காண்பாருமுளரொன்றுமாம், (௰க)

(அ-கை.) ஆசாரியர்உபதேசித்தபொருள்களை யுட்கொண்ட பக்குவர் தற்போதமொழிக்கு முறைமை யிவ்வாறென்றறிவித்தல்.*

பதியிறக்கக்கேட்டிறந்தபத்தினிபோற்பால்போ... *
லதிமோகிதீப்புகல்போலன்பாம்-வெதுவையர்போற். *
கன்னன்கடையிற்கொடைபோலக்காணலாந்...... ...*
தன்னையிழவாதிழந்தருள்.............................*

(இ-ள்.)(பதியிறக்கக் கேட்டிறந்தபத்தினிபோற்பால்போலதிமோகிதீப்புகல்போல் ) எ-து, பதியிறந்தானென்றுபிறர்கூறக்கேட்டு அக்கணத்திற்றானு மிறந்தபதிவிரதைபோலுங் கடைகாலிலிருந்துவீழ்ந்த பால்போலுந் தனதுபுருடன்மேலதிமோகியாயிருந்

தூளா ளவனிறந்தகாலத்து அவனோடு மக்கினிப் பிரவேசமாதல்போ லும் (அன்பாம்வெதுவையர்போற்கன்னன் கடையிற் கொடைபோ லக்காணலாற்தன்னையிழவாதிழத்தலுன்) எ-து, புருடனிறந்துபோ யபின்னருமுன்னர் அன்புவிடாதிருந்த வெதுவையர்போலு மறு மைகுறித்திட்டிய புண்ணியமெல்லாம் ஒரந்தணனுக்குக் கன்னன் றேசாந்தத்திற்கொடுத்த கொடைபோலும் ஆசாரிய ருபதேசித்த மொழிகளையுட் கொண்டபக்குவர் தம்மையொழியாதொழிக்கு மு றைமையைக்காணப்படுமென்றவாறு. *

ப-ம். கேட்டவக்கணத்திறந்தாளைப்போல் உபதேசமொழி யைக்கேட்டவக்கணத்திற் போதமிறத்தலிற் பதியிறக்கக் கேட்டிற ந்தபத்தினிபோலென்றும் பாலெல்லாங்கவிழ்ந்ததாயினும் அதனு ள் வாசனையிருத்தல்போற் போதமிறந்ததாயினும் அப்போதவாச னையிருத்தலிற் பால்போலென்றுஞ் சின்னாழிகைசென்ற பின்னர் தீப்புகல்போற் சின்னாளிற்போதமிறத்தலின் அறிமோகி தீப்புகல் போலென்றும் புருடனோடிறவாதிருந்து தேகபோகங்களை வெறுத் திருத்தல்போல் யானெனதென்றெழும்போத வெழுச்சியையடக்கி யிருத்தலின் வெதுவையர்போலென்று மொன்றையுங் குறியாது கொடுத்தல்போல் ஒன்றையுங்கருதா தெல்லாவற்றையும் விடுத்தலிற் கன்னன்கடையிற்கொடைபோலென்றுங்கூறினர். *

(அ-கை.) ஆசாரியருபதேசிக்குமொழி ஓர் பிரகாரமாயினும் பக்குவவுயர்ச்சிதாழ்ச்சிப்படி ஞானமேறுவதன்றி யோர்படித்தாய் ஞானமேறுதென்றறிவித்தல். *

மா ற்றுப்பலவகையாம்பொன்னோடவைப்பான்போற்
றேற்றிச்சிவாகமத்தாற்செப்பினு-மேற்ற........ ...*
பரிபாகத்தாலேபழுப்பாம்பலவு........ ............*
மொருபாகமன்றென்றுணர்..............................*

(இ-ள்.) (மாற்றுப்பலவகையாம்பொன்னோட வைப்பான்போ ற்றேற்றிச்சிவாகமத்தாற்செப்பினும்) பலவகையாய்த் தோற்றுமா ற்றுப்பொன்களைப் பத்துமாற்றுக்குதற்பொருட்டு புடம்போடும் ஒருவனைப்போலும் பக்குவர்நால்வர்க்கு மோர்படித்தாற் சிவாகம த்தாற்றெளிவித்துக்கூறினும் (ஏற்றபரிபாகத்தாலே பழுப்பாம்பல வுமொருபாகமன்றென்றுணர்) எ-து, மாற்றேற்றமாயிருந்த பொ ன்பரிபாகத்தான் முன்பழுப்பாகுமன்றிக் குறைந்த மாற் றுயர்ந்து

மாற்றுகளாகிய பலபொன்களு மொருபாகமாய்ப் பழுப்பாகுவது போன்று அதுபோலுயர்ந்தபக்குவனுக்குமுன்னர் ஞானமேறு மன்றி யெல்லார்க்கும் ஓர்பிரகாரமாய்ஞானமேறுமென்றறிதி-எ-று. *

க-து. தாழ்ந்தமாற்றுப்பொன்களைப் புடம் போடுந் தோறும் இடைகுறைந்து மாற்றுயர்தல்போல் தாழ்ந்தபக்குவர்க்குச் சிவாகமத்திற்கூறும் நாலுவுபாயவுத்திகளை யுபதேசிக்குந்தோறும் பாசங்குறைந்துஞானமேறுமென்பதுங்காண்க. (௰௨)

(அ-கை.) மந்தமுதலியநான்குபக்குவங்களையு முடையோரை ஞானசாரியர்பக்குவப்படுத்தி அவர்க்குஞானமேற்று முறைமையிங்ஙனமென்றறிவித்தல். *

கல்லையுருவாக்குங்கழற்றியிலேயில்வாழ்க்கை.........*
சில்லநீர்போலத்தெளிந்துவருந் - தொல்லுலகங்.......*
கான்றசோறுகுங்கதலித்தண்டைக்கனலி...............*
லூன்றல்போன்ஞானமுதிக்கும்.................. .....*

(இ-ள்.) (கல்லையுருவாக்குங்கழற்றியிலேயில்வாழ்க்கை சில்லநீர்போலத்தெளிந்துவரும்) எ-து, கல்லினை யோர் பாவைவடிவாக்கு முறைமைபோல் அருள்வடிவாக்குதற்பொருட்டு மந்த பக்குவர்க்குபதேசமொழிகளாற் பாசத்தை நீக்குமிடத்துத் தேறிட்டநீர்தெளிந்துவருதல்போல் அவர்க்கில்வாழ்க்கை யிலொன்றாரியா மாறொன்று தெளிவுபிறந்துவரும் (தொல்லுலகங்கான்றசோறுகுங்கதலித் தண்டைக்கனலிலூன்றல்போன்ஞானமுதிக்கும்) எ-து, பழையதாய்வரும்இப்பிரவஞ்சங்கக்கினசோறுபோல் அருவருப்பாய்த்தோற்றும் வாழைத்தண்டை அக்கினியிற்போட்டுச்சுடுதல்போல் அவர்க்குஞானந்தோற்றுமென்றவாறு. *

ப-ம். பிறிந்தசேறுந் தெளிந்தநீருங்கலந்துவருதல்போல் இல்வாழ்க்கையிற்பற்றும் பற்றின்மையுங்கலந்துவருதலிற் றெளிந்துவருமென்றார். வாழைத்தண்டைப் பன்னாட்பலகாட்டத் தாற்சுடல்போல் இவர்க்கும்பன்னாளிற் பற்பலவுபதேசமொழிகளான் ஞானமேறுமென்பதறிக. (௰௩)

(அ-கை.) இதுவுமது.

இரும்பைவடிவாக்குமியல்பினர்க்குப்பச்சை... ...*
மரஞ்சுடுமாபோன்ஞானம்வாய்க்கு - மிருந்தவிட... *

நீர்த்தாமரையிலைப்போனீங்குமுலகமெலாம்..............*
பேய்த்தேர்போற்றோன்றும்பிரிந்து.....................*

(இ-ள்.)இரும்பைவடிவாக்குமியல்பினர்க்குப்பச்சைமரஞ்சுடுமாபோல்ஞானம்வாய்க்கும்) எ-து, இரும்பினையோர்பாவைவடிவாக்குமுறைமைபோற் பாசத்தைநீக்கி அருள்வடிவாக்கப்பட்ட மந்தரபக்குவர்க்குப்பச்சைமரத்தை அக்கினியாற்சுடு மாறுபோல் ஞானம்பலிக்கும் (இருந்தவிட நீர்த்தாமரையிலைபோனீங்குமுலகமெலாம் பேய்த்தேர்போற்றோன்றும் பிரிந்து) எ-து, தாமிருந்த இல்வாழ்க்கைதாமரையிலை நீர்போல் அதிற் கூடியிருந்துங் கூடாதுநீங்குவர் பிரவஞ்சமெல்லாம் அவர்க்கன்னியமாய்க்கானற்சலம்போலத்தோன்றுமென்றவாறு. *

க-து. சிலகாட்டத்தாற் பச்சைமரஞ் சுடல்போற் சிலவுபதேசமொழிகளாலிவர்க்குஞானமேறுமென்பதறிக. (௰௪)

(அ-கை.)இதுவுமது.

மரப்பாவைபோலுடம்பின்வாதனையைமாற்றிற்...*
கரித்தீக்கவர்வதுவாங்காமித்-திருத்த.............*
மனைபொதுவின்மண்டபமாம்வானோர்கள்வாழ்வும்... *
கனவெனவேதோன்றியிடுங்காண்.....................*

(இ-ள்.) (மரப்பாவைபோலுடம்பின்வாதனையைமாற்றிற் கரித்தீக்கவர்வதுவாம்) எ-து, மரத்தினை யோர்பாவையாக்குதல் போல் அருள்வடி வாக்குதற்பொருட்டுத் தீவிரபக்குவர்க் குடம்பின்வாதனையாயபொறிகரண முதலியவற்றைநீக்கி ஞானத்தையுணர்த்திற் கரிதீயேற்றுக்கொளல்போல் ஞானமுண்டாம் (காமித் திருத்தமனை பொதுவின்மண்டபமாம் வானோர்கள்வாழ்வுங் கனவெனவேதோன்றியிடுங்காண்) எ-து, தானிச்சித்திருந்த இல்வாழ்க்கை நாலுபேருங்கூடியிருக்கும் பொதுமண்டபம் போலாகுங் கேள்வியாலறியப்பட்டஇந்திராதி தேவர்கள்செல்வமுஞ் சொப்பனம்போற் றோற்றுமென்றவாறு. *

க-து. உடம்பின்வாதனையைமாற்றி யென்றமையான் இவர்க்குப்போகவாதனை மாற்றவேண்டுவ தின்றென்பதாயிற்று. வானோர்கள்வாழ்வுங்கனவெனத்தோன்று மென்றமையான் நரர்வாழ்வுசுழுத்திக்காட்சிபோற்றோன்றுமென்பதாயிற்று. இருந்தவென்பதிருத்தவெ

ன்றுவலித்தல்விகாரமாய்வந்தது. (ம௫)

(அ-கை) இதுவுமது.

வெண்ணையுறுபாவையர்க்குஞானம்விளக்கின்மே...*
லன்னிின்மயிர்ப்பஞ்சாகுமாசையிலைக்-கண்ணீ... ...*
ரொழுகும்பொழுதறியாதுள்ளுருகிவிம்மி..............*
யழுதுசிரிப்பார்புளகமாம்.......... ...... ........*

(இ-ள்) (வெண்ணையுறுபாவையர்க்குஞானம்விளக்கின்மேலன்னிின்மயிர்ப்பஞ்சாகுமாசையிலை) எ-று, வெண்ணெயினைப் பொருந்தாநின்றஓர்பாவையாக்குதல் போல் அருள்வடிவாக்குந் தீவிரதரபக்குவர்க்குவிளக்கிற்கொழுந்திற்பிடித்த வன்னிின்மயிர்போலும் பன்னியபஞ்சுபோலும் பாசமுழுதும் நீக்கி ஞானமுண்டாம் அவர்க்கொன்றினுமாசையின்று (கண்ணீரொழுகும்பொழுதறியாதுள்ளுருகிவிம்மியழுதுசிரிப்பார் புளகமாம்)எ-று, ஆனந்தக்கண்ணீரோடும்போதுந்தாமறியாதுள்ளமெல்லாநெக்குநெக்குருகிவிம்மியழுதுசிரிப்பாரவர்கட்குஉடம்பெல்லாமுரோமாஞ்சலியாமென்றவாறு. *

க-று. அழுவதுமுன்பட்டபிறவித்துன்பங்களைநோக்கி- சிரிப்பது அத்துன்பங்களையெல்லா மொருகணத்தின்மாற்றிய ஆசாரியர்திசயத்தைநோக்கி யெனக்கொள்க. பிரவஞ்சத்தின்மேல் இல்வாழ்க்கை மேலுடம்பின்மேலாகியமூன்றிடத்தும்அவர்க்காசையின்மையாற்பொதுப்படஆசையில்லையென்றார்.

(அ-கை.) பக்குவமுடையோர்க்கேஞானம் போதித்தாற்பாசநீங்கிஆனந்தப்பேறுளவாமன்றி மற்றையர்க்கங்ஙனமுண்டாகாதென்றறிவித்தல். *

புளிசேர்பழமானாற்போற்புறம்போடுள்ளின்... ...*
மூளைதானும்வேறாய்மூளைபோய்-துளைமாண்ட... ...*
ஊசிக்குப்பாசமொழிந்ததுபோலொப்பாருக்.........*
காசைக்கேடானந்தமாம்....... ....... ...... .......*

(இ-ள்.)(புளிசேர்பழமானாற்போற்புறம்போடுள்ளின் மூளைதானும்வேறாய்மூளைபோய்) எ-று, முன்பிஞ்சாயிருந்தபோதோடும்வித்தும்பிரிபடாதொன்றாய்ச் சேர்ந்தபுளியவ்வோடும்வித்தும்பிரிபடும்பழமானாற்போல் முன்னரறிவுமுதிராமையிற் பிரிபடாதிரு

ந்த மும்மலங்களு மிப்போதவ்வறிவு முதிர்ந்தமையான் மாயை கன்மமாகிய புறம்போடு யிருள் ளிருந்தமுளையாகிய வாணவமுந்த மக்கன்னியமாய்நீங்கி யிவற்றானேறுவதாய வாகாமியமுளையும்போய் (துளைமாண்ட வூசிக்குப்பாசமொழிந்ததுபோ லொப்பாருக்காசைக்கேடானந்தமாம்) எ - து. காதற்றவூசிக்குச் சறடொழிந்ததுபோற் றற்போதத்தோடு எல்லாப்பாசங்களையு மிங்ஙனமொழிந்தோர்க்குஅப்போதத்தாற்றோற்றுமாசைநாசமேசிவானந்தப் பேறாமென்றவாறு. *

ப-ம். மாயையுங் கன்மமும் புறம்பாய்க்காணப்படுதலிற்புறம்பென்றும்அவைநீங்கியபோதுந்தானிங்காதுயிருள் ளிருத்தலினாணவத்தை யுள்ளின்முளையென்று மாகாமியம்பிறவிக்கேதுவாகலினிதனையு முளையென்றுங்கூறினார். காதறா முற்றொடர்ந்த பாசமஃதற்றபோதொழிந்தாற்போற் போதமறா முற்றொடர்ந்த பாசமிஃதற்றபோதொழிதலி னூசிக்குப் பாசமொழிந்ததுபோ லொப்பாருக்கென்றார். தேகபோகங்களாகிய துன்பத்தை யின்பம்போன் மாறுபாடாய்த் தோற்று வித்துயிர்க்காசை யுண்டாக்குவ தாணவம் அதனதுவாசனைபோதமொழியுமளவு மிருத்தலின் காரியமாகியவாசைகெடவே காரணமாகிய வவ்வாணவவாசனையு மவ்வாசனையாலெழும்போதமுங்கெடுமாகலினாசைக்கேடானந்தமாமென்றார். (உக)

(அ-கை) பக்குவர்க்குப்பாசநீங்கி ஞானோதயமானபோதுதோற்றுமதிசயகுணமிவையென்றறிவித்தல். *

அருணனுதயம்போற்றாம்வீழ்வாராசை... ... ...*
பெருகுவபோற்கப்பற்பிழைத்துக்-கரைகாணு ... ...*
மாபோற்சிறையுமருட்பிணியுநீங்கியிடு...... ... ......*
மாபோலதிசயம்போலாம்.........................*

(இ-ள்.) (அருணனுதயம்போற்றாம் விழ்வாராசை பெருகுவபோற் கப்பற்பிழைத்துக்கரைகாணுமாபோல்) எ- து. மழையிருளினெறித்தெரியாதுழல்வோர்க்குச் சூரியனுதய மானதும்போலுந்தம்மால்விரும்பப்பட்ட மாதர்மேலாசை யுள்ளமுமறைய மேன்மேல்வளர்தல்போலுந் திசைதப்பியகப்பற்றப்பி துறைசேரக்காணுமாறுபோலும் (சிறையுமருட்பிணியு நீங்கியிடுமா போலதிசயம்போலாம்)எ-து விடாச்சிறையிருந்தோர்க்குச்சிறைநீங்கியவாறுபோலுமாறாநோயனுக்கந்நோய் நீங்கியவாறுபோலு மோர்காலமுங்கா

ளுதவதிசயங்கண்டதுபோலுந் திருவருண்ஞானம் பெற்றோர்க்குந் தோற்றுமென்றவாறு. *

ப-ம். முன்னராணவவிருளாற்பொய்யிதுமெய்யிதுவென்றொன்றாந் தோன்றுதிருந்தோர்க் கிப்போதருளொளியாலெல்லாஞ்சிவமாய்த்தோற்றலி னருணனுதயம் போலென்றுமவ்வருண்ஞானத்தாற்றோற்றுமானந்தத்திற்றோமேன்மேன்மறைதலிற்றோம் வீழ்வாராகை பெருகுவர்போலென்று மிந்தஞானானந்தத்தை யென்றைக்கடைவோமென்றிருந்த தமக்கிப்போதுகிடைத்தலிற்கப்பற்கரைகாணுமாபோலென்றுமுன்னுடலாயிருந்ததாமிப்போததற்குட்புறனாய் விளங்குஞ் சிவமாயிருத்தலிற் சிறைநீங்குமாபோலென்று முன்னிருந்த பிறவித்துன்பமிப்போதுநீங்கலிற்பிணிநீங்குமாபோலென்று மோர்காலங்களினுங்கண்டறியாத காட்சியாகலினதிசயம்போலாமென்றுங் கூறினர். *

(அ-கை)பாசநீங்கிஞானந்தோன்றினலவர்க்கிக்குணங்க டோற்றுவவென்னையெனின் முன்னோர்காலங்களினுங் கண்டறியாராகலினிப்போதுஅக்குணங்களவர்க்குத்தோற்றுமென்றறிவித்தல். *

உடல்பொறிகளுட்கரணத்தோடுகுணம்வாயு ... ...*
விடவிடவேநாதாந்தவீடு-நடுநிலையாய்த்.................*
தன்னொழிவும்பேரின்பசாகரமுஞ்சந்தழிவா...... ...*
ரொன்னபடார்கண்டறியாரோ.... ............ ...... ...*

(இ-ள்.) உடல்பொறிகளுட்கரணத்தோடுகுணம்வாயு விடவிடவேநாதாந்தவீடும்) எ-து, உடலும்பொறிகளு மந்தக்கரணங்களுமவற்றுடனேகுணங்களும் பிராணவாயுவுமாகிய விவ்வைந்தையுமொவ்வொன்றாயறிந்து நீங்கிநீங்கவேவரு நாததத்துவத்தின் முடிவாகியவிந்தநிலையையும் (நடுநிலையாய்த்தன்னொழிவும் பேரின்பசாகரமுஞ் சந்தழிவாரொன்ன படார்கண்டறியாரோ) எ-து, அவ்விடுதலைக்குஞ்சுகாதீதத்திற்கு நடுநிலையாய்த் தோன்றுந் தற்றெரிசனந் திருவருட்டெரிசனம் பராதெரிசனம் பராயோகம் பராயோகநீக்கத்தையு மவற்றின்மேற் றற்போத வொழிவையு மதன்மேலானந்த சாகரத்தையுமனுபவமாய்க் கண்டதன்மேற் சிவத்தோடிரண்டற்றிருக்கின்றவொன்னவாச்சரியப்படார் முன்னோர்காலங்களினு மவற்றைக்கண்டறியாதாரொன்றவாறு.

ப-ம். உடலத்தை யுள்ளபடியறிந்து நீங்கவேபஞ்சபூதகாரியமாகிய புறக்கருவிகளிருபத்தைந்துமேடணைத்திரயங் களுந்த

நாடிகளுநீங்கும் ஞானேந்திரியங்களை யுள்ளபடியறிந்து நீங்கவே
யவற்றானவகரிக்கப்பட்ட சத்தாதிகளைந்து மவ்விந்திரியங்க ளவ்வி
டயங்களையவகரித்தபோது தொழிற்படுங் கன்மேந்திரியங்க ளைந்
துமிக் கன்மேந்திரியங்களைந்தும் விடயீ கரிக்கப்பட்ட வசனாதிக
ளைந்து மிவ்விருவகையிந்திரியங்கட்கு மிடமாய்நின்ற பூதங்களைந்
துநீங்கும்அந்தக்கரணங்களை யுள்ளபடியறிந்துநீங்கவே சூக்குமை
யாதிவாக்கு நான்குநீங்கு முக்குணங்களை யுள்ளபடியறிந்து நீங்க
வே யிம்முக்குணாதாரமான மூலப்பிரகிருதிநீங்கும்மூலப்பிரகிருதி
நீங்கவே யிதாகிதங்களாய்வருங் கன்மஞ் சீவனமின்றி நிற்குமாக
லினக்கன்மத்தைக் கூட்டாநின்றகாலமு மதனைவரைந்து நிற்கின்ற
நியதியுநீங்கு மிவைநீங்கவே யான்மாவிற்குப் புசிப்பின்மையா னி
ச்சாஞானக்கிரியை சீவியாதாகலிற் கிரியையையெழுப்புங் கலையும
றிவையெழுப்பும் வித்தையுமாசையையெழுப்பும் ராகமுமாசைப்
பட்ட பதார்த்தத்தின் மயங்கும் புருடனுநீங்கு மிங்ஙனங் கலாதிக
ணீங்கவேகாலத்தையு நியதியையுங்கலையையும் பிரேரித்த சத்தி தத்
துவமும் வித்தையைப்பிரேரித்தசுத்தவித்தையும்ராகத்தைப்பிரேரி
த்தஈசுரதத்துவமும் புருடனைப்பிரேரித்தசிவதத்துவமு மூலப்பிரகி
ருதியைப்பிரேரித்தசாதாக்கியதத்துவமுநீங்கு மிங்ஙனஞ்சுத்ததத்து
வங்கணீங்கவே பிராணவாயுமாத்திரமியங்குமிப்பிராணவாயுவை யுள்
ளபடியறிந்து நீங்கவேதசவாயுக்களு மசைபைநாதமு நீங்குமிம்
முறையேதத்துவந் தொண்ணூற்றாறுநீங்கு மாகலின் விடவிடவே
நாதாந்தவீடுமென்றார் நடுநிலையாமென்றதனானும் பேரின்பசாக
ரமு மென்றதனானுந்தற்றெரிசனமுதலியவருவிக்கப்பட்டது, கண்
டத்தானத்திலந்தக்கரணங்களோடுங் கூடி மத்திமைவாக்கை நன்றா
யறியப்படுதலி னம்மத்திமைவாக்குக் காரணமாகிய சூக்குமைபை
சந்தியுமத்திமைபாற்தாரியப்பட்ட வைகரியுமந்தக் கரணங்களை நீங்
கவேநீங்குமாகலி னந்தக் கரணங்களை நீங்கவே சூக்குமையாதிவாக்
குகணீங்குமென்றுசொல்லப்பட்டது, பிராணவாயு வியக்கத்தையட
க்கத்துடங்கினடங்காது மேன்மே லியங்குமாகலின் அவ்வியக்கத்
தைத்தன்னாலறியப்படுதலானுந் தன்னை யஃதறியாமை யானு மத
னைச்சடமென்றுமதனை யறிந்தவறிவுதானென்றுந்தனக்கறிவித்தது
திருவருளென்றுமறிந்து தான்திருவருளுட்டத்திநிற்கவே யதுநீங்
குமெனக்கொள்க, கண்டறியாரோயென்றதனா லிப்போது கண்டெ
ன்பதுவருவிக்கப்பட்டது. இதற்கு உதாரணம் ஐம்புலனு லாமந்த
க்கரணமுக்குணமிருவளியொருங்கியவானோ ரோத்த நிற்றனையென்

ஞுந்திருவெழுகூற்றூற்காண்க. (உ௩)

(அ-கை.) இங்ஙன ஞானத்தாற் பாசத்தை நீங்கிப் பதியைய டைந்தோரை மீட்டப்பாசமயக்காதோவெனின் தற்போத மிழந் தஞானிகள் சிவமயமாயிருப்பரோயன்றி யவரைமீட்டும் பாசமயக் காதென்றறிவித்தல். *

அறிவுமறிவானுமறியாமலையு.................. ...*
மறியிற்றடையேதவர்க்குப் - பிறிவரோ...............*
வாகாயஞ்சூறைகொளிலஞ்சியடுக்களைக்குட்..............*
போகாதும்பாலாம்பொருள்...................... ...*

(இ-ள்.) அறிவுமறிவானுமறியாமலையுமறியிற்றடையே தவர்க் குப்பிறிவரோ) எ-து, உயிர்க்குயிராயுள்ளும்புறனுமோரணுவேனு ம்விட்டு நீங்காதிருந் தறிவிக்குமறிவாகிய பதியையுந் தற்சுதந்தரமா யொன்றினையு மறியாதப்பதியறிவிக்க வறிவதாகிய பசுவையு மிங்ங னமறியும் பசுவிற்குத் தன்னையுந்தனக்கறிவிக்கும் பதியையுமறிய வொட்டாது மறைத்திருந்த வறியாமையாகிய பாசத்தையு மப் படியாவுள்ளபடியறியினவர்க்குமுன்போலுந்தடையாது அஃதன் றி அப்பதியையோர்கணமேனும் பிறிவரோவானலப் பதியை யவர் பிறியாது நாடிக்கொண்டு நிற்பரோவெனின். (ஆகாயஞ்சூறைகொ ளிலஞ்சியடுக்களைக்குட்போகாதுபோலாம் பொருள்) எ- து; எல் லாப்பொருள்கட்கு மிடங்கொடுத்திருந்த வாகாயந் தானே யப் பொருள்களைக்கொள்ளைகொளுமெனி னதற்கஞ்சி யடுக்களை வீட் டிற் புகுந்தொளிக்கக் கூடாததுபோ லவ்வாகாச முதலிய வெப் பொருள் கட்கு மாதாரமாயிருந்துள்ள மெய்ப்பொருடன்னை ய டைந்தோர்க்கிடம் வேறின்மையானவரை விழுங்கிக்கொள்வதாமெ ன்றவாறு, *

ப-ம். பாசத்தையறியும்போது முப்பத்தாறுகருவிகளையு மி ஃதிஃதென்றறிந்துசென்று அவற்றின்முடிவினின்றவற்றைத்தன்னால றியப்படலானுந் தன்னையவையறியாமையானுந் தனக்கன்னிய மெ ன்றுஞ்சடமென்று மறியப்படுந்தன்னையறியும் போதக் கருவிகளை யெல்லாமறிந்தவற்றை நீங்கி நின்ற வறிவுதானென்றுந் திருவருளா லன்றித்தற்சுதந்தரமாயறிவதிலனென்றுந்தான் அக்கருவிகளோடுங் கூடியபோ தவைமயமாயுமவற்றை நீங்கித் திருவருளோடுங் கூடிய போ திதன்மயமாயுமிருத்தலிற றன்பாசவறிவுமன்று பதியறிவு மன்றென்றறியப்படும் பதியையறியும்போது பெத்த முத்திகால

த்தினுந் தன்னைவிட்டு நீங்காதிருப்பதென்றுந் தனக்கறிவிப்பதெ ன்றும் பாசத்தைப்பிரோகம்பண்ணுவதென்றும் ஞானந்தச் சொரூபமென்றுமறியப்படும் இங்ஙன நடுநின்றறிந்த பசுபாசத் தைநீங்கிப்பரிபூரணமாகியபதியையடைந்துஅப்பரிபூரணமெல்லா ந்தானுயிருத்தலின நியிற்றடையேதவர்க்கென்றும், பிறிதற்கேதுவா யபோதமிறத்தலிற் பிறிவரோவென்று; மிங்ஙனம் பிறியா திருந் தோரை மெய்ப்பொருடன் மயமாக்கிக் கோடலினடுக்களைக் குட் போகாதுபோலாம் பொருளென்றுங்கூறினர். (உச)

(அ-கை.) இதுவுமது.

பொய்போலமெய்யுமறியப்பெறூப்போக......*
கையோகர்க்கொன்றேநுஞ்சார்பில்லைத் - துய்ய.......*
விழிக்குள்ளுதித்தவிரிகதிர்போற்றம்மை......... ...*
யழித்ததுவேயாச்சரியமாம்............... .........*

(இ- ள்,) (பொய்போலமெய்யுமறியப்பெறூப்போககையோ கர்க்கொன்றேடுஞ்சார்பில்லை) எ- து, முன்னர்பொய்யாகிய வுடல த்தோடுங்கூடியபோ தவ்வுடலமென்றுந் தாமென்றும் பிறித்தறி யாத தன்மயமா யிருந்ததுபோலிப்போது மெய்ப் பொருளையுந் தம்மையும் பிறிக்கப்பெறூதிம் மெய்ப்பொருளானந்தத்தோடு கல ந்திருந்தோர்க் கோர்பொருளோடுஞ் சார்பில்லை யஃ தெங்ஙனமெ னின் (துய்யவிழிக்குள்ளுதித்தவிரிகதிர்போற்றம்மையழித்ததுவே யாச்சரியமாம்) எ - து, எல்லாவற்றையு மெதிரிட்டறியு மாசற்றவி ழிக்குள்ளே முன்போலெதிரிட வொட்டாதுதித்த சூரியனைப்போ ன்ஞாதுருஞானஞேயமென்னுந் திரிபொருளையு மெதிரிட்டறிந்த வான்மபோதத்தையங்ஙனமெதிரிடவொட்டாதிதனுட் சிவசூரியனு தித்தப் போதத்தையழித்துத் தானுயிருந்ததுவே மிகவு மதிசயமா மென்றவாறு. *

க-து. கதிர்புறம்புதித்தபோதுகண்ட கட்குள்ளுதித்தபோது காண்டற்கிடமின்மைபோற் போதத்தாற் புறம்புபோற் றோற்றிய ஞானசூரிய னிப்போதவொளியைத் தன்னொளியான்மறைத்துயிர் க்குள்ளுதித்தமையா னிதற்கு மெதிரிந்தற் கிடமின் றென்பதறிக.(

(அ-கை) இதுவுமது.

தன்னையிழப்பார்க்கென்னசார்வூழிச்சங்கார... ... *
மென்னிலொளித்தெங்கேயிருக்கலா - முன்னே......*

புலிபார்க்கப்போனகதைபோலிமையாநாட்டஞ்......*
சலியாமைமூடுந் தனை.............................*

(இ-ள்.) (தன்னையிழப்பார்க்கென்னசார்வூழிச்சங்காரமென்னி லொளித்தெங்கேயிருக்கலாம்) எ-து, தற்போத மொழிப்பார்க்கு மற்றைச்சார்புகளென்னையுள்ளன முப்பத்தாறு தத்துவ மென்பது மவற்றின் முடிவினின்றதாமென்பதுந் தமக்கறிவித்தவருளென்ப துமிதனைக்கடந்தவானந்தமென்பதுமின்றி யானந்தாதீதராயிரு த்தலினவர்க்கிதுவே சர்வசங்காரகாலமென்று மெய்ஞ்ஞானிகள் சொல்வாரெனின் இனியவர்க்கெவ்விடத்தொளித் திருக்கலாகுமாறு ற்சிவத்தையருளா லறிந்தடைய வேண்டுமென்ப தென்னையெனின் (முன்னைபுலிபார்க்கப் போனகதைபோலிமையா நாட்டஞ்சலியா மைமூடுந்தனை) எ-து, முன்னைபுலியினைப் பார்த்தறியச் சென்றோ ர்புருடனஃதிருந்த முழைக்கெதிர்ப்படுந் தருவாயி லவன்றேகப் பதைப்பறவது பிடித்துக்கொண்டதென்று கூறுங்கதைபோற் சிவத் தையறியவேண்டுமென்று முப்பத்தாறு கருவிகளையுங்கடந்து செ ன்றருமேனோர் நிற்குந்தருவாயி லிவன்றன்னை யிமையா நாட்டமாகிய வச்சிவந்தானேயிவனது போதப்பதைப் பறும்படிமூடிக் கொள்ளு மென்றவாறு. *

பொ-ம். இமைத்தல்விழித்தலின்றிய விமையா நாட்டம்போன் மறைப்புதிரைப்பின்றிய பேரறிவாகலிற் சிவத்தை யிமையா நாட்ட மென்றார், புலிமுழைவாய்நின்றோரை யதுமூடிக்கோடல் போலரு ணோர் நின்றோரைச்சிவமூடிக்கோடலா னங்ஙனமுவமைகூறினார். *

(அ-கை.) அங்ஙனமிருந்தஞானிகள் பெற்றவின்பத்தையிங்ங னமிருக்குமென்றவராற்கூறக்கூடாதென்றறிவித்தல், *

அறிந்ததுவாய்நின்றவறியாமைகண்டு...... ......*
மறந்தறிபார்வாழ்துவாழ்ந்த - வெறும்பாழ்...... ...*
விளைந்தசுகஞ்சொல்லில்வெளியைப்படியா...........*
ளந்தறியுமாபோலவாம்.............................*

(இ-ள்.) (அறிந்ததுவாய்நின்றவறியாமைகண்டுமறந்தறிபார்வா ழ்துவாழ்ந்த) எ-து, முப்பத்தாறுகருவிகளையுநீக்கி யவற்றின்மு டிவினின்ற தம்மையருளாலறிந்தவ்வருட்டெரிசனம் பண்ணிதெரிச னமானந்தப்பேறெய்திய வவற்றையுங்கடந்து சிவமயமாய் முன்னீக் கிநின்ற கருவிகளைமீட்டுங் கண்டச்சிவத்தைமறந்தாம் பின்னுமிக்க ருவிகளை நீக்கி யச்சிவத்தையறியாதார் இப்பிரபஞ்சஞ்சிறிதுந்தோ

ன்றுதச்சிவத்தோடும் வாழ்வறவாழ்ந்த (வெறும்பாழ்விளைந்தசுகஞ் சொல்லில் வெளியைப்படியாலளந்தறியுமாம்போலவாம்) எ-து, ஒர் பொருளோடுந்தொடர்வின்றிய வெற்ற வெறுஞ்சூனியத்திலுண்டா கிய பேரானந்தத்தைச்சொல்லுவோமெனி னாகாயத்தை நாழியாலள ந்தளவிடுமாறுபோலுமாமென்றவாறு. *

ப-ம். அறியாமைகண்டு மறந்தறியாவொன்றமையாற் கருவிக ளின்மீளாதுசிவமயமாயெக்காலமு மிருப்பானென்பதாயிற்று, வெ ளியையளக்கும்படிக்குள் அவ்வெளிநிறைந் திருத்தலினதனையளக்க க்கூடாதது போற்கருதிக்கூறுமனவாக்கெல்லா மவ்வானந்தநிறைந் திருத்தலினதனைக்கூறக்கூடாதென்பதறிக. (உஎ)

(அ-கை.) பரஞானத்தாற் சிவத்தைக்கூடிப் பிரியாதிருந்தோ ர்க்குவேதாகமங்கள்கூறுஞானமிரண்டுஞ் சரியென்பதும் அபரஞா னிகட்குச்சரியன்றென்பதுமறிவித்தல். *

அறிவுக்கறிவென் னுமாகமங்கள்சுத்த...... ......*
வறிவென்னும்வேதத்தினந்தம்-பிறியா..................*
நிலைக்குச்சரியாகுநீயென்றுனானென்..................*
றலைக்குமரிபிரமமா.............................. .........*

(இ-ள்.)(அறிவுக்கறிவென் னுமாகமங்கள்சுத்தவறிவென்னும்வே தத்தினந்தம் பிறியா நிலைக்குச் சரியாகும்) எ-து. சச்சிதானந்தசி வத்தையுயிராகிய வறிவுக்கு மறிவென்றகூறுமாகமாந்தங்கள் வே தாந்தங்களறிவிக்கு மறிவு மறியு மறிவுஞ் சுத்தவவ்வறிவுதானேயெ ன்றுகூறுந்தற்போதம்போய்ச்சிவத்தைப்பிறியாதநிலைக்குஞ்சீவத்து வம்போய்ப்பிரமத்தைப்பிறியாதநிலைக்குமவ்வாகமவேதங்கள் கூறிய வாக்கியஞ்சரி யேயாகும் (நீயென்றுனானென் றலைக்குமரிபிரமமா) எ-து. அந்நிலைநில்லாதுவாசகஞானமாயி னீயதுவென்றுலதுநானெ ன்றிங்ஙனம்விஷ்ணுப்பிரமாதிகளையுமலைக்குமென்றவாறு-நீயதுவெ ன்பதாகமம்அதுநானென்பதுவேதம். (உஎ)

அ௨ அதிகாரம் - உக்கு - திருவெண்பா - ௬௰௭





உ

திருச்சிற்றம்பலம்.

# மூன்றாவது.

# யோகக்கழற்றி.



[அஃதாவது]சரிதாதியினிற்போர்களுளோரொருவர் முன்விட்டகுறைபான் ஞானத்திற்குப்பக்குவராய்வருவார்களவர்களுக்குத்தற்போதத்தையொழித்து ஞானம் வருவித்தற்பொருட்டத்தற்போதத்தாற்செய்யுஞ் சரிதாதிகளைப்போதனைகளா னீக்கவேண்டுமாகலினவ்வதிகாரத்தின் பின்னரிவ்வதிகாரங்கள் வைக்கப்பட்டன வாயின்முறைமேயவைத்துக் கூறுதியோகக் கழற்றியை முதற்கண்வைத்த தென்னையெனி னியோகம்ஞானத்திற் கருகாமாகலினு மிவ்வியோகத்தினின்றஞானபக்குவ னதிபக்குவனாகலினு முதற்கண் வைக்கப்பட்டது இவ்வதிகார மியோகத்தைக்கழலப்பண்ணினமையா னிவ்வதிகாரத்திற்கியோகக்கழற்றி யென்றுபேராயிற்று, இதன்பின்னர்க்கூறுமிரண்டதிகாரத்திற்கும் பெயருமதிகாரவளவு மிம்முறையே கொள்க, *

(அ-கை.) போதமியாதொன்றினைப்பற்றினும்விடாதென்பதுமப்பற்றைப்பிறராலும்விடுவித்தலரிதென்பதுமறிவித்தல். *

சரிதைகிரியைகளைச்சற்றுக்கிச்சாகாக்............ *

கருமயோகத்தைக்கழற்ற-வரிதவர்க்குத்................ *
தோன்றியது பொய்யாகக்காண்கையிலேதோன்றாத ... *
வூன்றியபோதங்கழலுமோ........... ............... *

(இ-ள்.) (சரிதைகிரியைகளைச்சற்றுக்கிச்சாகாக்கருமயோகத்தைக்கழற்றவரிது) எ-து, சரிதைகிரியைகளைச்செய்வ தற்பமெனக்கருதியுடனுசமாகாவகைசெய்யு மியோகிகளது கிரியாயோகத்தை யாவராலு நீக்குதற்கரிது (அவர்க்குத் தோன்றியது பொய்யாகக்காண்

கையிலே தோன்றாத வூன்றியபோதங் கழலுமோ எ-து, அக்கிரி யா யோகிகளுக்காறாதாரங்களினு மோர்மூர்த்தியைத் தியானித்தத னைவிட்டு மற்றோர்மூர்த்தியைத்தியானிக்கும்போது முன் தியானித் ததுபொய்ப்பொருளாய்ப் போகத்தமக்கனுபவமாகக் காணுமிடத் துந்தெரியாததனைமெய்ப்பொருளாய்ப் பிடித்த போதமெங்ஙனங் கழலுமென்றவாறு. (க)

(அ-கை.) கிரியாயோகஞ்செய்வது துன்பமென்று மங்ஙன ந்துன்பப்பட்டுச்செய்பினு மாணமலாபமில்றென்றும் தனதுகரு த்தையெடுத்தறிவித்தவ்வியோகத்தைமறுத்தல். *

அட்டமாசித்திகளுமத்துவாமூர்த்திகளுங்... ......*
கிட்டிலதற்கங்கங்கேகிழ்மேலாய்-விட்டு........ ......*
வரும்போதுந்துக்கமாய்வந்துவந்துமாய்ந்து.........*
பெரும்பாவஞ்செய்யப்பெறும்.....................*

(இ-ள்.) (அட்டமாசித்திகளுமத்துவாமூர்த்திகளுங்கிட்டில்)எ-து அக்கிரியாயோகத்தா லணிமாமுதலிய வட்டமாசித்திகளுந்தமக்கு க்கைவல்லியமாகக்கிடைப்பினும் விநாயகன்முதலியவாறத்துவாமூ ர்த்திகளையுஞ்சடாதாரங்களில் வழுவறத்தியானிக்கக் கிடைப்பினும் (அதற்கங்கங்கேகிழ்மேலாய் விட்டுவரும்போதுந் துக்கமாய்வந்து வந்து மாய்ந்து பெரும்பாவஞ் செய்யப்பெறும்) எ-து, அச்சித் திகளாலெடுக்கு முருவுகளுளோ ருருவிற்கோருருவு தாழ்ந்துமுய ர்ந்துந்தோற்றி யவ்வுருவுகளை யாங்காங்குவிடுத்து வரும்போதுந் துக்கமாய் அம்மூர்த்திகளையாறாதாரங்களினும் வேறுவேறுயாங்கா ங்குக்கீழ்மேலுமாய்த் தியானித்துவிடுத்து வரும்போதுந் துக்கமா யவ்வுருவெடுக்கும்போது மதனைவிடுக்கும்போது மம்மூர்த்திகளை த்தியானிக்கும்போதும் விடுக்கும்போதும் பிறந்துபிறந்திறந்திற ந்திவற்றான் மிகுந்தபாவங்களைச் செய்யப்படுமென்றவாறு. *

ப-ம். சித்தியாலோ ருருவைமறைத் தோருருவு காட்டலுந்தி யானத்தா லோராதாரம் விடுத்தோராதாரஞ்சேறலு மோர்பிறவி யைநீங்கியோர் பிறவியையெய்தலுமோரகத்தையைநீங்கி யோரவ த்தையை யெய்தலும்போலிருத்தலின் வந்துவந்து மாயந்தென்று ஞ்சித்தியாற்சாபா னுக்கிரகமுளவாகலின் முனிவுபிறந்தபோதுபிற ரைச்சபித்தலானுந் தம்மைப் படைத்தழிக்கு மூர்த்தியைத்தாம்ப டைத்தழித்தலானும்பாவம்வருதலிற்பெரும்பாவஞ் செய்யப்பெறு

மென்றுக்கூறினர். வரும்போதுந்துக்க மென்பதனையாக்கினுசக்க ரமளவுஞ்சென்று மீண்டுவரும்போதுமெனவுங்கொள்க - சகமுகத் திற் செய்யுந்தொழிற்போன் றகமுகத்துஞ்செய்தலாற் றுக்கமென் றூர் அட்டமாசித்திகளாவன. அணிமா- லகுமா- கிரிமா- மகிமா- பிரா த்திப-பிராகாமியம் - ஈசத்துவம்,வசித்துவமாகியவிவையெண்வகை யுமெனக்கொள்க. அதற்கென்னு நான்கனுருவை யதனுலென்றமூ ன்றனுருவாகக்கொள்க. (உ)

(அ-கை) இதுவுமது.

அறிவடங்காவாயுவடங்கவசைவற்றுத்..................*
தறியிருந்தாற்போலச்சமாதி-பெறுகி.................*
னடந்தகுருட்டுமனஞ்சருந்திப்பாழூர்க்.................*
கிடந்தகுழிப்புக்கதினுங்கேடு.........................*

(இ-ள்.) (அறிவடங்காவாயுவடங்கவசைவற்றுத் தறியிருந்தாற் போலச்சமாதிபெறுகில்) எ-து, தமதறிவானதனிச்சைப்படிசென் றடங்காது பிராணவாயுவைத் தமதிச்சைப் படியிரேசித்தும் பூரித் துங்கும்பித்தும்உள்ளடங்கச்செய்து தாமும் அசைவுடைசைவற்று க்கம்பமிருந்ததுபோற்சமாதிபெறுவாராயி னிச்சமாதி (நடந்தகு ருட்டுமனஞ் சருந்திப்பாழூர்க் கிடந்தகுழிப்புக்கதினுங்கேடு) எ-து நடக்கப்பட்டபிறவியந்தகுருடியஒருவலயன் விடத்தினைட்புகுத்து க்குடிபோகியபழூரின்கண்ணுள்ள பாழ்ங்கிணற்றி லெடுப்பாரற்றுவீ ழ்ந்து கிடந்தஅதனினுங்கேடாமென்றவாறு. *

ப-ம். வாயுவடக்கன்முதலிய தொழிற்செய்தலினடந்தவென் றும்அதற்குமேலாகு ஞானமின்மையாற் குருடென்றும் அந்தஞான ங்கூறுஞ்சாத்திர மறியாமையானுமனென்றுஞ் சடமாயுள்ள வாயு வுடன்கூடினமையபா னஞ்சருந்தியென்றும் முன்செய்ததொழின் மறந்தமையானுமான்டுத் திருவருள்விளக்காமையானும் பாழூர்க் கிடந்தகுழிப்புக்கென்றுமிங்ஙன் மூவமைகூறினர். அவற்றுணடந் தகுருட்டு மென்பதவர்க்குவமையு நஞ்சருந்திப் பாழூர்க்கிடந்த குழிப்புக்கென்பதசமாதிக்குவமையுமெனக் கொள்க. அவனறி யாதுவிழ்ந்தவனிரதிந்து விழ்ந்தவராகலின் அதனினுங் கேடெ ன்றூர். (ங)

(அ-கை.) கேவலசகலங்கள்தாக்காதுஅருள்வழிவாய்நிற்றற் கு பாயங்கூறுதல். *

கவிப்பயனுமாதனமுங்கண்சிமிட்டாநோக்குந்... *
தவப்பகிடியாட்டங்காண்சார்வைத் - தவிர்க்கின்.........*
மறந்தறியலாகாமலட்டறிவாய்வான்போ...............*
னிறைந்துதுளும்பாமனில்............................*

(இ-ள்.) (கவிப்பயனுமாதனமுங்கண்சிமிட்டாநோக்குந்தவப் பகிடியாட்டங்காண்சார்வைத் தவிர்க்கின்) எ-து, யோகநூலைக்க ற்றுக்கொண்டு பிறர்க்கதனைதருத்தங்கூறலும் பதுமாதன முதலிய வாதனங்கட்டலும் மனத்தையோர் தானத்தி னிறுத்தி யிமையாநா ட்டமாய்ப்பார்த்திருத்தலும் இவைமுதலிய நீசெய்யுந்தொழில்களை ஞானதபோதனர்முன்னர் தவப்பகிடிக்கூத்துக் கட்டியாடுவதாம். இனியிவ்வியோகவாதனையை நீங்குதியெனின் நேரே வீடடைதற் கோருபாயமுண்டு அஃதெங்ஙனமெனின் (மறந்தறிய லாகாமலட் டறிவாய்வான்போ னிறைந்துதுளும்பாமனில்) எ-து, நீயோகசமா திகூடும்போது ஓர்காணினைந்து மார்தான்மறந்து முன்னரறிந் ததும்பால அறியாதிப்போதர்நினைப்பு மறப்புமுதலியவொன்று ந்தோன்றாதவறிவா யெங்கும்பூரணமா யொன்றேடுந் தாக்கற்ற சைவற்றிருந்தவாகாயம்போல் நீயுமெங்கும் பூரணமாயொன்றோ டுந்தாக்கற்றசைவற்றுநிற்றியென்றவாறு. *

ப-ம். கண்சிமிட்டாநோக்குமென்றது நாசிநுனி புருவ மத்தி யங்களிற் பார்த்துக்கொண்டிருத்தல்- நல்லகூத்தாடுவான் முன்னர் அவன்வேடந்தானும் போட்டுக்கொண்டு அக்கூத்திற்குமாறுய அசு சிபக்கூத்தாடுவானைப்போல் ஞானிகளைப்போலும் வேடமுநடையு ங்காட்டி அவரது பூரணவறிவிற்கு மாறுயகிஞ்சிஞ வறிவுடனேயிரு த்தலிற் றவப்பகிடியாட்டமென்றார், மலட்டறிவொன்றுங் கலவாத வறிவு. (ச)

(அ-கை.) இங்ஙனமிருவருக்குஞ் சமாதிகூடுதல் சரியெனின் யோகியைஞானிகளிகழ்ந்து கூறுவதென்னை யெனின் சமாதிகூடுத ல்இருவருக்குமொத்ததாயினு மியோகியிங்ஙனஞ்செய்தலா னிகழ்ந் துகூறினொன்றறிவித்தல், *

சுத்துவமுட்டாக்காச்சமாதியினைச்சார்போதப்.....*
பித்தனென்பார்பேரிற்பிழையுண்டோ - புத்திபோய்ச்*
கம்பக்களிறுகட்டக்கல்லினூர்காணுமிவ.............*
ரம்பரத்தைவந்துபிடிப்பார்..............................*

(இ-ள்.)(தத்துவமுட்டாக்காச்சமாதியினைச்சார்போதப் பித்த னென்பார்பேரிற்பிழையுண்டோ) எ-து, தத்துவங்களையெல்லாநி யதிபண்ணி நீங்கித் தம்மையருளா லறியுமறிவின்றி அத்தத்துவங்க ளைத்தவிமேன்முட்டாக்காய் மூடிக்கொணடுசமாதிகூடும் கிரியா யோகியைச் சார்போதனுகியபித்தனென்று கூறும் ஞானிகண்மே ற்குற்றமியாது (புத்திபோய்க் கம்பக்களிறுகட்டக்கல்லினர் கானு மிவ ரம்பரத்தைவந்துபிடிப்பார்) எ- து, யூகபுத்தியின்றி கம்பத் தின் கண்ணடங்கா மதக்களிற்றைக்கட்டுதற்குக் கலலின்கணூருரி ப்பாருந்தாமிருந்தற்கிடங்கொடுத்திருந்த ஆகாயத்தைச் சென்றுபி டிப்பாரு மியார்காணுமென்றவாறு. *

ப - ம். தத்துவமுட்டாக்காச் சமாதியென்றது மனத்தான்வா யுவைவாங்கி யுண்ணிறுத்தி அதனுட்டாமறைந்திருத்தலின் அங்ஙன மிருப்போர்க் கறிவிக்கவறியும் போதமேயின்மையான் எங்ஙனஞ் சிவத்தையறிவாரொன்பது குறித்துக் கம்பக்களிறு கட்டக்கல்லினு ரொன்றுந் தம்முயிருட்பூரணமாயிருந்த சிவத்தையறியாது மற்றோ ரிடத்திருப்பதாய்க்கருதி அதனைப்பிடிக்கச்சேறலினம்பரத்தை வந் துபிடிப்பாரென்றுங்கூறினர். சார்போதஞ்சேர்ந்தகருவி மயமா யிருத்தல், மனமும்பிராணவாயுவுமிருந்தவிடத்து எல்லாக்கருவிக ளுமிருக்குமாகலிற் றத்துவமென்றுபொதுப்படக்கூறினர். (ரு)

(அ-ரை.) சகலகேவலங்களை நீக்கித் தம்மை யருளாலறிந்து சுத் தாவத்தையினிற்போரியோகி கருதியபொருளையெண்ணு மொன்றறி வித்தல். *

௬ நெய்யினிழற்போனிழலிற்புருடனைப்போற்... *
பொய்யில்விகற்பம்புகுவதுவுந் - துய்ய.............*
வொளியோகையாகியொடுங்குவதுந்தம்மைத்.. ......*
தெளியாதார்செய்யுஞ் செயல்......................... ...*

(இ-ள்.) நெய்யினிழற்போனிழலிற்புருடனைப்போற்பொய்யி ல்விகற்பம்புகுவதுவும்) எ - து, நெய்யின்கட்டோற்று நிழல்போ லும் அந்நிழலைப்பார்த்து ஆகாயத்தைப்பார்க்கில் அந்நிழல்போற் றோற்றுஞ் சாயாபுருடனைப்போலுங் கருவிகளாகிய பொய்யிற்கூ டியதற்போதவிகற்பத்தாற் றமுமதம்மாற்றி யானிக்கப்பட்ட மூர் த்திகளும் ஆருதாரங்களிற்றோற்றுவதும் (துய்யவொளியோகையா கியொடுங்குவதுந்தம்மைத்,தெளியாதார் செய்யுஞ் செயல்) எ - து

நிருமலமாகிய விந்துதெரிசனமு நாததெரிசனமுமாய்த் தோற்றி அங்ஙனந்தோற்றியவாறேநில்லாது மீட்டுமொடுக்குவது மாகியவி ச்செயல்களெல்லாந் தம்மையருளாற் றெளிந்தறியாதார் செய்யுஞ் செயல்களாமென்றவாறு. *

க - து. நெய்போற் கருவிகளதிற்றோற்றுநிழலும் அந்நிழல் போலாகாயத்திற்றோற்றுஞ் சாயாபுருடனும்போற் றமுந்தம்மா ற்றியானிக்கு மூர்த்தியுமென்ப தறிக. விந்துநாததெரிசன மாயை யுட்டோற்றுவதாகலின் அதுபொருளன்றென்பதுகாண்க. (௬)

(அ-கை.) இதுவுமது.

சாக்கிரத்தேகேவலத்தைச்சார்ந்துவிடத்தத்துவத்தை
நூக்கியொழிப்பார்போனுழைவதையு - நீக்கியே... *
கண்ணாடிபார்த்தகுரக்கறிவாய்க்காண்பதையு...... ...*
மெண்ணூரவத்தையறியில்........... .......... ......*

(இ-ள்.)(சாக்கிரத்தேகேவலத்தைச்சார்ந்துவிடத்தத்துவத்தைநூ க்கியொழிப்பார்போனுழைவதையும்) எ-து, சாக்கிரத்திலதீதத்தைப் பெறும்பொருட்டு தத்துவங்களைத்தள்ளி யொளிப்பார் போன்றவற் றுட்டாமறைந்திருப்பதையும் (கண்ணாடிபார்த்த குரக்கறிவாய்க்கா ண்பதையுமவத்தையறியினீக்கியேயெண்ணூர்) எ - து, கண்ணாடிபா ர்த்தகுரங்கு அதனுட்டோன்றிய நிழலைத்தன்னிழலென்றறியாதும ற்றோர்குரங்கென்றதனை மெய்யாகக்கருதும் அதனதறிவுபோலத் தற்போதத்தாற்றியானித்தறியும் பொருளை அத்தியானத்தின்படி க ருவிகளிற்றோற்றுவதென்றறியாது அதனைமெய்ப்பொருளாக்காண் பதையுஞ் சுத்தாவத்தையினிலக்கணமறிவாரொனின் அவர்பொய்யெ னநீக்கி ஓர்பொருளாயெண்ணொன்றவாறு. *

ப-ம். ஆதாரமாறையுமுடுருவிநிற்கின்றோம் தத்துவங்களையெ ல்லாங்கடந்தோமென்றுகருதிப் பிராணவாயுவின் மறைந்திருத்தலி னூக்கியொழிப்பார்போனுழைவதையுமென்றார், சுத்தாவத்தையில ருண்மயமாய்நிற்போர்க் கெதிரிட்டதெல்லாம் பொய்யாகலின் அவ த்தையறியிலெண்ணொன்றார். (எ)

(அ-கை.) திருவருளை யறிதற்குத் தற்போத மொழித்தற்கு மு பாயமியாதுகூறினுந் தெளிந்துகொள்ளாத யோகியைப் பார்த்து வெறுத்துப்போதத்தை யறிந்தடக்கினாலன்றிக் கருவிகளடங்காதெ ன்பதும் அப்போதத்தைப்பின்னிட்டு அருளை முன்னிட்டுச் செல்ல

வேண்டுமென்பதும் அவ்வருளைமுன்னிட்டுச் சென்றபோதும் அத்னைத்தற்போதத்தா லெதிரிட்டுப்பார்க்கலாகாதென்பதுமறிவித்தல்*

உபதேசப்பித்தோவுபமானப்பித்தோ...... ... ...*
விபரீதமோபழக்கோவேறே - தபசிநீ........ ......*
கண்மூடாவிண்மூடத்தேடுங்கவிசனேபோ,..... ......*
லெண்மூடாயோகமிதுவென்........... ...*

(இ-ள்.) (உபதேசப்பித்தோவுபமானப்பித்தோவிபரீதமோபழக்கோவேறே தபசிநீ) எ-து, உனக்குநாஞ்சொன்னவுபதேசப்பித்தமோ சாத்திரங்கூறியவுபமானப்பித்தமோ உனதுவிபரீதபுத்திதானோ முற்செனனங்களிற் றொன்றுதொட்டு நீ செய்துவந்த பழக்கந்தானோ அஃதன்றி பிறர்செய்வதைக்கண்டு பாவனையாய்ச் செய்தன் முதலிய மற்றியாதோ தவவேடம் பூண்டுதவத்தைப் பண்ணப்பட்ட நீபத்தவத்திற்குரிய ஞானயோகம் புரியாது (கண்மூடாவிண்மூடத்தேடுங்கவிசனேபோலெண்மூடாயோகமிதுவென்) எ - து, விண்ணை மூடவேண்டி னதனைநாடுங் கண்ணைமூடாது வைத்து அவ்விண்ணை மூடுதற்குக் கவிசனைதேடு மொருவனைப்போன் றெண்ணப்பட்ட மூடனே பஞ்சபூதாதிகருவிகளை யொழிக்கத்துடங்கிய நீ யவற்றை நாடுந் தற்போதத்தைக் கட்டிமைபோல் உனதுபிணைவிட்டு நீங்காதிருந்தவருளின்மறைந் தடக்காதித்தற்போதத்தால் அப்பஞ்சபூதாதிகருவிகளையொழிப்பமென்று கருதிப் பிராணவாயுவையுண்மதித்திதனோடும்போராடி நீசெய்யுமியோகமீ தென்னைகொ லென்றவாறு. *

க-து. அருளின்மறைந்தசைந்தோனுக்கு அவ்வருளே தோன்றுங்கருவிபின்மறைந்தசைந்தோனுக்குஅக்கருவியே தோன்றுமாகலின் அவ்வியோகத்திற்கும் இவ்வியோகத்திற்கும் பேதம் இவ்வனுபவத்தானுங்காண்க. ஒகாரமடுக்கிவந்திது வென்னைமுடிந்தது. (அ)

(அ-கை.) இதுவுமது.

வாலேமுகமாய்வளையானையேறினுற்...... ......*
போலேயுன்போதமோபோய்த்தீண்டுஞ்-சாலப்... ...*
பெருஞ்சிரிப்பாந்தன்னைப்பிடித்தாட்டும்பேயைத்... *
தெரிந்திருக்கத்தேடுஞ்செயல்........ ....... ...... ..*

(இ-ள்.)(வாலேமுகமாய்வளையானையேறினுற்போலேயுன்போ

நமோபோய்த்தீண்டும்) எ-து. தான்கருதியவூருக்குச்செல்லத் தலைப்புறத்தைப்பின்னிட்டு வாற்புறமுகமா யானையேறினாற்போலும் நீகருதியசிவத்தையடைதற்கு அருளைப்பின்னிட்டுஉன்போதத்தைமுன்னிட்டுச்சென்றால் உன்போதமோஅச்சிவத்தைப்போய்த்தீண்டுவது (சாலப்பெருஞ்சிரிப்பாந்தன்னைப்பிடித்தாட்டும்பேயைத் தெரிந்திருக்கத்தேடுஞ்செயல்) எ-து, ஆயினவ்வருளைத்தானறியவேண்டாமோவெனிற் றன்னைவிடாதுபற்றிநின்ற தனதிச்சைப்படி ஆட்டும்பேயையெதிரிட்டறிந்திருக்கஅஃதெங்குளதென்று தேடும் ஒருவனறியாமைபோன்று பெத்தமுத்திகளினும் புணர்துயிலைவிட்டுநீங்காதிருந்தாட்டி யுறக்கியுபகரித்து வீட்டைக்கொடுக்குந்திருவருளைவேறுபிறித்துஇஃதெங்குளதென்று தேடுவது இத்திருவருண்ஞானம்பெற்றோர்க்குமிகவுநகையாமென்றவாறு. *

க-து. வாற்புறமுகமாயேறினானை அவன்கருதியவூருக்குமாறாகிய வூரைச்சார்விக்கும் தலைப்புறமுகமாயேறினானை அவன்கருதியவூரைச்சார்விக்கும் அதுபோல்அருளைப்பின்னிட்டுப்போதத்தைமுன்னிட்டுச்சென்றோனைக் கருவிகளைச்சார்விக்குந்திருவருளை முன்னிட்டுப்போதத்தைப்பின்னிட்டுச்சென்றோனைச் சிவத்தைச்சார்விக்குமென்பதறிக. (௬)

(அ-கை.)இதுவுமது.

குறங்குகுத்திக்கொண்டுகுரோக்கைகத்திக்கூட்டை *
மறந்தழைத்தாற்றூக்கம்வருமோ-வெறுங்கெடுவீர் .. *
தன்னையழித்தெழுந்தசச்சிதானந்தத்தை ....... .... *
யுன்னிலொளித்துவிடாதோ.. ........... ...........*

(இ-ள்)(குறங்குகுத்திக்கொண்டுகுரோக்கைகத்திக்கூட்டைமறந்தழைத்தாற்றூக்கம்வருமோ) எ-து, பாயலிற்படுத்துக்கொண்டு துடைகுத்திக்கொண்டு குரோக்கைவிட்டுக்கொண்டு உடம்பைமறந்ததாய்ப்பாவித்துக்கொண்டு தூக்கமே நீவாராயென்றழைத்தால் அத்தூக்கம்வருமோ அங்ஙனநினைத்துச்செய்யுநினைவை யழித்தெழுங்கேவலம்வந்தாலன்றி அதுபோலு முன்போதத்தாற் பிராணவாயுவைமறித்து நீசெய்யுமியோகத்தால்ஆனந்தநித்திரையை வாச்சொன்னால் அந்நித்திரைவருமோ அப்போதத்தை யழித்தெழா நின்ற அருட்கேவலம் வந்தாலன்றி, அவ்வருட்கேவல மெங்ஙனம்வருமெனின் (வெறுங்கெடுவீர் தன்னையழித்தெழுந்த சச்சிதானந்தத்

தையுன்னிலொளித்துவிடாதோ) எ-து; அந்தோவெருங் கெடுவீர் தற்போதத்தையொழித்துத் தானாயிருக்குஞ் சச்சிதானந்தவடிவா கியசிவத்தையும்போதத்தாலுன்னி லுன்னையறியாதுனக்குள்ளொளித்துத் தன்னைவிட நீயொருமுதலாக்கிப் பிரித்து விடுமாகலின் உனதுயிர்க்குள்ளிருந் தறிவிக்கும் பூரணமெனக் காண்டியென்றவாறு.

க-து. சுபாவநித்திரைபண்ணுவோன் செயலெல்லாங் காட்டி நித்திரைபண்ணாதிருந்தானைப்போல் ஏகாந்தத்திருத்தல் ஆசனங்கட்டல் அசைவறவிருத்தன் முதலியஞானிகள்நடையைக்காட்டி அவரைப்போலும னந்தநித்திரைபண்ணாது தற்போதத்தோடிருத்தலினங்ஙனமுவமைகூறினர். ❋

(அ-கை.) நீர் கூறியவாறேயோகிகளுஞ் சிவம்வாக்கு மனாதீதகோசரமென்றுகூற நீரவரைமறுப்பதென்னையெனின் அவரங்ஙனங்கூறினராயினும் மனாதிகளைக்கடந்துநின்ற பூரணத்தையுணர்ந்தவரலரென்றறிவித்தல்-

மனவாக்குக்காயத்தான்மாய்ந்தளவைமாண்ட... ...❋
தெனவாய்ப்பறைபறையிலென்று-நினைவதெல்லாஞ் ...❋
சாக்கிரப்பொய்தானுந்தனியனலத்தற்பரமு... ......❋
நீக்கமற்றபூரணமென்னில்........................ ... ...❋

(இ-ள்.) மனவாக்குக்காயத்தான்மாய்ந்தளவைமாண்ட தெனவாய்ப்பறைபறையிலென்றுநினைவதெல்லாஞ்சாக்கிரப்பொய்)எ.து மனவாக்குக் காயத்தால்வருந்தி யோகசமாதிகூடிச் சிவத்தைப்பெறுதம்மனவாக்குக் காயங்களால் அளவிடப்பட்டவளவைகளை யெல்லாங்கடந்தது அச்சிவமெனப்பிறர்க்கு வாய்ப்பறைபறைந்துகூறியவாற்றுலவர்க்குப் பயனென்னையுண்டாம் அவர்பாவிப்பதெல்லாஞ்சாக்கிரப்பொய்யாகலின் (தானுந்தனியனலத்தற்பரமு நீக்கமற்றபூரணமென்னில்) எ-து, ஆன்மாவுஞ்சிவத்தைவிடவேறொர்தனிமுதலன்றென்றும் அச்சிவமும் ஆன்மாவைவிட்டுநீங்காது உட்புறம்பாய்நிறைந்துள்ள பரிபூரணமென்றும்வேதாகமங்கள் கூறுமெனின் என்றவாறு. ❋

ப-ம். மனத்தால்வருந்துவது வாயுவையுண்மறித்தல் வாக்கால்வருந்துவதுசாத்திரம்பார்த்தல் காயத்தால் வருந்துவது ஆசனங்கட்டல்அவுஷிதம்புசித்தல்முதலியன அளவையென்பதுகாட்சி அனு

மானமாகமமுதலியன அவ்வளவை மாண்டதான்மாவுஞ் சிவமுமிர ண்டற்றிருந்தவிடம் அதனையறியாது மானதக்காட்சியி னின்றள வைமாண்டதென்றமையால்வாய்ப்பறையறையிலென்று மென்றார்.

(அ-கை.) பூரணத்தையடைதற்கு ஈதுபாயமென்றறிவித்தல்*

வாயுமனங்கண்ணசையாவாறடக்கிமக்கினமாய்... *
நீபுதைந்துபோய்க்கூடனீதியோ - காயத்துக்.........*
குட்புறமாய்நீதானுயுண்டில்லையாயதற்கு...... ... ...*
மப்புறமாய்த்தாக்கற்றதை.............. ... ... ... ...*

(இ-ள்.)(வாயுமனங்கண்ணசையாவாறடக்கிமக்கினமாய்நீபுதை ந்துபோய்க்கூடனீதியோ)எ-து.வாயுவுமனமூங்கண்ணுஞ்சிறிதும்அ சையாவாறடக்கி அங்ஙனமடக்கியபோதமுந் தோன்றாதவற்றுண் மறைந்து நீ சென்றடையத்தொடங்குதன் முறைமையோ (காயத்து க்குட்புறமாய்நீதானு யுண்டில்லையாயதற்கு மப்புறமாய்த் தாக்கற்ற தை)எ-து. வெறுங்கடத்திருந்தவாகாயம்போன்றிக்காயத்திற்குள்ளு ம்புறம்புமாய் நீயருள்தானுகிபகாலத்து அவ்வனுபவத்தையுண்டெ ன்றும் இல்லையென்றுஞ் சொல்லப்படாததாய் அதற்குமப்பாலாய் ஒன்றேடுந்தாக்கற்றிருந்தசிவத்தையென்றவாறு. *

ப - ம், ஆன்மாவருள்வயப்பட்டபோதெல்லா மவ்வருள்வடி வாய்த்தோற்றலானுண்டென்றும் அங்ஙனந் தோற்றியவருளை யின் னபிரகாரமாயிருக்குதென்றுசொல்லக் கூடாமையா னில்லையாயெ ன்றும் அதனையுங்கழன்று சுகாதீதப்படுதலின் அதற்கு மப்புறமா யென்றுங்கூறினர். இங்ஙனமிருப்பதனையங்ஙனம்போய்க்கூடத்து டங்கலுனக்குத்தானீதியோவென்றுடன்படுத்திக்கூறினர். (௯௨)

(அ-கை.) யோகியினது கருத்தையெடுத்துக்காட்டி யிங்ஙன நிற்பி னங்ஙனந்தோற்றுமெனின் எங்ஙனநிலையைப்பெறுவாயென்ற வனைமறுத்தல். *

ஒட்டாதிருக்கவென்றுலொட்டாதுறக்கமாஞ்... ...*
சுட்டாதிருக்கிற்சுடர்க்கொழுந்தாந் - துட்ட... ... ...*
மனத்தோடுவாயுவைநீர்மண்டையிலேவைக்க...... ...*
நினைப்பேரிதென்னநிலை.............. ... ... .........*

(இ-ள்.) (ஒட்டாதிருக்கவென்றுலொட்டாதுறக்கமாஞ் சுட்டா

திருக்கிற்சுடர்க்கொழுந்தாம்) எ-து, உமதுயோகத்தாற் கருவிகளொன்றுந் தாக்கா தொழித்திருப்போமென்று நீர்கருதினால் அக்கருவிகளொழித்தபோது அவையொழிந்தபடி நிற்கவொட்டாது. கேவலம்வந்துசாரும் அக்கருவிகளொன்றையு மெதிரிட்டுப் பாராதிருப்போமெனில் ஆண்டோரொளிதோற்றும் மனத்தான் வாயுவையடக்கிநிற்பி னிங்ஙனமாமெனின் (துட்டமனத்தோடு வாயுவைநீர் மண்டையிலேவைக்க நிணட்பீரிதென்னநிலை) எ-து, அக்கொடிய மனத்துடனேவாயுவையும் பிரமரந்திரத்தினிறுத்துதலே முத்தியென்றப் பிரமரந்திரத்திலவற்றை நிறுத்தக்கருதுவீர் இஃதென்னவுண்மைநிலையென்றவாறு. *

ப-ம். மனத்தையும்வாயுவையும் பிரமரந்திரத்தி னிறுத்தினுற்கருவிகளெல்லாமொழியும் அவையொழியவே கேவலமூடும் அதுமூடவே தம்மையுந்தமக்குளிருந்தறிவிக்குந் திருவருளையுந் தெரியாதாகலின் அந்நிலையையிதென்னநிலையென்றார். (௯௫)

(அ-கை.) வாயுவைவிட்டு மனத்தைமாத்திரநிறுத்தினாற் சிவத்தைப்பெறலாமோவெனின் தற்போதத்தாற் றன்மனத்தை யடக்கக்கூடாதென்றறிவித்தல். *

கூட்டிற்குரங்கைநிழற்கோரணிக்கூத்தாமனத்தை. *
யாட்டிப்பிடித்தாரடக்குவார் - காட்சியறச்............*
சும்மாதிருக்கிலசையாதுசுற்றுவிறி........ .........*
சம்மானபம்பரங் காணும்.............. ......*

(இ-ள்.) (கூட்டிற்குரங்கைநிழற்கோரணிக்கூத்தாமனத்தையாட்டிப்பிடித்தாரடக்குவார்) எ-து, ஓர் கூட்டிலடைத்துவைத்த குரங்கைப்போலும் நிழற்பாவைக்கோரணிக்கூத்துப்போலும் ஒருவர் பிடியாதிருக்கவுந் தானேசேட்டிக்கு மனத்தினைப் போதத்தாற்பற்றிப்பிடித்தாட்டி யாவரடக்கிக்கொள்வார் (காட்சியறச்சும்மாதிருக்கிலசையாது சுற்றுவிறி சம்மானபம்பரங்காணும்) எ-து, போதமொன்றையுமெதிரிட்டுநாடாது சும்மாதிருப்பினும் ஒருவர் பிடித்தசையாதுதானே சுற்றப்பட்டவிறிசுபோலும் ஒருவரறிந்து பிடியாதுதானேசுழலுமம்மானைபோலும் ஒருவராட்டாதாடும்பம்பரம்போலுந்தானேவிரைந்தெழுந்தசைவதெனினென்றவாறு. *

ப-ம். உடம்பினின்றுசேட்டித்தலிற் கூட்டிற்குரங்கையென்றும்நிழற்கோரணிக்கூத்தைக் காண்டன் மாத்திரமன்றிப் பிடிக்கக்கூ

பாததுபோன் மனத்தினது போக்குவரத்தறிவதேயன்றி அதனை யறிந்து பற்றக்கூடாமையினிழற்கோரணிக் கூத்தென்றும் பன்மு கமாய்ச்சிதறியெழலின் விறிசென்றுங் குதித்துக் குதித்தெழலின் அம்மானையென்றும் ஓர்கணத்திலனேகஞ்சுழலாய்ச் சுழல்வதனாற் பம்பரமென்றுங்கூறினர். கூட்டிற்றூங்கலைசவும்நிழற் கூத்தசைவுந் தூலமாகலின் போதமசைந்தவிடத்ததனதசைவிற் குவமையும்விறி சம்மானைபம்பரத்தசைவும் சூக்குமமாகலிற் போதஞ் சிறிதடங்கிய விடத்தம்மனத்தினதசைவிற் குவமையுமாகக்கொள்க. (டுச)

(அ-கை.) இதுவுமது.

பற்றாதபோதும்பதறும்பழக்கமதைக்..................*
கற்றாலென்னாகக்கலக்காது - சற்றேநீ..................*
தீண்டிவிடிற்றான்காண்செனனமரணமது..................*
மாண்டுவிடினீசிவமாவை..................*

(இ-ள்.) பற்றாதபோதும்பதறும்பழக்கமதைக் கற்றாலென்னாகக்கலக்காது) எ-து, ஓர்பொருளையும் போதங்கருதாதசைவற்றிரு ந்தபோது முன்னரசைந்த அப்போதத்தோடுங் கூடிய பழக்கத்தா ன்விரைந்தெழு மனத்தைப் போதத்தாற் பிடித்துச் சாதித்தடக்கு வேனெனி னுன்னையெங்ஙன மயங்கக்கலக்காது (சற்றேநீ தீண்டி விடிற்றான்காண்செனனமரணமதுமாண்டுவிடினீசிவமாவை) எ-து, உன்போதத்தால் அம்மனத்தினைக்கணப்போதாயினும் பிடித்துவி டுத்தியெனின் அதுதானேபிறப்புமிறப்புமாம் அங்ஙனம் பிடித்து விடுக்கும்போதமிறக்கு மூபாயமறிந்திறக்குமெனின் அம்மனமுமி றக்கு நீயுஞ்சிவமாவாயென்றவாறு. *

ப-ம். பிடித்தபோதுநினைப்பும் விடுத்தபோது மறப்பும்வருத லிற்செனனமரணமென்றார். (டுரு)

(அ-கை.) கேவலசகலங்கள்தாக்காது திருவருட் கணிற்றற் கு பாயங்கூறுதல். *

அறிவாயிரீர்மயக்கமாகாதசையில்.................*
விறிசாய்விடாதோவிகற்பம் - பிறியாத்..................*
தாரசினுனிபோற்சமாதிவரின்ஞான..................*
விராசனுமக்கொப்பாரெவர்..................*

(இ-ள்.) (அறிவாயிரீர்மயக்கமாகாதசையில்விறிசாய்விடாதோ

விகற்பம்) எ-து, கருவிகளையெல்லாநீங்கிநின்றவுயிரறிவைவிட்டுநீங்காத அருளறிவாயிருங்கோளங்ஙனமிருப்பீரொனின் மயக்கம்வந்தடாது அவ்வுயிரறிவைப்பிரியாவறிவைத்தற்போதத்தாலெ திரிட்டுப்பார்ப்பதாயசையில்விகற்பஞ்சுழல்விறிசுபோலாய்ச் சுழலு மாகலினங்ஙனம்ப ர்த்தசையாது (பிறியாத்தராசினுனிபோற்சமாதிவரின் ஞானவிராசனுமக்கொப்பாரெவர்) எ-து, இரண்டுதட்டிலுமிட்டபொன்னும் கல்லுஞ் சரிபானபோதுகீழ்நின்ற முள்ளோர்பாற்சாயாது மேனின்ற முள்ளைப்பிறியாதிருந்த அத்தராசின் முண்ணுனிபோன்மயக்கமும்விகற்பமுமடாது அவ்வருளறிவினேரேயுமதுபோதமசைவற்றிருக்குஞ்சமாதிவருமாயின் அப்போதுநீர்ஞானராஜாவாவீர் அஃதன்றியுமக்கொப்பாருமியாவ ரிவ்வுலகத்தென்றவாறு *

ப-ம். கற்போலுங்கேவலம்பொன்போலுஞ்சகலம் அக்கன்மிகுந்தபோது கற்றட்டுப்புறத்தும் பொன்மிகுந்தபோதுபொற்றட்டுப்புறத்துஞ் சாயுங்கீழ்நின்றமுட்போல் ஆன்மா இம்முட்சாய்ந்தபோதுஞ் சாயாதசைவறநேரே நின்றபோதுமசைவற்ற மேனின்றமுட்போலருளெனவறிக. மேனின்றமுட்போற்கீழ்நின்றமுள்ளுமசைவறநேரேநிற்றல்போல் ஆன்மாவருளின்அசைவறநிற்கவேண்டுமாகலிற் றராசினுனிபோலென்றார், இங்ஙன நிற்கின்ற சமாதிவருதலரிதாகலின் வரினென்றார். (யசு)

(அ-கை.) இங்ஙனங்கேவலசகலங்களை நீக்கித்திருவருளிலசைவற நிற்கக்கூடாதாயினும் அந்தக்கரணங்களை யடக்குதற்குபாயமென்னையெனின் திருவருளையுள்ளும்புறனும் பரிபூரணமாய்ப்பாவித்தாற்கரணமடங்குமென்றறிவித்தல். *

நீர்க்குப்பதமுநெருப்புச்சுடுந்தொழிலுங்...... ...*
காற்றைச்சலிக்கவுமார்கற்பித்தா - சார்க்குமிது... ...*
போகாமனுறிபுதைக்குநிழற்போலாநீ........ ......*
யாகாயம்பார்பாரறும்...................... ...*

(இ-ள்.) (நீர்க்குப்பதமுநெருப்புச்சுடுந்தொழிலுங் காற்றைச்சலிக்கவுமார்கற்பித்தா சார்க்குமிதுபோகாமனுதி) எ-து, நீரிற்குக் குளிர்ந்தபதஞ்செய்யுங்குணமும் நெருப்பிற்குச்சுட்டொன்றுவிக்குங்குணமும் காற்றிற்குச்சலித்துத்திரட்டுங்குணமுங் கற்பித்தாரியாவர் அவற்றிற்குஇக்குணங்களியல்பானவாறுபோல் மனத்திற்கோர்பொருளைப் பற்றுங்குணமும் புற்றிக்கதுபற்றியபொருளை நீச்சு

யிக்குங் குணமும் அகங்காரத்திற் கருநிச்சயித்த பொருளை யபிமானிக்குங்குணமுஞ்சித்தத்திற் கலீ௦யபிமானித்தபொருளைச்சிந்திக்குங் குணமும் இபல்பாமாகலி னியாவர்க்கும் இம்மனமாதி யந்தக்கரணங்கணீங்காது ஆபினீர் இங்ஙனங் கூறியவாற்றான் அக்காணங்களங்ஙனமிருப்பனவன்றியவற்றை நீக்கவேண்டாவோ வெனின் (புதைக்குநிழற்போலாநீ யாகாயம்போற்பாரறும்) எ-து, நிழலைப்புதைக்கமண்போடுந்தோறும் அம்மண்மீது மேன்மேலெழப்பட்ட புதைக்குநிழற்போலும் அக்கரணங்களையுன், போதத்தானடக்குந்தோறும் இப்போதத்தின்மீது மேன்மேலெழுவதாமாகலின் உனதுபிருட்பிறிவற்றிருந்தவருளை யுட்புறனுயொன்றேடுந் தாக்கற்றிருந்த ஆகாயம்போல் அவ்வருண்ஞானக்கண்ணாற்றேகாதிப்பிரவஞ்சங்களையெல்லாநிரந்தரமாய்ப்பார் இங்ஙனம் பார்த்தபோது அக்கரணங்களறுமென்றவாறு. *

௧-து. இதனாலந்தக்கரணம் பொறிவழிச்சென்று பிரவஞ்சத்தைநாடும்போதும் அங்ஙனஞ்செல்லாவிடத்து அவ்வாசனையாலுள்ளேயசையும்போதுந் தற்போதத்தாலடக்கினடங்காது மேன்மேலெழுமாகலிற் புறம்புமுள்ளுந் திருவருளைப் பரிபூரணமாய்க்காணின் அக்கரணங்களடங்குமென்பதாயிற்று. நீராதியியற்குணங்களைப் போதத்தாலடக்கக்கூடாததுபோன்மனுதியியற்குணங்களையும்இதனாலடக்கக்கூடாதென்பதுங்காண்க. (௰எ)

(அ-கை.) இங்ஙனமுள்ளும்புறம்பும் பரிபூரணமாய்ப்பாவிப்பதருளன்றேவெனின் அருளையெதிரிட்டறியிலன்னியமாமென்றறிவித்தல். *

மண்ணைமலையைமறிகடலைவானகத்தை..............*
யெண்ணிலளந்தறியவெய்துமோ-வுண்மையைநீ... ..*
யுண்டென்னிலோர்வார்த்தையுண்டலாதுன்னொழிவைக்
கண்டறியிலன்னியமாங்காண்.............. .........*

(இ-ள்.)(மண்ணைமலையைமறிகடலைவானகத்தையெண்ணிலளந்தறியவெய்துமோ) மண்ணகமுழுதையும்வானகமுழுதையு நீட்டலளவையானும்; மலையையெடுத்தலளவையானும், மறிகடலைமுகத்தலளவையானும் எண்ணுமிடத்தொருவரால் இவ்வளவென்றளவிட்டறியக்கூடுமோஅதுபோல (உண்மையைநீ யுண்டென்னிலோர்வார்த்தையுண்டலாதுன்னொழிவைக்கண்டறியிலன்னியமாங்காண்) எ-து,

இருநூற்றிருபத்து நாலுபுவனங்கட்கும் அவற்றுளிருந்த சராசர வுயிர்கட்கும் உட்புறம்பாய்நிறைந்துள்ள திருவருளைநீயுண்டென்றுசொற்றியெனினவ்வோர்சொல்லு முண்டாவதன்றி யிச்சொற்குப்பொருளின்றென்றுன்போதத்தாலிதனது நாசத்திற்றோற்றும் அவ்வருளைக் கண்டளவிட்டறியக்கூடுமோ அங்ஙனமன்றளவிட்டறிவேமெனில்உனக்கனன்னியமாயிருந்த வவ்வருளன்னியமாய் நீங்குமென்றவாறு. *

ப-ம். இதனுந்போதத்தாற் சிறிதளவிடப்படு மண்ணுதிபொய்ப்பொருளைமுற்று மளவிடக்கூடாதெனின் அப்போத நாசத்திருந்தமெய்ப்பொருளையெங்ஙனமளவிடக் கூடுமென்பதா யிற்று அருளனன்னிய மாயிருந் துள்ளதாயினும் போதந்தடித்தபோது மலவாசனைதோன்றும்இம்மலவாசனையோடுங்கூடிய போதத்திற்குமலரகிதமாயிருந்துள்ள அவ்வருட்டோற்றாதாகலி னன்னியமாங்காணென்றார். (ளஅ)

(அ-கை) அருளாற்கருவிகளினதுண்மையையறிந்து நீக்கினுலீங்குமென்பதும் போதத்தாலடக்கின் மேன்மேலெழுமென்பதுங்கருவிகளையுநியதிகளைந்து தற்போதத்தையுமடக்கி னுன்மீட்டுக்கருவிகள்தோற்றுதென்பதுமறிவித்தல். *

உதித்தொடுங்கும்பொய்க்காருபாதானமென்று ...*
துதிப்பையுதிப்பாலொடுக்கிற்-பதைத்தெழுந்த... ...*
பந்தன்றேசாட்சியைப்போற்பார்வேர்பறித்தமரங்...*
கொந்தலர்ந்துசாயாதொக்கும்.................. ......*

(இ-ள்.) (உதித்தொடுங்கும்பொய்க்காருபாதானமென்று துதிப்பையுதிப்பா லொடுக்கிற்பதைத்தெழுந்த பந்தன்றேசாட்சியைப்போற்பார்) எ-து, ஆகாயத்திறேன்றிமறைபுங்கார் போன்மாயையிற்றேன்றியொடுங்கும் பொய்யாகியகரணங்களையும் மாயையென்றருளாற்கண்டு நீக்காததனைமெய்ப்போதங்கருதி அக்கரணங்களைப்போதந்தாலடக்கில் அவைகரந்தாலறையுந்தோறும்விரைந்தெழுந்தபந்துபோலாகாதோ அப்பந்தைக் கரத்தாலறையாதுவிடுத்தானிலத்திற்கிடக்குமாகலின் இதன்சாட்சியைப்போலுன் போதத்தாலைத்தறைபடக்கின் மேன்மே லெழுமென்பதையு முன்போதஞ்சும்மாநிருப்பி லவைதாமேயடங்கு மென்பதையும்பார்த்தறிதி அஃதன்றியும்(வேர்பறித்தமரங் கொந்தலர்ந்துசாயாதொக்கும்) எ-து,நி

லத்தினூன்றியமுதல் வேர்பறித்தமரம் பூத்துக்காயாததுபோலும் உன்போதமற்றபோது கரணவிந்திரியங்க ளொன்றுந்தோன்றாதது மென்றவாறு. *

ப-ம். உபாதானமென்றது மாயையை அதுகாரியத்தைக்க ரணமாகக்கூறியது. கரணம்போற்றோன்றி மறைதலிற்போதத்தை யுதிப்பென்றார் கரணங்கள்போதமிருந்தபோதிருந்தும் இறந்த போதிறந்தும் வருதலிற் போதத்தைவேர்க்குவமையாகக்கூறினார்.

(அ-கை) இங்ஙனங்கருவிகளும் போதமு மிறந்துநின்றடவி த்துவருமிலாபமென்னையெனின் கருவிகளும்போதமுமிறந்த சுத் தநிலையினின்றால் ஆனந்தலாபமுண் டென்றறிவித்தல். *

சுட்டுப்போதங்கழன்றசுத்தமனாமாத்திரையின்... ...*
மட்டுத்தானற்றநிட்டைவாய்க்குமாற்-கெட்டேன்......*
றலைச்செய்யுமானந்தஞ்சற்றேபால்வாரி..............*
முலைக்கண்ணிற்றோன்றுமுறை.......................*

(இ-ள்.) (சுட்டுப்போதங்கழன்றசுத்தமனாமாத்திரையின் மட் டுத்தானற்ற நிட்டைவாய்க்குமாற்கெட்டேன் றலைச்செய்யுமானந்த ஞ்சற்றே)எ-து, அரைக்கணப்போதாயினும் இதுவது வென்றுசு ட்டியறியுந் தற்போதமொழிந்த ஓர்வரம்பின் றியசுத்தமாகிய நிட் டைவாய்க்குமாயிற் கெட்டேனுண்டுப் பிரவேசிக்கும் பேரானந்த மற்பமோ(பால்வாரிமுலைக்கண்ணிற்றோன்றுமுறை) எ-து, முலை யினதுசிறியகட்டுவாரத்திற்பெரிய பாற்கடலுதயமான முறையை போற்பரிபூரணமாய்த்தோற்றுமென்றவாறு. *

ஈண்டுச்சுத்தமென்றது பரையோகம் இப்பரை யோகத்திலா ன்மபோதமிகவுந்தேய்ந்திருத்தலின் அதனைமுலைக்கண் ணென்றுமி ங்ஙனமிருந்தபோது அரைக்கணத்திலப் பரையோகநீங்கிப் பரிபூ ரணானந்தம் அனுபவமாய்த்தோற்றலின் அதனைப் பால்வாரியென் றுங்கூறினார்; (உம)

(அ-கை.) அருள்வடிவமாயென்றைக்கிருப்பேனென்றமாணா க்கனுக்கு அவ்வருட்பூரணமென்று முன்சுட்டுப்போதமற்று லதனை விடநீயொருமுதலன் றென்றுமறிவித்தவனதுதுயராமாற்றுதல் *

ஆகாயத்தேயலவுந்தோன்றியடங்காதோ...... ...*
நீகாயத்தோடழுந்தி நீங்கியருளாகாதோ...........*

வென்றுசலிப்பானேனெதிரற்றபூரணத்தே.............*
யொன்றுமிலேக்காணுனக்கு............................*

(இ-ள்.) (நீகாயத்தோடழுந்திநீங்கியருளாகாதோ வென்றுசலிப்பானேன்) எ-து, நீகாயத்தோடு பொருந்தி யிருப்பதாய்க்கருதி யிக்காயத்தைநீங்கி யெனக்கோர்காலந்திருவருள்வடிவமாகாதோவென்றுசலித்துத்துயருறுவானேன் (ஆகாயத்தேபலவுந்தோன்றி யடங்காதோவெதிரற்றபூரணத்தே யொன்றுமிலேக்காணுனக்கு) எ-து, ஆகாயத்தினிடமாய்ச்சரவசரதேகங்கள் பற்பலவுந்தோன்றிநின்றழியாதோஅதுபோலுன்போதமோர்பொருளேயும் எதிரிடாதற்றபோது உன்னைவிழுங்கிநின்றவருட்பூரணத்திலுனக்குஅத்தேகாதிப் பிரவஞ்சங்களொன்றுமிலேக்காணுமென்றவாறு. *

ப-ம், ஆகாயத்தினிடமாய்த்தோன்றியொடுங்குங்காயங்களவ்வாகாயத்திற்கனன்னியமானதுபோன் மூன்றேகாதி களேயானெனதென்றுபற்றிநின்றபோதந்திருவருளிலழிந்து பூரணமாய்ப்போகத்தேகாதிப்பிரவஞ்சங்களனன்னியமாய்த் தோற்றுமாகலின் ஆகாயத்தேபலவுந்தோன்றி யடங்காதோவென்றும்பொய்யாய்த் தோற்றலினொன்றுமிலேக்காணென்றுங்கூறினர். (உக)

(அ-கை.) அவனதுயோகப்பழக்கநீக்கற்பொருட்டுபழக்கவிலக்கணமெடுத்துக்கூறி அளவில்காலந் தற்போதத்தாற்றுவிதநாட்டத்திற்பழகிவருதலின் அப்போதமொழித்துச்சிவத்தோடிரண்டற்றிருத்தற் குபாயமியாதுகூறினும்பழக்கமிகுதியால்ஆன்மாக்களுக்குத்துவிதநாட்டமொழித்துநிற்பதுமிகவுமரிதென் றறிவித்தல். *

பழக்கங்கொடியதுபார்பாறையினுங்கோழி.........*
கிழிக்கும்பொலியைக்கிளறும்-விழித்துங்.......*
குருடர்க்கொளிபகையாய்க்கூசிக்கோல்போடா......8
ருளேப்பகுக்குமான்மா..................................*

(இ-ள்) (பழக்கங்கொடியதுபார்பாறையினுங்கோழி கிழிக்கும்பொலியைக்கிளறும்) எ-து. யாவர்க்கும் பன்னாட்டொன்றுதொட்டுவரும்பழக்கநீக்கக்கூடாமையின் மிகவுங்கொடியது அதனை நீபார்த்தறிதி அஃதெங்ஙனமெனின் பன்னாட்குப்பை சிய்த்தபழக்கத்தாற்கோழிகற்பாறையாயினுஞ்சீய்க்குநெற்பொலிமேல் விடுப்பினுஞ்சீய்க்குமஃதன்றி ( விழித்துங்குருடர்க்கொளிபகையாய்க் கூசிக்கோல்போடாரருளேப்பகுக்குமான்மா) எ-து, காசநோய்பட்டார்ந்த

குருடர்கண்ணோய்தீர்ந்து விழித்தபோதுங் கதிரொளியிருட்பகை போலவாய்க்கூசிமுன்பிடித்தகோல் கைவிடாரவர்போல் அருளைய டையாமுன் அதுவிதுவென்றுநானுவாய்ப்பகுத்த பழக்கத்தாலிப் போதுபகுத்தற்கிடமின்றி யெங்குந்தானுயிருந்த அவ்வருளையடை ந்து மான்மாவதனைப்பகுத்துநாடுமென்றவாறு. *

க-து. சீய்க்கக்கூடாதபாறையைச் சீய்த்தல்போற் பகுக்கக்கூ டாதவருளைப் பகுத்தலானுங் கிளறவேண்டுவதின்றிநின்றுதின்னுகூ பொலியைக்கிளறுதல்போல் பகுக்கவேண்டுவதின்றியிருந் தருளா னந்தத்தையனுபவியாது அவ்வருளைப் பகுத்தலானுங் காசமிகுந்த போதுகூசிப்பிடித்தகோலை அக்காசநீங்கிக் கதிரொளிகண்டு மிவ் வொளிமுன்றோன்றியவிருளாய்க் கூசிக்கைவிடார்போலுமுன்னரா ணவமறைப்பானது இதுவென்று பகுத்தபோதத்தை யிப்போது அவ்வாணவநீங்கியருளொளிகண்டு மிவ்வருளொளியை முன்னராண வவிருள்போற்பாவித்துவிடாராகலினும் இங்ஙன மூவமைகூறினர். தேகாதிப்பிரவஞ்சங்களை யெல்லாந் திருவருள்வடிவாய்க் காண்பத ன்றிஅவற்றைநானுவாய்ப் பகுப்பினும் இவ்வருளைப் பகுப்பதாகா தென்பதுங்காண்க. (உஉ)

(அ-கை.) இதுவுமது.

கட்டியநாண்விட்டாலுங்கந்தகலாக்கன்றுகளைத்... *
தட்டிப்புறப்படுத்துந்தன்மைபோ - லொட்டொழித்து
நின்றாற்போனீசிவமாய்நில்லென்றுநீக்கமறத்.... ....*
தொன்றாக்கிலொன்றிரண்டாகும்...... ...................... ...*

(இ-ள்.) (கட்டியநாண்விட்டாலுங் கந்தகலாக்கன்றுகளைத்தட் டிப்புறப்படுத்துந்தன்மைபோல்) எ-து, தறியோடுங் கட்டியதாம் பைத்தெறித்துவிடுப்பினு முற்கட்டியிருந்ததுபோற் கருதியத்தறி யைவிட்டுநீங்காதகன்றுகளைக் காத்தாற்றட்டியோட்டி வெளியிற்பு றப்படுத்துமுறைமைபோல் (ஒட்டொழித்து நின்றாற்போனீசிவ மாய்நில்லென்றுநீக்கமறத்தொன்றாக்கிலொன்றிரண்டாகும்) எ-து முற்பந்தமாயிருந்துள்ளமுப்பத்தாறுகருவிகளையும் விடுவித்துத்த ன்னையுந்திருவருளையுமறிவித் தவ்வருளோடுஞ் சேர்த்தி அவ்வருள சைவறநின்றாற்போல் நீயுன்போதமசைவற்றுச்சிவமயமாய் நில்லெ ன்றுகூறிச்சிவத்தைவிடத்தானொருமுதலென்றுகருதுந் துவிதபாவ னையையுமாற்றி அச்சிவத்தோ டொன்றாக்கினும் போதவொழிவா லதனோடொன்றானவான்மாப்போதவசைவாலிரண்டாகுமாகலின் இதனதுபோதமிருந்தவாறென்னையென்றவாறு. *

ப-ம். தும்புதெறித்துவிட்டபோதே தாயைச்சென்று கூடிப் பாலுண்ணுங்கன்றுபோ லொட்டொழித்த போதே தற்போதமொழிந்தருள்வழிச்சென்று சிவத்தையடைந்து பேரின்பத்தைப் பெறும்பக்குவர்போலாகாதுகட்டியநாண்விட்டாலுங் கந்தகலாது நின்ற கன்றுகளைக்கரத்தாற்றட்டி வெளியிற்புறப்படுத்தித் தாயோடுஞ்சேர்த்தி முலையைப்பிடித்துண்ணவிடிப்பினுமுண்ணாது மீளுங் கன்றுபோல் ஒட்டொழித்ததுமன்றி யருளோடுஞ்சேர்த்தித் துவிதபாவனையை மாற்றிச் சிவத்தோடொன்றாக்கினும் அச்சிவத்தோ டிரண்டற்றிருந்து ஆனந்தப்பேற்றையடையாது தற்போதவசைவா னிரண்டாகலான் இவர்க்கு இக்கன்றுகளையுவமைகூறினர். (௨௬)

(அ-கை.) இதுவுமது.

குரங்கைநினையாதிருவென்றுகூறத்.................... *

திரும்பியதுவேதியானம் - வருங்கதைபோ.......... ...*

னீசிவமாய்நில்லென்றுனீங்கியதுவாய்நினைந்து... ... *

மாய்வையதுவன்றே மலம்.............................*

(இ-ள்.) (குரங்கைநினையாதிருவென்றுகூறத்திரும்பியதுவேதியானம்வருங்கதைபோல்) எ-து, ஓர்புருடன்ஓர்பேதைக்குக்குரங்கினை நீநினையாதிருத்தியென்றுகூறஅவனங்ஙனங் கூறிய மாத்திரத்தின் மீண்டக்குரங்குத்தியானமேயிவனுக்கு மனத்திற்குடியாகி யிருந்ததென்றுலகத்திவ்வழங்குங்கதைபோல் (நீசிவமாய் நில்லென்றுனீங்கியதுவாய்நினைந்து மாய்வையதுவன்றேமலம்) எ-து, நீயொன்றையுமெதிரிடாது சிவமாய் நில்லென்று கூறினால் அங்ஙன மெதிரிடும் போதமொழிவதே அச்சிவமயமாய் நிற்பதென்றறியாது போதத்தாற்சிவத்தையெதிரிட்டுப்பார்த்து யா னச்சிவ மய மாயினே னுயினேனென்றுகருதி வருந்துவாயிங்ஙனங்கருதி வருந்தப் பண்ணுவதன்றேமலமாவதென்றவாறு. *

க-து, கூரியபுத்தியுடையோனுக்கு நீகுரங்கை நினையாதிருவென்றுகூறினால் அக்கணமே அந்நினைவை யொழித்திருப்பனதுபோலத்தீவிரதரபக்குவனுக்குநீசிவமாய்நில்லென்றால் அக்கணமே சிவமென்றுந்தானென்றுங்கருதுந்துவிதபோத மொழிந்து சிவமாய்நிற்பனென்றதற்கெதிர்மறையும்வருவித்துக்காண்க. (௨௭)

(அ-கை.) இதுவுமது.

மணிப்பாம்பிருளின்மறைந்திருக்கத்தேடுங்... ... *

கணக்காந்தற்போதத்தைக்காட்டி - யுணர்த்துகினு... *

நீரிற்கிணறு நிழலுயுத்தமும்போலா............ ......*
மாரித்தைநீக்கியிருப்பார்.............................*

(இ-ள்.) (மணிப்பாம்பிருளின்மறைந்திருக்கத்தேடுங் கணக்கா ந்தற்போதத்தைக்காட்டி யுணர்த்துகினும்) எ- து, சென்னியின்மீ துமணியுடையபாம்புதா னிருளிடத்து மறைந்திருப்ப விருளைத்தே டுமுறைமைபோலாகும் நீயுன் போதத்தை முன்னிட்டருளிடத்தும றைந்திருப்பவருளைத் தேடுமுறைமையென் றுன்போதஞ்சீவிப்ப தைக்காட்டி அருளையுமுன்னைவிட்டுநீங்காத பரிபூரணமென் றறிவி ப்பினுந்தெளிந்துகொள்ளாது (நீரிற்கிணறு நிழலுயுத்தமும்போ லாமாரித்தைநீக்கியிருப்பார்) எ - து, பிரளயமாய்க் கோத்து நின் றசுத்தசலத்திற்கிணறுதொட்டுநீர்தேடு மொருவனைப்போலுந்தனது நிழலையெதிராய்க்கருதி அதனோடுயுத்தஞ்செய்யு மொருவனைப்போ லும் பின்னருமுன்போதஞ்சீவியா நிற்குமாகலின் இப்போதத்தை நீக்கிச் சிவமாயிருப்பரியாவரொன்றவாறு. *

க-து. சென்னிமீது மணிச்சுடரையுடையபாம் பிருளைத்தேடு ந்தோறும் அவ்விருணீங்குவதன்றி நில்லாததுபோலத் தற்போத த்தைமுன்னிட்டு அருளைத்தேடுந்தோறும் இவ்வருணீங்குவ தன்றி நில்லாதெனபதும் அப்பாம்புசென்னிமணியைப்புனவழிக்கொண ர்ந்துவாய்க்குள்ளடக்கி னிருட்டேடவேண்டுவதின்று அதுபோன்மு ன்னிட்டபோதத்தைப்பின்னிட்டா லருட்டேடவேண்டுவ தின்றெனப தும் அவ்விருணிறைந்தாற்போல் இவ்வரு ணிறைந் திருப்பதென் பதும் நீர்வெள்ளமாயிருக்கவும் அந்நீரிற்கிணறுதொட்டு நீர்சம்பா திக்கத்துடங்கினோனைப்போல் அருளெங்கும்பிறிவற்றபூரணமாயிரு க்கவு மவ்வருளுட்டேடி அருளைச்சம்பாதிக்கத்துடங்கினோ னென்ப துத் தன்தேகவசைவா னிழலசைவதென்றறியாததற் கோரசைவுவே றுளதென்றுகருதி அதனோடு யுத்தஞ்செய்வானைப்போற் றன்போத வசைவாற் கருவிகளசைவதென்றறியாததற்கோரசைவு வேறுளதெ ன்றுகருதி அவற்றையடக்கத்துடங்கினோனென்பது மிவ் வுவமைக் குறிப்புகளாற்காண்க. *

பதசாரம். இங்ஙன மெழும்போத மொழிப்பா ரரியராக லினாரித்தைநீக்கியிருப்பாரொன்றூர். மணிப்பாம்பிருளை யென்பது தற்போதத்தைமுன்னிட்டு அருளைநாடுதற்குவமை, நீரிற்கிணறென் பது அருளையேகதேசமாக நாடுதற்குவமை, நிழலுயுத்தமென்பது தன்னையருளுக்கூணுக்கொடுத்துநிற்கவே கருவிகளொழியுமென்றறி யாது தற்போதத்தாலவற்றை யடக்கத்துடங்குவதற் குவமையெனக் க்கொள்க. (உரு)

(அ-கை.) ஆயினிப்பழக்க நீக்குமா றெங்ஙனமெனின் நீயிந் நாட்பழகிய யோகப்பழக்கத்தைவிட்டு ஞானயோகத்திற் பழகுதி யெனிற்சிவத்தைப்பெறலாமென் றறிவித்தல். ✻

உட்புறம்பாம்பூசனையுமியோகசமாதிகளுஞ் .. ...✻
சுட்டறிவுகெட்டவர்போற்றூங்குவதும் - விட்டுப்......✻
பகல்விளக்குமுச்சிப்படிகமும்போற்பாச....... ......✻
மகலநிற்பார்க்கார்சரியொப்பார்......... .........✻

(இ-ள்.) (உட்புறம்பாம்பூசனையுமியோகசமாதிகளுஞ்சுட்டறிவு கெட்டவர்போற்றூங்குவதும்விட்டு) எ - து, அந்தர்யாகம் வெகுர் யாகமாய்ச்செய்யும்பூசனைகளும் ஆறாதார பாவனா யோக சமாதிகூடுதலும் இதுவதுவென்றுசுட்டியறியுந் தற்போதங்கெட்டுப் பரமானந்தநித்திரைபண்ணு மெய்ஞ்ஞானிகளைப்போன் மனத்தாற் பிராணவாயுவையுண்மறித்துப் பிரமரந்திரத்திலதனுண் மறைந்து தூங்குவதுமாகிய இவற்றையெல்லாம்பொய்யென்றுவிட்டுநீங்கி (பகல்விளக்குமுச்சிப் படிகமும்போற்பாசமகலநிற்பார்க்கார் சரியொப்பார்) எ-து, பகற்காலத்தேற்றியதீபம்போலும் உச்சிக்காலத்துப்படிகம்போலும் கருவிகண் மூப்பத்தாறு மகன்றுபோகத் திருவருளிலசைவறநிற்போர்க்கிணையொப்பாரியாவரொன்றவாறு. ✻

ப-ம் இருளிற்றோன்றியதுபோலன்றிச்சூரியப் பிரகாசத்தான் முதல்கெடாதொளிகெட்டபகல்விளக்குப்போன் முன்னர் ஆணவாந்தகாரத்திற்றோன்றியதுபோலன்றி அருட்பிரகாசத்தான் முதல்கெடாதுபோதங்கெட்டுநிற்றலிற் பகல்விளக்குப் போலென்றும், பொழுதேறுகாலஞ் சாயங்காலத்தன்றி யுச்சிக்காலத்திற் பஞ்ச வன்னங்களையுங் கவராதபடிகம்போலச் சகலகேவலத்தன்றிச் சுத்தமாகியவருணோ கருவிகளொன்றோடுந்தாக்கற்று நிற்றலி னுச்சிப்படிகம்போலென்றும் பாசமகல நிற்பாரென்றுங் கூறினர். பகல்விளக்கென்றது தற்போதஞ் சிவியா தருளினிற்றற்குவமையும் உச்சிப்படிகம் போலென்றது கருவிகளொன்றோடுந் தாக்கற்றுநிற்றற் குவமையுமாகக்கொள்க. (உகூ)

(அ- கை.) (ஆயினொன்றையுங் கருதாது சும்மாநிற்பிற் சிவத்தையடைவதெங்ஙனமெனின்சுட்டற்றிருந்தாலன்றிச் சிவத்தைப் பெறக்கூடாதென்பதுமங்ஙனநிற்பிற் சிவந்தானே விழுங்கிக் கொள்ளுமென்பதுமறிவித்தல். ✻

இருட்கேவலத்தின்றெழுப்பியெதிரிட்ட..............*
மருட்கேவலசகலமாற்றி-திரிசுடர்போற்...... ... ...*
றன்னறிவுதின்னிக்குத்தாலுணவாய்ப்போவதலா... ...*
லுன்னுதலேயோட்டுதல்காணும்.....................*

(இ-ள்.) (இருட்கேவலத்தின்றெழுப்பியெதிரிட்டமருட்கேவல சகலமாற்றி) எ-து, கருவிகண்முப்பத்தாறுமிறந்து ஆன்மபோத முமிறந்து அந்தகாரமாயிருந்த கேவலத்தினின்றுமிப்போதுதனத ருட்சத்தியாற் கருவிகளைக்கூட்டப்பண்ணித் தற்போதத்தை யெழுப் பிச்சுருதிகுருவாகிய படர்க்கை முன்னிலையாய்நின்று ஞானசமாதி கூடப்பண்ணியத்தற்போதத்திற் கெதிரிட்டமருளாகிய கேவலசகல ங்களைப் பூரணமாகியதன்மையாய்நின்றுமாற்றி ( திரிசுடர்போற் றன்னறிவுதின்னிக்குத்தாலுணவாய்ப்போவதலா லுன்னுதலேயோ ட்டுதல்காணும்) எ-து, விளக்குத்திரிமேலேறியசுடர் சிறுகச்சிறுக த்தின்றுவந்து முடிவில் அத்திரிமுழுதையும்விழுங்குதல்போலத்த ன்னையருளாலறிவித்தபோது தானிவ்வருள்வழிவரவரச்சிறுகச்சிறு கத்தின்று முடிவிற்றனது போதமெல்லாம் விழுங்கித் தானுயிருக் குஞ்சிவத்திற்குத்தான் புசிப்பாய்ப்போவதன்றித் தான்வேறொரு முதலாய்நின்று அச்சிவத்தை யெதிரிட்டுநாடுதலே அதனைநீக்குத லென்றவாறு. *

ப-ம். கருவிகளும்போதமுமிறந்து கேவலவிருளிற் கிடந்த நீகிஞ்சிஞ்ஞனாகலின் அவ்விருளை நீக்கிக் கருவிகளைக்கூடமாட்டாய்க ருவிகள்சடமாகலி னுன்னையவைவந்துகூடி யெழுப்பமாட்டாவா கலிற்சுதந்தரமாயுள்ள அருட்சத்தி அக்கருவிகளைக்கூட்டி யுன்னை யெழுப்ப அக்கருவிகளோடுங்கூடிநீசாக்கிரத்தனுவையாகலின் இங் ஙன முனக்குப்பெத்தத்திலசையிற் சுதந்தரமின்மைபோன் முத்தித் திசையினுமின்றாகலினீயுன் போதத்தாலொன்றையுமெதிரிடாதசை வறநிற்றியெனின் அச்சிவந்தானேயுன்னைவிழுங்கிக்கொண்டு நிற்கு மென்றறிவிக்கவேண்டி யிருட்கேவலத்தின்றெழுப்பியென்றுந்தன் னறிவுதின்னியென்றுங்கூறினார். இன்றெழுப்பியென்றதனால் அனு தியிலெழுப்பியதுமிவ்வாறெனக்கொள்க. (உஎ)

(அ-கை.) ஆயினீரிங்ஙனங்கூறியவாற்றான்வேதாந்தி நிலையே நன்றென்ற மாணாக்கனைநோக்கி வேதாந்தியிங்ஙனநிற்றலின் அவர் க்குப்பிறப்புநீங்காதென்பதும் பிறப்புநீங்குமிட மிவ்விடமென்ப துமறிவித்தல். *

அறிந்ததெல்லாம்பொய்யென்றவத்துவிதியார்க்கும்
வெறும்பாழிலூன்றல்விடாது-பிறந்திறப்பை.........*
யானுனொழிவுமானந்தமாமுதிப்பும்........... *
போனாற்காணுன்பிறப்பும்போம்.........................*

(இ-ள்.) (அறிந்ததெல்லாம் பொய்யென்றவத்துவிதியார்க்கும் வெறும்பாழிலூன்றல் விடாதுபிறந்திறப்பை யானுல்) எ-து, தம்மா லெதிரிட்டறிந்ததெல்லாங் கண்ணினாலறிந்தகாட்சியெல்லாங் கண்ணாதவாறுபோலியாமல்லோமிவை மித்தையாரூப மென்றவற்றைநீக்கிநின்ற வேதாந்தியாருக்கு மங்ஙனமெதிரீடாய்த் தோன்றுவனயாவுமின்றிச் சர்வசூனியமாயிருந்த பிரம்மநானென்றச்சூனியபத்திற்றற்போதமூன்றி நிற்றலவர்க்கும் விடாதாகலினு னீயவரீபோனிற்றியாயினுஞ்செனனமரணப்படுவை யிங்ஙன நிற்பினும் உற்பத்திநாசமுளவென்றீரினி யுற்பத்திநாசமின்றாய முத்தியாதெனின் (உனதொழிவுமானந்தமாமுதிப்பும் போனாற்காணுன் பிறப்பும்போம்) எ-து;உனதுபோதவொழிவாகியபரையோகமும் இப்பரையோகத்தின்மேலிடுமானந்தோதயமும் போனால் அப்போதுன்பிறப்புப்போங்காணென்றவாறு. *

ப-ம்., பரையோகமும் ஆனந்தப்பேறும் ஆன்மாவிற் கனுபவமாய்த்தோற்றலானும் அவ்விடங்களிலான்மாவிற்குச் சிவத்தோடத்துவிதமின்றாகலினும் போனாற்காணுன்பிறப்பும் போமென்றார் அவைபோனவிடஞ்சுகாதீதம். (உஅ)

(அ - டை.) யோகியினதுகருத்தையெடுத்துக்காட்டி இங்ஙனம்ஞானபக்குவன்செய்வதுபாவமென்றறிவித்தல். *

அறிவுக்கறிவாயகண்டமாய்நின்ற.........*
நிறைவைக்குறையறநினைந்து-மறவையுமாய்த்... ...*
தாமேசிவத்தைப்படைத்தழிப்பார்தற்றூடம்... ...*
போமாறிலைப்பிறப்பேன்போம்......... .........*

(இ-ள்,) (அறிவுக்கறிவாயகண்டமாய்நின்றநிறைவைக்குறையறநினைந்துமறவையுமாப்) எ-து, உயிருக் குயிராய்நின் றறிவிக்குமறிவாய்க் கண்டிதமெல்லாங்கடந்த தாய்க்குறைவின்றி ஒரியல்பிற்றாயெக்காலமும் விளங்கநின்ற பரிபூரணசிவத்தை யேகதேசவடிவாய்த்தற்போதத்தாற் றியானித்து அங்ஙனந்தியானித்தவடிவை மறந்துபோந்தன்மையுடையருமாகி (தாமேசிவத்தைப்படைத்தழிப்பார்தற்றூடம் போமாறிலைப்பிறப்பேன்போம்) எ-து, தம்மைப்படைத்தழிக்குஞ்சிவத்தைத் தாமேபடைத்தழிப்பாராகலி னிவரிங்ங

ஞ்செய்தலான்வருந்தமதுபாவமே நீங்குமாறிலையெனிற்பிறப்பெ ன்னை நீங்குமென்றவாறு. *

ப-ம். தியானித்தபோது வடிவுதோன்றியும் விடுத்தபோத வ்வடிவு நீங்கியும்வருதலிற் படைத்தழிப்பதொன்றுஞ் சிவத்தைப் படைத்தழிப்பதுதோடமாகலிற் றோடமென்றுங்கூறினர். (௨௰)

(அ-கை.) தமதாசிரியர்தீக்கையினாற் றம்மைத் திருவடிக்கண் ணயிக்கமாக்கிய முறைமையறிவித்து நீயும்ஞானதீக்கைபண்ணிக் கொள்ளுதியென்றறிவித்தல். *

மறப்புநினைப்புமயக்கும்விகற்பும்............. ......*
வெறுப்பும்விருப்பும்விடாமல்-விறைப்பேனைப்..... *
பானுவும்வேதியும்போற்பார்த்தும்பரிசித்து... ... *
ஞானபந்தன்றானாக்கினான்.......................*

(இ-ள்.) (மறப்புநினைப்புமயக்கும்விகற்பும் வெறுப்பும் விரு ப்பும்விடாமல் விறைப்பேனை) எ-து, மறப்பு நினைப்புமாயுள்ள கேவலமுஞ் சகலமுமாறிமாறிவரலாற்றேகாதிப் பிரபஞ்சங்கண்மே ல்வெறுப்பும்விருப்பும் சனனங்கடோறும்விட்டு நீங்காமற்றுன்ப த்தையனுபவிக்கச்செய்தேயும் அதனையாணவத்தானின்பமெனக் கரு தியிறுமாந்துகொண்டிருப்பேனை (பானுவும் வேதியும் போர்பார் த்தும்பரிசித்து ஞானபந்தன்றானாக்கினான்) எ-து, பூதவிருளை நீக்கும்பானுவையுந் தன்னைச்சேர்ந்தசெம்பைப்பொன்னாக்கும்ப ரிசனவேதியையும்போன்று தமது ஞானப்பிரகாச நோக்கத்தாற் பார்த்துங் கரசரணங்களாற்பரிசித்தும் மும்மலங்களையு நீக்கித்திரு வருளாலெடுத்துத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமதுதிருவடி யிலொன்றாக்கினாரென்றவாறு. *

ப-ம். தானல்லாத தேகத்தையானென்றுந் தனதல்லாதபோ கத்தையெனதென்றுங் கருதப்பண்ணுவதுமயக்கம் அத்தேகபோ கங்களில்வெறுப்பும் விருப்பும்வரச்செய்வது விகற்பமாகலினவற் றைத் தொடர்ந்துநின்றிருவினைகளும் இவ்விருவினைகளாற்பிறப்பி றப்பும்விடாதுவரலான்மயக்கும்விகற்பும் வெறுப்பும்விருப்பும்வி டாமலென் றிம்முறைவைத்துக்கூறினார். ஞானதீக்கைபண்ணும் போது கிருபாநோக்கம்வைத்துத்திருவடி சூட்டவேண்டுமாகலிற் பார்த்தும்பரிசித்துமென்றார், அங்ஙனம்பண்ணுந் தீக்கையிற்பாவ னையுமிருத்தலினது கூறாராயினார் அப்பாவனையாற்றமதோடயிக் கம்பண்ணிக்கோடலிற்றானாக்கினனெனன்றார். (௩௰)

யோகக்கழற்சி-முற்றும்.

ஆ அதிகாரம்-௩-க்கு-திருவெண்பா-௱௨௰.





திருச்சிற்றம்பலம்.

## நான்காவது

# கிரியைக்கழற்றி.



(அ-கை.) கிரியையாளரைப்பார்த்து ஞானிகணடையைமெடு த்துக்காட்டி இவரைப் போல்நீருஞ்செய்யாமதன் செய்கின்றீரொ ன்றிகழ்ந்துகூறுதல். ✻

தத்துவத்தையெல்லாஞ்சடமென்றுதாக்கற்றுச்...... ✻
செத்தசத்தின்கண்போற்றிரியாது-வைத்தெடுத்தும்... ✻
பூரணமேயென்றழைத்துந்தேடிப்புரண்டழுதுங்... ✻
கோரணிகாட்டும்பேய்க்குவால்.................. ......... ✻

(இ-ள்.) (தத்துவத்தையெல்லாஞ்சடமென்றுதாக்கற்றுச்செத் தசத்தின்கண்போற்றிரியாது) எ-து, தத்துவங்களையெல்லாம் இது விதுவென்று தன்னாலறியப்படலானுந் தன்னையவைக ளறியாமை யானும் அவற்றைச் சடமென்றறிந்தவைகளொன்றோடுந்தாக்கற்று ச்செத்தாட்டுக்கண்போற் சுட்டறிவுகெட்டுச்சும்மாதிரியாமல் (வை த்தெடுத்தும் பூரணமேயென்றழைத்துந் தேடிப்புரண் டழுதுங் கோரணிகாட்டும் பேய்க்குவால்) எ-து, தற்போதநாசத்திருந்தபூர ணசிவத்தைஅப்போதத்தால் ஒர்வடிவிலாவாகனம்பண்ணி அதனைமீ ட்டுத்தியானம் பண்ணி இங்ஙனம் பூசனைபுரிந்து மவ்வடிவைப் பரி பூரணசொருபமேயென்றோலமிட்டழைத்து மச்சிவமெங்கணுமில் லைமகால்5லங்களிலுண்டென்றுகருதி அத்தலங்களிற்றேடிச்சென்றுநி லத்தில்வீழ்ந்துபுரண்டழுது மிங்ஙனங்கிரியையாளரொன்னும்பேய்க் கூட்டங்கள்கோரணிக்கூத்தாடிக்காட்டுமென்றவாறு. ✻

ப-ம். செத்தசத்தின்கண்ணுயிரசத்தின்கண்போலிருப்பினும் இதனதுசுட்டறிவதந்கின்மைபோன் மெய்ஞ்ஞானிகள் பிரவஞ்சி

ன்போலிருப்பினும் இவரதுசுட்டறிவவர்க்கின்றி யிருப்பாவர்போ னீருமிராமெதன்னைசெய்கின்றீரொன் றவரதுநடையையிவர்க் கறிவிக் கவேண்டி அந்நடையின்றிய இவனைப்பார்த்துச் செத்தசத்தின்க ண்போற்றிரியாதேயென்றார். சுட்டறிவுகெட்டு நிற்பதருள்சுட்டச் செய்வதுமருளாகலின் இவனைப்பேய்க்கூட்டமென்றும் இவர்தொ ழிலைக்கோரணிக்கூத்தென்றும் இவர்க்கான்மலாபமின்மையாற் பிற ர்க்குக்காட்டுமென்றுங்கூறினார். (௧)

(அ - கை.) ஞானபக்குவனுக்குமுன்னிருந்த சரிதாதிவாதனை களையெல்லாம்போக்கித் தற்போதம்பதையாது மவுனமாயிருக்கு ம்படிபோதிப்பவனே ஞானகுருவென்றும் போதஞ் சிறிதேனும் பதைப்பக்கூறுமவன்குருவலனென்றுமறிவித்தல். *

கிரியைக்கிளைத்துவந்துகேட்டவர்க்குச்சும்மா... ...*
திரியச்சுகம்விளைத்தசீமான் - குருவன்றிச்......... ...*
சற்றேபதைப்பைத்தரினுஞ்சகம்படைக்கக்... ... ...*
கற்றானுங்காலனுமாங்காண்......... .... ...........*

(இ-ள்.) (கிரியைக்கிளைத்துவந்துகேட்டவர்க்குச்சும்மா திரிய ச்சுகம்விளைத்தசீமான்குருவன்றி) எ-து, மனத்தாற்பாவிக்குந்தொ ழிலும் வாக்காற்றோத்திரம் பண்ணுந்தொழிலுங் காயத்தாலருச்ச னையாதிசெய்யுந்தொழிலுமாகிய இக்கிரியைகளான்மிகவு மெலிந்தி வற்றைவெறுத்து ஞானத்தைவிரும்பிவந்தடைந்துகேட்ட அதிபக் குவர்க்கம்மனவாக்குக்காயங்களசைதற்கேதுவாய தற்போத வசை வையொழித்து அருள்வடிவாக்கி யெனக்கின்னதுவேண்டுமென்ப தொன்றுமின்றிச் சும்மாசஞ்சரிக்கவைத்துப் பேரின்பத்தை யுண் டாக்கியஇவ்வானந்தச்செல்வனேஞானகுருவன்றிச் (சற்றே பதைப் பைத்தரினுஞ் சகம்படைக்கக் கற்றானுங்காலனுமாங்காண்) எ- று, அப்பக்குவர்க்கோரணுவளவேனுந் தற்போதமசைதற்கேதுவாயவு பதேசங்களைக்கொடுப்பினும் அக்குருசகத்தைப்படைத்தற்குக் கற் றுள்ளபிர்மனுமிவனாற் படைத்துள்ளசகத்திலுண்டாகிய வுடல்களை யழிக்குங்காலனுமாவனன்றிஞானகுருவலனென்றறிதி யென்றவாறு

ப-ம். போதம்பதைத்தற்கேதுவாகிய வுபதேசங்களைக் கூற லிற்சகலகேவலங்கணீங்காவினைவநீங்காமையாற் பிறப்பிறப்புண்டா மாகலிற் கற்றானுங்காலனுமாங்காணென்றார். சீவன்முத்தனும் நில த்திற்சரித்தலிற்றிரியவென்றார். (௨)

(அ-கை.) மலரகிதமாயானந்தவடிவாயிருந்த சிவத்திற்கு மா யாகாரியமாகிய நீராதியுபசாரங்களாற் சுத்தமுஞ் சுகமுமுண்டாகா தென்பதும் அதனைப்போதத்தாலளவிட்டறியக் கூடாதென்பதும நிவித்தல். *

அக்கினிதேவற்கசீர்த்தியென்றுசுக்களாத்து... ...*
வைக்கோலான்மூடிமலையடுப்பிற் - றுக்கியாய்... ...*
நீராக்கழுவிநிழலைப்புதைத்தளப்பா...... ... ......*
ராரைப்போல்வாரொன்னலாம்............... ......*

(இ-ள்.) (அக்கினிதேவற்கசீர்த்தியென்றுசுக்களாத்துவைக்கோ லான்மூடிமலையடுப்பிற்றுக்கியாய்) எ-து, அக்கினிதேவனுக்கசீரண ம்பிறந்ததென்றுகருதி அதுபோவதற்குச் சுக்களாத்துக் கொடுத் துச்சீதளம்பிறந்ததென் றவனைவைக்கோலான்மூடி அவர்க்கு மு ன்னரே யிங்ஙனஞ்செய்யாதிருந்தோமென்று மலைவந்து தம்மேல டுத்ததுபோலுந் துக்கத்தையுடையவராகி (நீராக்கழுவி நிழலைப்பு தைத்தளப்பா ராரைப்போல்வாரொன்னலாம்) எ-து, நீரைநீராற்க ழுவித் தமதுநிழலைமண்ணுட்புதைத் தந்நிழலைத் தம்மடியாலளந் திவ்வளவென்றளவிடுவாரை யாவரைப்போல்வாரென்று கூறலாமெ ன்றவாறு. *

ப-ம். எவரெவர்புசித்தபுசிப்புகளையெல்லாம் அவரவர் வயிற் றாடிருந்து சீரணிக்கப்பண்ணு மக்கினிதேவற் கசீரணம்பிறந்த தென்றுபசரிக்குமுறைமைபோல் உயிர்கட்கெல்லாம் உயிராயிருந் தாட்டியுறக்கி யுபகரிக்குஞ்சச்சிதானந்தரூபமாயுள்ள சிவத்திற்கோ ர்குறையுள்ளதும்பாற்கருதி அட்டவிதார்ச்சனை சோடசவுபசாரங்க ளைச்செய்தலா லக்கினிதேவற்கசீர்த்தியென்று சுக்களாத்து வைக் கோலான்மூடியென்று,மின்றைக் கிந்நாழிகையளவும் பூசைநைவே த்தியவுபசாரங்களைச்செய்திலமென்று மனத்திற் றுயருறலாற்றுக்கி யாயென்றும்,அசுத்தத்தையெல்லாஞ்சுத்தமாக்குநீராக் கழுவிச்சுத் தமாக்கத்துடங்குவனபோன்று தன்னைச்சேர்ந்த வுயிர்களினது மு ம்மலங்களையுந்துடைத்து நிர்மலமாக்குஞ் சிவத்தைநீராட்டி நின் மலமாக்கத் துடங்கினராகலின் நீராக்கழுவியென்றும், புதைத்த ற்கசப்படாதநிழலைப் புதைக்கத்துடங்கினர்போ லொன்றிற்கு மக ப்படாதபொருளைத் தற்போதத்தா லகப்பட்டதுபோற்பாவித் தா வாகனம்பண்ணலி னிழலைப்புதைத்தென்றுந் தனதுநிழலையளந்து

செல்லுந்தோறும் அந்நிழற்கடந்துகடந்து சேறல்போல் இங்ஙன மிருக்குமென்று சிவத்தைத்தியானிக்குந்தோறும் அத்தியானங்கட் கப்பாலப்பாற்சேறலி னளப்பாரின்றுங்கூறினார். சிவத்தினதுண் மையைக்கேட்டிருந்தும் இங்ஙனஞ் செய்தலானுமைப்போல் வாரொ ன்னலாமென்றார். (௫)

(அ-கை.) கிரியாகுருவுபதேசத்தால் ஆன்மலாப மின்றென்ற றிவித்தல். *

நீர்க்கும்வழிக்குந்துயரில்லைநீந்திநடந்...... ... ...*
தார்க்குத்துயமொன்றறிவறியா - மூர்க்கருனை...... ...*
யாற்றுக்குவாய்கட்டியம்பரத்துக்கேணியிட்டுக்.... ...*
காற்றுக்குக்கால்பிடித்தல்காண்........................*

(இ-ள்.) (நீர்க்கும்வழிக்குந்துயரில்லைநீந்திநடந்தார்க்குத்துய மொன்றறிவறியாமூர்க்கருனை) எ - து, வெள்ளமாய்நிறைந்துள்ளநீரி ற்கும் ஒரூர்க்குச்செல்லும்வழிக்குந் துன்பேதுமில்லை அவ்வெள்ள த்தைநீந்திச்செல்வோர்க்கும் அவ்வழி நடந்து செல்வோர்க்குந் து ன்பமென்றறிவதுபோலப்பூரணமாய்மவுனமாய் ஆனந்தமாயிருந் தசிவத்துக்கோர்துன்புமின்றுஅதற்கோர்துன்பமுளதுபோற்கருதி ப்பூசைநைவேத்திய வுபசாரங்களைச் செய்யத் துடங்கு மெமக்கே துன்பமென்றறிந்து இங்ஙனஞ் செய்யும் பூசனையாதிகளை விட்டு நீங்கி அச்சிவத்தையறிவித்தற்கேதுவாய ஞானசாரியனை யடைந்து திருவருள்ஞானத்தையறியாத கிரியாகுருவாகிய துர்ச்சனர்பிறர்க் குபதேசம்போற்கூறுமுறை (யாற்றுக்குவாய்கட்டி யம்பரத்துக்கே ணியிட்டுக் காற்றுக்குக்கால் பிடித்தல்காண்) எ - து, பிரளய மாய்ச்செல்லுமாற்றுக்குவாய்கட்டி அதனையடக்கச்சொல்லுதல் போலு ம் ஆகாயத்தின்கண்ணேணிநாட்டியிதன்மேலேறியதனைப் பிடிக்கச் சொல்லுதல்போலும் காற்றுக்குக்கால்பிடித்தன் முதலியவுபசாரங்க ளைச்செய்யச்சொல்வதுபோலுமாங்காணென்றவாறு. *

ப-ம். மலைக்கணின்று கடலளவு மூடுருவிக் கோத்துநின்ற வாற்றுக்குவாய்கட்டி யடக்கச்சொன்னதுபோற் பிருதிவி முதன்மு ப்பத்தாறுகருவிகளையுமூடுருவிப் பேரானந்தக்கடலாய்நிறைந்திரு ந்தசிவத்தை ஒர் வடிவிலா வாகனம் பண்ணச்சொல்வதனை லாற்றுக் குவாய்கட்டியென்று, மேணிநிற்றற்கு மதன்மே லேறிச் செல்வோ னுக்குமிடங்கொடுத்துநின்றஆகாயத்தை யவ்வேணிமே லேறிப்

பிடிக்கச்சொன்னதுபோல் அந்தர்யாக பூசைக்குத் தான் சொல்லுந்தானத்திற்கும் அத்தானத்திருந்து பூசனைசெய்வோனுக்கும்உட்பறம்பாய்நிறைந்துள்ளசிவத்தைத யிங்ஙனமிருப்பதென் றறியாதப் பூசனைபாலறி யென்றுசொல்வதனால் அம்பரத்துக் கேணி யிட்டென்றும், அருவமாயிருந்தகாற்றிற்குக்காலேயின்றி யிங்ஙன மிருப்பவும் அதற்குக்கால்பிடித்தன்முதலிய வுபசாரங்களைச் செய்யச்சொல்வதுபோல் அருவமுருவம்ரூபாரூபங்களையெல்லாங் கடந்துநின்றசிவத்திற்குவடிவேயில்லை. இஃதிங்ஙனமிருப்பவும்இதற்குச்சோடசாதியுபசாரங்களைச்செய்யச்சொல்வதனாற் காற்றிற்குக்கால்பிடித்த தென்றுங்கூறினார். உபசாரஞ்செய்தலையிருவகைப் பூசைக்கும்பொதுவாகக்கொள்க. (௪)

(அ-கை.) ஆயின்ஞானிக்குக்கிரியைசெய்ய வேண்டாவோ வெனின்ஞானிக்குக்கிரியைசெய்யவேண்டுவதின்றென்றறிவித்தல், *

ஆகாயம்போவார்க்குமாவிகையோவாழ்கடலோ. *
மீகாமன்போற்றிரியவேண்டுமோ - யோகிக்குங். . . . . .*
கன்மமோபூரணன்காண்காலமுமாகாயமும்போ. . . *
யென்னதொழிலையியற்றும். . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .*

(இ-ள்-) (ஆகாயம்போவார்க்குமாவிகையோவாழ்கடலோ மீகாமன்போற்றிரியவேண்டுமோ) எ-து; ஆகாசகெமனம்பண்ணுவோர்க்கு மோர்பற்றுக்கோடோ வவ்வாகாயமாழ்கடலோ இவ்வாழ்கடலிற்செல்லுமீகாமனைப்போற் பற்றுக்கோடு பற்றியோர்துறைசார்தற்பொருட்டுத்திசைநாடி யிங்ஙனஞ் சுழலவவர்க்குவேண்டுமோவதுபோல் (யோகிக்குங்கன்மமோ பூரணன்காண் காலமுமாகாயமும்போ யென்னதொழிலையியற்றும்) எ-து, சிவயோகியானந்த பூரணனாகையிற் றேகந்தானுயிருந்துள்ளகிரியையாளனைப்போ லவனுக்குங்கிரியைசெய்யவேண்டுமோ அஃதன்றிக் காலமுமாகாயமுந் தாமிருந்தபடியிருப்பத் தமதிடத்திற் பிறபொருள்கடொழிற்படுவனவன்றித் தாம்போய்ச்சென் றியாது தொழிலைச்செய்யு மதுபோற்பூரணனாகிய அச்சிவயோகிசந்நிதானத்திற் கருவிக டொழிற்படுவனவன்றித் தானொரு கருவிக ளோடுங் கூடித் தொழிற்செய்யா னென்றவாறு. *

ப-ம். ஆகாசகெமனம்பண்ணுவோன் தானினைத்த தானத்திலவாயுவினாற்சென்றிருத்தல்போல் சிவயோகிதான்கருதியவீட்டை

மருளாலடைந்திருத்தலின் ஆகாயம்போவார்க்கு மாவிகைபோவெ ன்றும், ஆழ்கடலிற்செல்லுமீகாமனுக்குக்கப்பலாகியபற்றுக்கோடு பற்றியோர்துறைசார்தற்பொருட்டுத் திசைநாடிச்செல்லவேண்டுமது போலக்கிரியாவானுக் கோர்வடிவைச் சிவமாய் பாவித்தோர்பத வியையடைதற்பொருட்டு அதற்குவிதிமார்க்கமா யருச்சனையாதிக ளைச்செய்யவேண்டுவதுபோல் அவர்க்குச்செய்யவேண்டுவதின்றாக லின்மீகாமன்போற்றிரியவேண்டுமோவென்றுங் கூறினர். சிவமயா கிதானறிவாயுமானந்தஞ் சிவமாயுங்கண்டறிவாகிய தானானந்தமாகி யசிவத்திற்கலந்திருப்பன்கிரியாவான் தான்றேகமாகியும் சிவஞ்சிலை யாதிகளாற் செய்யுமோர்வடிவாயுங்கண்டு அதனைத்திரிகரணங்களா ல்வழிபட்டு இனிமேலோர்பதவியையடையக்கருதி யிருப்பனாகலி னிவரிருவர்க்குமிங்ஙனமுவமைகூறினர். (௫)

(அ-கை.) இதுவுமது.

நெருப்பில்விறகுதியாநெய்யிற்பாறோன்று......*
வருக்கனிருளையடர்த்தாற்போன்-மருட்கெடுத்த......*
ஞானத்தின்பேர்கிரியைநாசமெனின்ஞானிகளு... ...*
மூனத்தொழிலுழைப்பாரோ...................... ......*

(இ-ள்.)(நெருப்பில்விறகுதியாநெய்யிற்பாறோன்று வருக்கனி ருளையடர்த்தாற்போன் மருட்கெடுத்த ஞானத்தின்பேர்கிரியைநா சமெனின்) எ-து, நெருப்பின்கண்விறகுதோன்றாதுபோலும் நெ ய்யிற்பால்தோன்றாததுபோலு மாதித்தன் பூதவிருளையழித்தெழு ந்தாற்போன்மும்மலமாகியவிருளையழித்தெழுந்த ஞானமவற்றின தகாரியமாகிய கிரியையு மழிக்குமாகலின் இந்த ஞானத்தின்பே ர்கிரியாநாசமென்று வேதாகமங்கள்கூறுமெனின் (ஞானிகளுமூன த்தொழிலுழைப்பாரோ) எ-து, இந்த ஞானத்தைப்பெற்றிதுவே வடிவாயிருந்துள்ளமெய்ஞ்ஞானிகளுங் குற்றம்பொருந்தியகிரியை த்தொழிலைச்செய்வாரோசெய்யாரென்றவாறு. *

ப-ம். விறகையழித்தெழுந்த நெருப்பில்விறகும் பாலையழித் தெழுந்தநெய்யிற்பாலுந் தோன்றாததுபோற் கிரியையையழித்தெ ழுந்தஞானத்திற்கிரியைதோன்றாதாகலி னிங்ஙன முவமைகூறினர். கிரியை பிறவித்துன்பத்துக்கேதுவாகலானு மதனானுன்மலரூபமா கியவானந்தமின்மையானு மூனத்தொழிலென்று முழைப்பாரோ வென்றுங்கூறினர். (௬)

(அ-கை.) கிரியையனுட்டிக்குங்காலத் தெய்வகதியாய் ஞானநிலைதானிற்றாயினும் அக்கிரியைமேலிட்டாலந்தஞான நிலைபெற்று நில்லாதுமறையுமென்றறிவித்தல். *

கிரியையான்ஞானங்கிடைத்தாலுங்கேடு...... ......*

கருவால்வருவதுபோற்காணு-மொருகோடி... ......*
சூரியரைக்கூரிருளாலேசுருட்டனீரகில... ............*
காரணனைத்தீண்டநினைக்கை......... ......... ......*

(இ-ள்.) (கிரியையான்ஞானங்கிடைத்தாலுங்கேடு கருவால்வருவதுபோற்காணும்) எ-று. கிரியைத் தொழிலான் ஞானங்கிடைத்ததாயினும் அந்தஞானத்திற்குக்கெர்ப்பத்தின் கண்ணுற்பத்தியாய்வரும்பொருள்கள்போற் கேடுண்டாமென்றி (ஒருகோடிசூரியரைக்கூரிருளாலேசுருட்டனீரகிலகாரணனைத்தீண்டநினைக்கை) எ-து, ஓர்கோடிசூரியரைமிகுந்தவிருளினாற்சுருட்டிப்பிடித்தல் போலுஞ்சடசித்துக்களாயுள்ள பிரபஞ்சங்களையெல்லாங்கடந்துநின்று மவற்றைநடத்துங்காரணனாகியிருந்தசிவனை நீருமதுகிரியையாற் றொடர்ந்துபற்றக்கருதுவதென்றவாறு. *

ப-ம். சரியைகிரியாயோகங்கள் ஞானசாரியனையடைதற்குப்பக்குவமாக்குவனவன்றி ஞானத்தைக்கொடாதாயினு முன்விட்டகுறையாற் கிரியையனுட்டிக்குங் காலையோர்கால் ஞானந்தோன்றிற்றாயினும் அந்தஞானம் ஞானசாரியராற்பெறுமையாலுந் தான்செய்யுங்கிரியை மேலிட்டாலுநிலைபெறாதுமறையுமாகலிற் கிரியையான்ஞானங்கிடைத்தாலுமென்றுங் கருவால்வருவதுபோற்கேடுண்டாமென்றுங் கூறினர். ஞானத்தாற் சிவத்தைப் பெறவேண்டுமென்பதறியாது மாயாகாரியமாகிய கிரியையாலதனைப் பெறத்துடங்கின் ஒருகோடிசூரியரைக் கூரிருளாலேசுருட்டலென்றுவமைகூறினர். கிரியையேதுவானஞானம்வந்ததாயினு நண்டிப்பிமுதலியநமது கருவானாசமாவனபோல் அந்தஞானமேலிட்டாற் கிரியைகெடுமென்பதுமாம். (எ)

(அ-கை.) கருவிகளையும்போதத்தையுங்கடந்துநின்ற சுகாதீதமுத்தியையவற்றாற்செய்யும் கிரியைகளா னடையக்கூடாதென்றறிவித்தல். *

சுகாதீதம்வேண்டித்தொழில்செய்வோமென்று......*

னகாரோதுயில்வார்நடந்தோ-விகாரமெனச்...... ......*

சாத்திரமும்பூசைச்சமாதிகளுஞ்சார்போதக்.... ......*
கோத்திரங்காண்மாயைக்குழாம்........... .........*

(இ-ள்.) (சுகாதீதம்வேண்டித்தொழில்செய்வோமென்றுனகாரோதுயில்வார்நடந்தோ) எ-து, ஆனந்தாதீதமாகிய வீடடையவிரும்பினதனையறி விக்குஞானசாரியனையடைந்து அருள்ஞானம் பெற்றுஇவ்வருண் ஞானத்தாலவ்வீடடையாதுவிடுத்துக் கிரியைத் தொழிலா னவ்வீடடையலாமென்றுகருதி அக்கிரியை களைச்செய்வோமெனின் மெய்ஞ்ஞானிகணகையாரோ அஃதென்னெனின் நித்திரா பண்ணவேண்டினோரோரிடத்துப்படுத்துக்கொண்டு நித்திராபண்ணுவதன்றி ஒருர்வழிநடத்துசென்றோநித்திரா பண்ணுவாரஃதன்றி (விகாரமெனச்சாத்திரமும் பூசைச்சமாதிகளுஞ்சார்போதக்கோத்திரங்காண் மாயைக்குழாம்) எ.து, ஞானிகளொடு மாறுபட்டதுபோன்று நீரோதுஞ்சாத்திரமு மந்தர்யாகபூசையி லோர்வடிவைத் தியானித்து நீர் சமாதிகூடுதலும் உம்து சார்போதத்தின் கூட்டமுமாயைக்கூட்டமு மஃதுவகாணென்றவாறு. *

ப-ம். போதவொழிவினின்றசுகாதீதத்தைவிரும்பினோர்கருவிகளொழிந்தபோது மசைவறுதபோது மவைகளோடுங்கூடித்தொழிற்செய்தால் அப்போதநெய் சொரிதழல்போன் மேன்மேல்வளர்தலிற் சுகாதீதம்வேண்டித் தொழில்செய்வோ மென்றுலென்றும் இத்தொழிலால் அச்சுகாதீதம்பெறுதலரிதென்பதும் ஞானிகளறிவராகலினகாரோவென்றுங் கூறினர். தேகமசைந்து செல்லும்போது நித்திராவரினுமவ்வசைவந்நித் திரையைவரவொட்டாது தடுத்தல்போற் கருவிக ளசைந்துதொழிற்செய்யும்போது தெய்வகதியாலானந்தநித்திராவரினும் இத்தொழி லந்நித்திரையைவரவொட்டாது தடுக்குமாகலினுந் தேகமசைவற ஓரிடத்துக் கிடந்தபோது நித்திரைநன்றுய்வருவதுபோற் கருவிதொழிற் செய்யாதடங்கிய போது ஆனந்தநித்திரை நன்றுய்வருமாகலினுந் துயில்வார்நடந்தோவென்றார். போதமொன்றுயினுமடுத்தகருவிகள்தோறும் அந்தன்மயமாய்ச் சென்றிருத்தலிற் சார்போதக்கோத்திரமென்றுபன்மையாக்கூறினர். மாயைக்குழாமென்றதுகருவிகளை- போதமுங்கருவிகளுங்கூடிச்செய்தலாவிரண்டையுங் கூட்டிக்கூறினர். பாசஞானம்பசுஞானமென்றுமாம். (அ)

(அ - கை.) ஞானக்கிரியைமாத்திர மேலைப்பயன் குறியாது செய்கவென்றறிவித்தல். *

தொழிலிறுதிதானேசுகவுதயமென்றாற்.........*
றொழிலுதயந்துக்கமெனச்சொல்லோந்-தொழில்செயினும்
வந்திப்போகம்போலவுண்டுடுத்தன்மாத்திரமாய்ச்......*
சிந்திப்பாரைப்பேணிச்செய்.............................௫

(இ-ள்.) (தொழிலிறுதிதானே சுகவுதயமென்றாற் றொழிலு தயந்துக்கமெனச்சொல்லோம்) எ-து, இம்மையைக் குறித்துச் செய்யுமுழவாதியறுவகைத் தொழில்களும் மறுமையைக்குறித்து ச்செய்யுஞ்சரியாதித்தொழில்களும் வீட்டைக்குறித்துச் செய்யுங் கருவிகளை நியதிகளைதலாகியதொழில்களும் அதற்குமேன் ஞாதுருஞானஞேயமாய்நிற்கும் போதவவசைவுகளு மற்றவிடந் தானேசி வானந்தோதயமென்று வேதாகமங்கள் கூறுமெனின் அணுவள வேனுந் தொழிலுதயமானவிடத்துத் துன்பமுண்டாமென்றியா ங்கள்கூறுகிலோ மாண்டுத்துன்ப முண்டென்பது தொழிலிறுதி தானே சுகவுதயமென்னு மொழிதானே விளக்கலினாயினீர் இங்ங னங் கூறியவாற்றாற் றொழில்சிறிதேனுஞ்செய்ய வேண்டாவோவெ னின் (தொழில்செயினும் வந்திப்போகம்போல வுண்டுடுத்தன்மா த்திரமாய்ச் சிந்திப்பாரைப்பேணிச்செய்) எ-து, இன்றியமையா தசிற்சிலதொழில்களை நீசெய்யினும் இனிமேலக்கும்வண்டுமென் றொன்றையுங்கருதாதுண்டுடுக்கும் வந்திப்போகம்போல் இம்மை மறுமைப்போகங்களி லொன்றையுஞ்சிந்தியாது காடிகூழேனுங்கி டைத்ததை யுண்டலுங்கரித்துணிகந்தை யாதேனுங்கிடைத்ததையுடு த்தலுமாகிய இம்மாத்திரமே சிந்திக்கும் பெரியோரைப் பார்த்து அவரைப்பேணியுஞ்செய்தியென்றவாறு. *

ப-ம். ஓர்தொழிலுஞ் செய்யாது நிழற்கண்ணிருப்பதுசுகமெ ன்றாலெழுந்து வெய்யிலிற்சென்று தொழிற்செய்தல் துன்பமென் பதுசொல்ல வேண்டுவதின்றாகலிற் றொழிலுதயந் துக்கமெனச் சொல்லோமென்றார். வந்திசுதைசுதரின்மையான் மேலைக்கொன் றையுங்குறியாததுபோல் ஞானிகட்கிகபரங்களெல்லாம்பொய்யாக லின் இவருமொன்றினையுங் குறியாராகலினு மவளுண்டுடுத்தன்மா த்திரமாயிருத்தல்போ லிவரு முண்டுடுத்தன்மாத்திரமா யிருத்தலி னும்இங்ஙனமுவமைகூறினார். சிந்திப்பாரைப்பேணிச் செய்யென் பது நீதொழில்செய்தியாயினும் ஞானிகளடையைப் பார்த்தவர் செய்யுந்தொழின்மாத்திரமேயன்றி யதிகஞ்செய்யற்க வென்பதெ னக்கொள்க. *

(அ-கை.) போதமிறந்துநிற்பதே நிட்டையென்றும் போதத்தோடுங்கூடிச்செய்தது நிட்டையன்றென்றுமறிவித்தல். *

சும்மாதிருக்கவைத்தசூத்திரமாஞ்சாத்திரத்தை.......*

விம்மாக்கதறுவதும்வேலைகளுந் - தம்மறிவா... ......*
னீட்டிப்பிடித்திருக்குநிட்டைகளுஞானிகண்முன்... *
காட்டும்பரியாசகம்.................. ......... ......*

(இ-ள்.) (சும்மாதிருக்கவைத்தசூத்திரமாஞ் சாத்திரத்தை விம்மாக்கதறுவதும்வேலைகளுந் தம்மறிவா னீட்டிப்பிடித்திருக்கு நிட்டைகளும்) எ-து, தற்போதத்தையொழித்து ஆனந்தமவுனமாயிருக்கவோதிவைத்தவுபாயமாகியசாத்திரங்களைவிம்மியழுதோதுதலும் நீராடலாதி கிரியைகளைச்செய்தலுந்தமதுபோதத்தாலோர்வடிவைத்தியானித்து உடலைநீட்டிப்பிடித்தாசனங் கட்டியிருக்கு நிட்டைகளுமாகிய இவையெல்லாம் (ஞானிகண்முன்னர்க்காட்டும் பரியாசகம்) எ-து, இவைகளொன்றுமின்றிமவுனானந்தமாயிருக்கு மெய்ஞ்ஞானிகண்முன்னர்க்காட்டப்பட்டபரியாசகமாமென்றவாறு. *

ப-ம். வேதாகமவழிகூறும் ஞானசாஸ்திரங்களெல்லாந் தற்போதத்தையொழித்துச் சிவமாயிருத்தற்குபாயங் கூறுமாகலிற் சும்மாதிருக்கவைத்த சூத்திரமாஞ்சாத்திரத்தையென்றுஞ், சாத்திரத்தினருத்தங்களை நாடிக்கலுழ்தலான் விம்மா வென்றும், அவ்வருத்தப்படிநில்லாமையாற் கதறுவதென்றுங், கிரியைகளியாவு மறிவன்றாகவினுமூலகர்வேலையோடிதுவு மோர்வேலையாகலினும் வேலைகளென்றும், தற்போதத்தாற்கூடுநிட்டை ஞான நிட்டையன்மையா னீட்டிப்பிடித்திருக்கு நிட்டை யென்றும், இவையெல்லாம் ஞானிகட்குப்பரியாசகமாயிருத்தலிற் பரியாசகமென்றுங்கூறினர். தம்மறிவா னீட்டிப்பிடித்திருக்குமென்றமையான் அருளறிவானிட்டை கூடுதனிட்டையென்பதாயிற்று. (௰)

(அ-கை.) அபரஞானத்தால்வீடடையக்கூடாதென்றறிவித்தல்.

குடையுஞ்செருப்புங்கொடுநடப்பதல்லாற்...... ...*

படியும்விசும்பும்பரப்பி - யிடையாடு............ ...*
மாத்திரம்போலேசமயவாதமனம்போதாத... ... ...*
சாத்திரங்கற்றார்வீடுற்றார்......... ......... ...*

(இ-ள்.) (குடையுஞ்செருப்புங்கொடுநடப்பதல்லாற்படியும்வி

கம்புப்பரப்பியிடையாடு மாத்திரம்போலே) எ-து, ஒரூர்க்குச்செல்லவேண்டினோனுடம்பின் மழை வெய்யிலாதி படாதுகையிற் குடையும்பிடித்துக்கொண்டு காலிற்கன்மூண் மண்டாக்காது செருப்புந்தொட்டுக்கொண்டுநடப்பதேயன்றிஆகாயமெங்குங் குடைபரப்பிப்பூமியெங்குந்தோல்பரப்பி அவற்றிற்கிடையே செல்லுமாத்திரம் போலே (சமயவாதமனம்போதாத சாத்திரங்கற்றூர் வீடுற்றூர்) எ - து, சமயிகளுனுவாகக்கூறுந் தருக்கவாதங்களேயும் அத்தருக்கவாதத்தாலனந்தம்பதமாய்த்தோற்று மன்னுயுத்திகளேயு மளவுகூறினும் அவ்வளவுபோதாத சாத்திரங்களேக்கற்று வீடடைந்தாரியாவரொன்றவாறு. ❋

ப-ம். ஒரூரடையக்கருதினேன் மேனுக்குங்காலுக்குந் துன்பனுகாவகை குடையுஞ்செருப்பும்பிடித்திட்டுக்கொண்டுசென்று அவ்வூரடைவதுபோல வீட்டையக்கருதினேன் ஆசாரியர் கூறுமுபதேசமொழிகளும் அவர்கொடுக்கும்மார்சாத்திரமுங் கொண்டு அவற்றினருத்தப்படி திரிகரணங்களா லொன்றையும் வருந்திச்செய்யாதுதற்போதத்தையேயொழித்து அவ்வீட்டை யடையா தளவிடப்படாத ஆகாயத்திலும்பூமியினுங் குடையுந்தோலும் பரப்பி நடுவிடைசெல்லத் தொடங்கினோனப்போலுந் தருக்கவாதங்களேயும் அவ்வாதத்தாலெழுமன்னுயுத்திகளேயுமளவிடினும் அளவிடப் படாதசாத்திரங்களேக்கற்று நீர்வீடடையத்தொடங்கிய தென்பதுவுஞ் சிலகற்பினுமதனுல் வீடுகூடாதென்பதுமிதனுற்சொன்க. சாத்திரங்களேமிகவுங்கற்றோர்க்குத் தருக்கவாதமுடமன்னுயுத்தினு மிகவும் விரியுமாகலிற் சாத்திரங்கட்களவுகூறுவார் வேறுகூறுதவற்றை யளவுகூறினர்,வாதமென்பதுமனமென்பதுமாகுபெயர். (௰௧)

(அ-கை.) அருளேயும்போதத்தையுங்கடந்துநின்றசிவம்போதத்திற்கப்படாதென்றறிவித்தல். ❋

அறிவாலேபற்றியனுபவித்துவிட்ட.................❋
கிறியால்வருமோகெடுவீ - ரறிவாய்நீ..................❋
ராம்போதபிவிப்பான்றூனுடைவையிரண்டும்........ ........❋
போம்போதும்வாராப்பொருள்............ ........ ....❋

(இ-ள்.) (அறிவாலேபற்றியனுபவித்துவிட்டகிறியால்வருமோகெடுவீர்)எ-து, தற்போதவறிவாலொன்றைப்பாவித்தும்பற்றியிலே

திங்ஙனமிருப்பதென் றப்போதத்தாலநுபவித்தறிந்துமீட்டும் அப்பாவனையைவிடுத்தபொய்யினால்வருமோ (அறிவாய்நீராம்போதறிவிப்பான்ருனுயவையிரண்டும்போம்போதும்வாராப் பொருள்) எ-து, கருவிகண்முப்பத்தாறையுநீங்கி அவற்றின்முடிவினின்றவறிவியாமென்றவ்வறிவாய்நீராகும்போதும்மையுந் தன்னையு மறிவிப்பான்ருனுகி அந்தவறிவுமறிவிக்குமறிவுமாகிய அவையிரண்டு நீங்கியபோதும் வாராதசிவனுகியமெய்ப்பொருளென்றவாறு. *

ப-ம். பாவனையிற்றோன்றும்வடிவுமாயை அவ்வடிவி லிசம்பிறத்தல்கருமம் அவ்வடிவைமெய்பாகக்கருதப் பண்ணுவ தாணவமாகலிற் கிறியால்வருமோகெடுவீ ரென்றார். அருளும் ஆன்மபோதமுநீங்கியபோது ஆன்மாச்சிவமயமாயிருக்குமாகலின் அவையிரண்டும்போம்போதும்வாராப்பொருளென்றார். (௰௨)

(அ-கை.) தற்போதநாசத்தையே விரும்பினோர்க்கு மெய்ப்பொருள்கிடைக்குமென்றறிவித்தல். *

அழிப்பேயவனுக்குமிச்சையதுவானு.........*
விழப்பேயுனக்கிச்சையென்னு - யிழப்பை... ... ...*
யறியாததுகாணறியுவஞ்ஞானங்...................*
கிறிகேளுன்போதங்கெடல்.........................*

(இ-ள்.) (அழிப்பேயவனுக்குமிச்சையதுவானு விழப்பேயுனக்கிச்சையென்னுப்) எ-து, உன்போதத்தையொழிப்பதேசிவனுக்குமிச்சை அவனதிச்சாசத்திதொழிலுமதுவானு லவரதிச்சைபோலுன்போதத்தையிழப்பதே யுனக்கு மிச்சையாய்க்கருதுவாய் நீவீடடையவிரும்புவையெனின் ஆயினிரிங்ஙனங் கூறியவாற்ரு லஞ்ஞானங்கெடுதல்வீடன்றென்று ம்போதங்கெடுதல்வீடென்பதாயிற்று இனியஞ்ஞானமாவதியாதென்(இழப்பையறியாததுகாணறியா வஞ்ஞானங்கிறிகேளுன்போதங்கெடல்), எ-து, அப்போதவிழப்பை யறியாதகிரியையாதிகளை நீசெய்தலே அறியாமையாகிய வஞ்ஞானமென்றறிதியாயின் அப்போதவிழப்பையறிதற் குபாயமெங்ஙனமெனின்பொய்யமே யினியுன்போதங்கெடுதற்குபாயஞ் சொல்லுதும் நீகேட்டியென்றவாறு. *

ப-ம். சிவன் பெத்தத்திச்சையி லுடலையொழித்து மாயையில் வைத்திளைப்பாற்றுதல்போல் முத்தித்திசையிற்போதத்தையொழித்துஆனந்தக்கடலில்வைத்திளைப் பாற்றுவ னுயினும் அவனொழிக்கு

மிச்சைபோற் றன்னையிழக்குமிச்சைவைத்த ஆன்மபோதத்தை யொழிப்பனன்றி அப்போதத்தை யொழிக்குமிச்சை யின்றிய வான்மபோதத்தையொழியானுசலி னிழப்பயுனக்கிச்சை யென்றுமென்றார். (௰௬)

(அ-கை.) போதமடக்குதற்குபாயங்கூறுதல்.

மருந்துபிணியோடேமாண்டுபுகைதீ........ ......*
யெரிந்தவிறகோடிறக்கில் - விரிந்த........ .. ......*
தொழின்மனத்துமட்டேடநீதோயுமதென்னுடி........*
நிழல்புதைத்தாற்போலெதிர்போய்நில்........ .....*

(இ-ள்.)(மருந்துபிணியோடேமாண்டுபுகைதீயெரிந்தவிறகோடிறக்கில்) எ-து. பிணிமாண்டபோது அது நீங்கற்பொருட்டு உண்டமருந்துமப்பிணியோடு மாண்டுபோமெனில் எரிந்தவிறகிருந்தாலவ்விறகோடும் புகையுந்தீயுமிறக்குமெனில் அவ்வபோ லுன்போதமிறந்தால் அப்போதத்தோடுங் கிரியையிறக்குமென்றுங் கிரியையிறந்தாலதனோடுங் கருவியும்போதமுமிறக்குமென்றும் அறியாதுன்போதத்தாற் கிரியையைச் செய்யாநின்றனை (விரிந்ததொழின்மனத்தின்மட்டே நீதோயுமதென்னுடி நிழல்புதைத்தாற்போ லெதிர்போய்நில்) எ - து, நானுவாய்விரிந்த வுனதுகிரியைத் தொழில்களின்மனத்தினளவேயன்றி வேறின்றாகலிற் கருவிகண் முப்பத்தாறையும்போதத்தையுங்கடந்துநின்ற சிவத்தைக்கிரியையேதுவாகக் கொண்டப்போதத்தானுடியச்சிவத்தையடையத்துடங்குமுன் கருதிடுதென்னை. நீயக்கருவிகளை நியதிகளைந்து அவற்றின்முடிவினின்றவுன்னை அருளாலறிந்து பெரியநிழலிற்சிறியநிழன்மறைந்தாற்போல நீயத்திருவருளின்மறைந்து எதிரேடெல்லாம்போய்நிற்றி யிங்ஙனநிற்றியெனிற் போதமொழித்தற்குபாயமுஞ் சிவத்தைப்பெறுதற்குபாயமும் இதுவேயாமென்றவாறு. *

டம். போதந்தோன்றியபோதுகிரியைதோன்றும் அப்போதஞ்சிவத்திலிறந்தபோ துஅப்போதத்தோடுங் கிரியை யிறக்குமாகலிற்போதத்தைப்பிணியாகவுங் கிரியையைமருந்தாக்வும் வைத்துக்கூறினார். விறகெவ்வளவிருந்ததுஅவ்வளவும்புகையுந்தீயுமிறவாதுஅவ்விறகிறந்தபோதகனுடனேபுகையுந்தீயுமிறக்குமவைபோற்கிரியையெவ்வளவிருந்ததவ்வளவுங்கருவிகளும் போதமுமிறவாது அக்கிரியைசிறிதுந் தோன்றுதிறப்பி னதனோடுமிக்கருவிகளும் போதமு

யிறக்குமாகலின்புகைதீயெரிந்தவிறகோடிறக்கினென்றார். கிரியையிறந்தபோதுகருவிகளும்போதமுமிறக்குமென்ற தெங்ஙனமெனிற்கிரியையிருந்தபோதுபோதம் வளர்வதேயன்றி யிறவாதக்கிரியையிறந்தாற்போதத்திற் கசைவின்றிக்கெடும் இப்போதங்கெடவேயிதனைத்துடர்ந்து நின்றகருவிகளுங்கெடுமாகலின் இங்ஙன மென்றறி, பெரியநிழலிற்சிறியநிழற்புறம்புபோகாதடங்கின் மறையுமதுபோற் பூரணமாகியசிவபோதத்திற் கிஞ்சிஞ்ஞமாகிய ஆன்மபோதமெதிரிட் டசையாதடங்கி னதின்மறையுமாகலி னிழலபுதைத்தாற்போலென்றார், நீங்கிநின்ற கருவிகளையுமடைந்து நின்றதிருவருளையுமெதிரிடாதுநிற்கவேண்டுமாகலின்எதிர்போய்நிலலென்றார். (௰௪)

(அ-கை.) கருவிகளைநீக்குதற்குபாயமும் அவற்றைநீக்கித்தன்னையருளாலறிந்தருட்பூரணம்விளங்கியபோது போதஞ்சீவியாதருளின்மறைந்துநிற்றற் குபாயமுமறிவித்தல். * *

காணுமறிவுநீகாட்டறிவுநாமவற்றைக்... ..........*
காணக்கழலுங்கழற்றியிலே-நாணி.......................*
தமைத்திரும்பிப்பாராதேநான்றானென்னாதே.........*
யமிழ்த்துகாகம்போனிற்பாய்.................... ......*

(இ-ள்.)(காணுமறிவுநீகாட்டறிவுநாமவற்றைக்காணக்கழலுங்கழற்றியிலே) எ-து, கருவிகளையிதுவிதுவென்றுகாணுமறிவு நீயவற்றைஉனதுயிர்க்குயிராயிருந் துனக்குக் காட்டுமறிவுநாம் அக்கருவிகளினதுகுணங்களைநீகாணக்காண அவைகளெல்லாமுனக்கன்னியமாய்நீங்குநீக்கத்தில் அவற்றின்முடிவினின்ற வுன்னைக்கண்டபின்னர் (நாணிதமைத்திரும்பிப்பாராதேநான்றானென்னாதே யமிழ்த்துகாகம்போனிற்பாய்) எ-து. அக்கருவிகளையறிந்து நீங்கவும்என்னையுள்ளபடியறியவும் யான்காணுமறிவாகலின்எனக்குச் சுதந்தரமின்மையென்று நீநாணியெனக்குக்காட்டு மறிவொன்றுள தென்றெம்மையெதிரிட்டுப்பாராதே அங்ஙனங்காணுமறிவுங் காட்டுமறிவுமாயிருந்தோமாயினுங் கண்ணொளியு மாதித்தனொளியும் பிறிபடாததுபோற் பிறிபடாதிருக்குமாகலி னஃதன்றியிங்ஙனம்பிறிபடாதிருந்த பரிபூரணத்தை நான்தானென்றுகருதாதே கடலிலமிழ்த்தியகாகஞ் சலத்தையுள்ளேமொண்டுஅக்கடலின்மறைந்தாற்போலநீயும்அப்பூரணத்துக்குள்ளே யமிழ்ந்திநீதோன்றாதநனுண்மறைந்துநிற்பாயென்றவாறு. *

ப-ம். கருவிகளினது குணங்களையெதிரிட்டறியாதபோது அவைகளான்மாவிற் கன்னியமாப் நீங்காதாகலிற் காணக்கழலுமென்றார், கருவிகளையெல்லாநீங்கி ஆன்மாவருள்வடிவாயபோ தவ்வருட்பூரணமெல்லாந் தானாய்த்தோற்றுமாகலி னன்றுமெனன்றதே யென்றார். (௰௫)

(அ-கை.) போதத்தாற் செய்யுங்கிரியை முத்திக்கேதுவன்றென்பதும் அப்போதத்தைச் சிவனுக்கூணாக்கொடுத்துநிற்றலேயேதுவென்பதுமறிவித்தல், ✽

௯௰ துவைச்சடங்கதனைமைதுனமாக்கொண்ட... ...✽

புதுமைச்சிவானந்தம்போதும்-பதையா..............✽
விளக்கொளியிலெண்ணெய்வியாபியானாற்போற்......✽
கொளக்கொடுத்தல்சத்தியமாக்கொள்............ ......✽

(இ-ள்.) (வதுவைச்சடங்கதனைமைதுனமாக்கொண்ட புதுமைச்சிவானந்தம்போதும்) எ - து, தன்புருடனைக்கூடி யின்புறுதற்கேதுவாச்செய்யுங் கலியாணச்சடங்கினை அவனோடுங் கூடி யின்புறுதலாகக்கொண்ட பேதைப்பெண்போற்சிவனாகியபுருடனை ஆன்மநாயகிகூடியின்புறுதற்கேதுவாச்செய்யுங் கிரியைத்தொழிலை யவனோடுங்கூடி நீயின்புறுதலாகக்கருதிக்கொண்ட இந்தப்புதுமையாகியசிவானந்தமமையும் இனிக்கிரியையைச் சிவானந்தமாகக்கருதுங்கருத்தைவிட்டு (பதையாவிளக்கொளியிலெண்ணெய் வியாபியானாற்போற்கொளக்கொடுத்தல் சத்தியமாக்கொள்) எ-து, அசையாது நின்றுவிளக்கொளிக்குள்ளெண்ணெய் வியாபியானாற்போல் நீசிவத்தில் வியாபியாயசைவறநின்று அதுவிழுங்கிக்கொள்ள வுன்னைக்கொடுத்ததுண்மையாயுள்ளமுத்தி யீதென்றறிந்துகொள்ளுதியென்றவாறு. ✽

ப-ம். விளக்கொளியிலெண்ணெய் வியாபித்துக்கொண்டுநிற்க இவ்வெண்ணெயையவ்வொளிவிழுங்கித்தான்பிரகாசித்தல்போலச்சிவபூரணத்திலான்மா வியாபித்தசைவறநிற்கவே அச்சிவபூரணமிவ்வான்மாவைவிழுங்கிக்கொண்டு தான்பிரகாசிக்குமாகலின்விளக்கொளியிலெண்ணெய்வியாபியானாற்போற் கொளக்கொடுத்தலென்றார். தன்னைக்கொடுப்பதுசத்தியமெனவேதன்னாற்செய்யுங் கிரியையசத்தியமென்பதுதானெயாயிற்று. (௰௬)

கிரியைக்கழற்றி - முற்றும்.

ஆ-அதிகாரம்-௬க்கு-திருவெண்பா-௱௬௰.





சிவமயம்,

## ஐந்தாவது.

# சரிதைக்கழற்றி.



(அ-கை.) வீடடையத் தொடங்கினாரியானமையான் இத்தொழிலைச் செய்துவருந்துகின்றாரந்தோவென்றிரங்கிக் கூறுதல்.

நடந்துங்குளித்துமிது நல்லநாளுணை.. ......... ..*
விடுந்தொழிலான்மெய்வருந்திவீடென்-றடங்காதா...*
ரென்றுசுகமேயிருப்பரிப்போதே துக்கமிவர்க்... ..*
கென்றெதிர்போயின்பமுதிக்கும்.......................*

(இ-ள்.) (நடந்துங்குளித்துமிது நல்ல நாளுணைவிடுந் தொழிலான்மெய்வருந்திவீடென்றடங்காதார்.) பூப்பிரதக்கணமாநடந்து சென்றுங்கங்கைமுதலிய தீர்த்தங்களாடியு மிதுநல்ல நாளென்னவூணைவிடுத்துமிவைமுதலியன செய்யுஞ் சரிதைத்தொழிலான் மெய்வருந்தியிங்ஙனஞ்செய்வனவே வீடென்று துணிந்துதற்போத மடங்காதார் (என்றுசுகமேயிருப்பரிப்போதே துக்கமிவர்க்கென்றெதிர்போயின்பமுதிக்கும்) எ-து, எக்காலமோர்தொழிலையுஞ் செய்யாதுசுகமேயிருப்பரித்தொழில்களானிவர்க் கிம்மைக்கண்ணே துன்பம்இத்தொழில்வாசனைமறுமைக்கண்ணுந் தொடருமாகலின் எக்காலந்தானென்றுஞ் சிவமென்றுமெதிரிடும் போதமொழிந்து ஆனந்தந் தோன்றுமென்றவாறு. *

ப-ம். தான்குறித்ததுவீட்டின்பமா யிருந்தும் அதனைப்பெறுதற்கேதுவல்லாத சரிதைத்தொழிலைமிகவுமெய்வருந்திச்செய்தலானவ்வின்பத்தைப் பெறுதற்கேதுவாயதற்போதத்தையுமெளிதிலொழித்து அதனையெக்காலம்பெறுவரோவென்னுங்காருண்ணியத்தாலென்றெதிர்போயின்பமுதிக்குமென்றார். (௧)

(அ-கை.) அவர்கேட்டவுபதேசத்தைமறுத்தல்.

உடலாலுழைத்தாலுடலொழியுமென்று.........*
கெடுவீரிதையெங்கேகேட்டீ-ருடலே... ...... ......*
நடையாடியபிணம்போனுன்போய்த்திரியக்...... ...*
கிடையாதோவென்றுகேளீர்.........................*

(இ-ள்.) (உடலாலுழைத்தாலுடலொழியுமென்றுகெடுவீரிதையெங்கேகேட்டீர்) எ - து, உடலால்வருந்தியாத்திரைமேறென்றுசிவியஇச்சரிதைத்தொழிலைச்செய்தாற்பிறப்புநீங்குமென்றுகெடுவீர்காளிந்தவுபதேசத்தை யெந்தக்குருவினிடத்துக்கேட்டீர் (உடலேநடையாடியபிணம்போ னுன்போய்த்திரியக் கிடையாதோவென்றுகேளீர்)எ-று,இந்தவுடல்தானேநடையாடியபிணம்போலத்தற்போதங்கெட்டுநிலத்தின்கண்ணுலாவவெமக்குண்டாகாதோவென்று ஞாஞசாரியரைக்கேளாதநீங்களென்றவாறு. *

ப-ம். ஞானசாரியரையடைந்து அனுக்கிரகம்பெற்றமெய்ஞ்ஞானிகட்குக்கருவிகண்முப்பத்தாறுந்தற்போதமுங்கெடலான் அக்கருவிச்சேட்டையும்போதச்சேட்டையுமின்றுமாகலின்அவரதுதிருமேனியுள்ளும்புறனும்வெறுங் கடத்தாகாயம்போற் சிவமேநிறைந்திருக்கும் அவர் நிலத்திற்சரிக்கும்போதுமக்கடமாகாயத்திற் செல்வதுபோற்றேற்றுமாகலினடையாடிய பிணம்போனுன்போய்த்திரியவென்றார். கேளீரெங்கேகேட்டீரெனமுடிக்க-வீடடையத்துடங்கியிங்ஙனஞ்செய்தலாற்கெடுவீரென்றார். (௨)

(அ-கை.) ஞானசாரியராலன்றி ஆன்மாக்கள்சுதந்தரத்தால்வீடடையக்கூடாதென்று சுதந்தரவினமறிவித்தல்.

எந்தவூர்நீரென்றாலிப்போதிருந்துநாம்...... ......*
வந்தவூர்தன்னைமறந்தோமே-லந்தவூர்க்...... ... ......*
கின்றுநாம்போம்வழியேதென்னிலுமக்கேழுலகு......*
மொன்றுபோலொன்றுதோன்றும்....... ....... ...*

(இ-ள்-)(எந்தவூர்நீரென்றாலிப்போதிருந்துநாம் வந்தவூர்தன்னைமறந்தோமேல்) எ-து, யாமிந்தவூரிலிருந்து மற்றோரூருக்குச்சென்றம்போது அவ்வூரிலிருந்தானொருவனெந்தவூர் நீ ரென்றெம்மைக்கேட்டால் இப்பொழுதிருந்துவந்தவூர் தன்னையவனுக்கின்னதென்றுசொல்ல மறந்தோமெனின் (அந்தவூர்க் கின்றுநாம்போ

ம்வழியேதென்னி னுமக்கேழுலகு மொன்றபோ லொன்று தோன் றும்) எ-து, முன்னிருந்தவூருக்குஇப்போது நாம் போவதற்குவழி யாதென்றுநீர்நாடி னுமக்கேழுலகு மொன்றும்போற்றோன்றி அந் தவூருக்குச்செல்லும்வழிபோன் மற்றோரூருக்குச்செல்லும்வழிதோ ன்றுமெனின் இங்ஙனங்கேட்டோனுக்கூர்ப்பெயருஞ்சொல்ல மற ந்து அவ்வூருக்குச்செல்லும்வழியுந் தெரியாது மயங்கியவிப்போத ங்கொண்டோ திரிகரணங்களையுங்கடந்து நின்ற பூரணசிவத்தைநீர டையத்துடங்கினீரென்றவாறு. *

ப-ம். அவர்க்குத்தம்மைப்போ லிவருந்தோற்றலான் அவரை யிவர்தம்மோடுக்கூட்டிமறந்தோமே லென்றார். ஊர்ப்பெயர் சொ ல்லமறந்துபோவது தூலபுத்தியாற்றெரியாது யாமங்ஙன மறப்ப திலமென்று அவரைத்தம்மைவிடப்பிரித்துநோக்கிஉமக் கேழுலகும் ஒன்றுபோலொன்று தோன்றுமெனத் தூலமாகியவழித்திகைப்பை யெடுத்துக்காட்டினார். நெறிக்கட்டிசைதப்பியபோது முன்போனா ன்குதிசையும் பிறிந்துதோன்றாதாகலின் எழுலகு மொன்றுபோ லென்றார். (௫)

(அ-கை.) வேடத்தான்மிகவுஞ் சிறப்புள்ளாராயினும் அகத்து ஞானமிலரெனிற் சிறப்பிலரென்பதும் வேடமியாது மிலாராயினு ம்அகத்துஞானமுள்ளார்சிறப்புளரென்பதுமறிவித்தல். *

வேட்டியுந்தாழ்வடமும்வெண்ணீறும்வெண்பல்லுங்
காட்டுவதுஞானக்களவுகாண் - டேட்டமற்றோன்... *
பூரணன்காண்சிற்றறிவன்பொய்ப் பாசமென்றறிந்தார்க்
கோர்வடிவும்வார்த்தையுமுண்டோ.............. ...*

(இ-ள்.) (வேட்டியுந்தாழ்வடமும்வெண்ணீறும் வெண்பல்லுங் காட்டுவதுஞானக்களவுகாண்) எ-து, காவிவேட்டியு முருத்திராக்க த்தாழ்வடமுமெய்முழுதும்பூசும்வெண்ணீறும் அடைக்காய்தின்னா தவெண்பல்லும் இவைமுதலியசிவவேடங்களை மெய்யிற் காட்டுவது ஞானத்திருட்டுகாண் (தேட்டமற்றோன் பூரணன்காண் சிற்றறிவன் பொய்ப்பாசமென்றறிந்தார்க் கோர்வடிவும் வார்த்தையுமுண்டோ எ-து, ஓர்பொருட்கண்ணும்விருப்பமற்றோனாகிய சிவன் பரிபூரண ன்சீவன்சிற்றறிவன் பாசம்பொய்யென் றறிந்த ஞானிகட்கு ஓர் சம யவேடமுஞ்சமயவபிமானவார்த்தையுமுளவோவிலவென்றவாறு.

ப-ம். அகத்துஞானமின்றிப் புறத்துவேடத்தானும் வசனத்

தானும் ஞானிபோற்காட்டினமையான் ஞானக்களவு காணென்றார். அகத்துஞானமும் புறத்துவேடமு முளவெனின் ஞானக் களவன்றென்றாயிற்று. சிவமணுத்திரணமுதலியபொருள்கட்கெலா முட்புறனுகிய பரிபூரணவறிவாகலின் அதற்கோர் சமயமில்லை சிற்றறிவு பொய்யாகிப்பாசத்தைவிட்டுநீங்கி அப்பரிபூரணவறிவோடுங் கலந்தபோது அப்பூரணவறிவாய்நிற்குமன்றி அதுவிதுவென்னும் பகுப்பில்லையாகலின் ஒர்வடிவும்வார்த்தையுமுண்டோவென்றார். (ச)

(அ-கை.) ஞானநிட்டையின்மையானவரது நிட்டையைமறுத்தல். *

கல்வியாய்ப்புத்தகமாய்க்காவிகடுக்குட்கட்டாய்ப்...*
பல்லின்வெளுப்பொத்தபசுமார்க்க - மெல்லை.........*
கழன்றதியானத்திற்கண்சியிட்டமாங்காண்...... ......*
சுழன்றபெருமாலையத்தொழில்.........................*

(இ-ள்.) (கல்வியாய்ப்புத்தகமாய்க் காவிகடுக்குட் கட்டாய்ப்பல்லின்வெளுப்பொத்தபசுமார்க்கம்) எ-து, காங்கற்றகல்விகளைப்பேசுவதாய்ப் புத்தகங் கையிற்கொள்வதாய்க் காவிவேட்டியுடுப்பதாயித் திருமேனிக்கடுக்கன் காதிலேயிடுவதாய்க் கண்டத்திற் கெவுடங்கட்டுவதாய்ப்பேச்சிற்கும்வேடத்திற்குமேற்றப்பல் வெளுப்பமொத்திருந்த பசுஞானநெறியினையுடையார் (எல்லை கழன்றதியானத்திற்கண்சியிட்டமாங்காண் சுழன்றபெருமாலையத்தொழில்) எ-து, பிருதிவிமுதனுதமீறென் றளவுகூறப்பட்டகருவிகண்முப்பத்தாறையுங்கழன்ற சிவத்தியானத்தையுடையனாப்போலக்கண்மேற் செருகியாசனங்கட்டிக்கொண்டிருப்பர் இவர் இங்ஙனமிருப்பதாங்காண்-கறங்குபோற்சுழலாநின்ற பெரிய மாலையினது தொழிலாவதென்றவாறு. *

ப-ம். ஞானமின்றிவேடங்கொண்டார் வேடதாரிகளொப்பாகலிற்பசுமார்க்கமென்றார். அகத்துப்பரிபூரணஞானமின்றிக்கண்சிமிட்டிப்பத்திந்திரியங்களையு மப்போதடக்கி ஆசனங் கட்டியிருப்போர்க்குமுன்னர் ஞானேந்திரியங்களாலறிந்து கன்மேந்திரியங்களாற்செய்தனம் அப்பத்திந்திரியங்களுமடங்கலின்அவற்றின்வாசனைபோய் முன்னைதியவாசனையோடும் உள்ளே சுழலுமன்றியடங்காதாகலிற் கழன்றபெருமாலையத்தொழிலென்றார். (ரு)
(அ-கை.) ஞானமின்றி ஞானசாரமாத்திரஞ் செய்வோர்க்குப்

பிறப்பின்பமேயன்றி வீட்டின்பமின்றென்றறிவித்தல். *

ஞானக்கிரியைநடிப்பவர்க்குநாடோறும்... ... *
போனத்தளவேபொசிப்பன்றி - யேனுந்...... ......*
துறவாயவாவறுத்துமெய்யுணர்ந்ததூய................*
வறிவார்க்கறியா வின்பம்......................... ......*

(இ-ள்.) (ஞானக்கிரியைநடிப்பவர்க்குநாடோறும் போனத்தளவேபொசிப்பன்றி) எ-து, அகத்தஞானமின்றி புறத்துஞானசாரமாய்நடிப்பவர்க்கெக்காலமு மன்னபானத்தளவுவரும் விடயானந்தானுபவமன்றி (துறவாயவா வறுத்து மெய்யுணர்ந்த தூயவறிவார்க்கறியாவின்பமேனும்) எ-து, துறவினையுடையராகித் துறந்தவப்பொருள்கண்மேன் முன்னர்வாசனையா லெழுமவா வினையறுத்துமெய்ப்பொருளையுணர்ந்த நிருமலஞானிகட்குந் தோன்றுதசொரூபானந்தானுபவமேனுண்டாமென்றவாறு. *

ப-ம். இவர்செய்யுமாசாரத்தைப் பிறர்கண்டு பெரியோனைப் போசனங்கொடுத்தலிற் போனத்தளவே பொசிப்பன்றி யென்றார், பேரின்பம்போதநாசத்திற் றோன்றுமற் றோன்றலான் அறிவார்க்கறியாவின்பமென்றும் இவ்வின்பம் பெறுதற் கேதுவாய ஞானமின்மையாலேனுமென்றுங்கூறினர். துறவுபுறப்பற்று நீங்குதல் அவாவறுத்தலகப்பற்று நீங்குதல்இவ் விருவகைப்பற்று நீங்கவேசகலங்கலங்கணீங்கும் இவைநீங்கவே மெய்யுணர்வுதோன்றுமாகலிற் றுறவாயவாவறுத்து மெய்யுணர்ந்ததூயவறிவாரென்றார். (௬)

(அ-கை.) இந்தவின்ப மியாவராலறியக்கூடுமென் றிரங்கிக்கேட்டமாணாக்கனைநோக்கி விடைகூறுதல். *

இன்பேயறிவுக்கிடம்புள்ளினைத்ததுபோற்...... ...*
றுன்பேயணுப்பொருப்பாய்த்துக்கிக்கு-நன்குணத்தாற்
பேரின்புக்கிச்சைபிறந்ததினிக்கேளுனக்குப்... ... ...*
பேரின்பந்தேடிப்பெறாய்... ................. ......*

(இ-ள்.) (இன்பேயறிவுக்கிடம்) எ-து,இந்தப்பேரின்பம்பரிபூரணமாகவின் இவ்வின்பமேயான்மாவிருத்தற்கிடம் ஆனால் அவ்வின்பமிங்ஙனமிருக்குமெனி னிதனையானிப்போ தடைய வேண்டுமினிப்பிறவித்துன்பஞ்சிறிதும்படமாட்டேனென்றமாணாக்கனை நோக்கிமேற்கூறுகின்றார் (புள்ளினைத்ததுபோற்றுன்பே யணுப்பொரு

ப்பாய்த் துக்கிக்குநன்குணத்தாற் பேரின்புக்கிச்சை பிறந்ததினிக் கேளுனக்குப்பேரின்பந்தேடிப்பெறுய்) எ - து, உயிர்ப்பொலிசி றிதும்தான்றினும் அதனைப் பேரொலியாக்கண்ட சுணப்புள் வருந்தியதுபோல் நீபித்தேகாதிப்பிரவஞ்சங்களான்வருந்துன்பம் அணுவளவாயினுமதனைப்பொருப் பளவாக்கண்டு துன்புறு நற்குணத்தாலுனக்கிப்போது பேரின்பத்தின்மே லிச்சைசெனித்ததாகலின் இனிபனை யடைதற்குபாயஞ் சொல்லுதுங் கேட்டி பேரின்பத்னைத யாங்கூறியவுபாயப்படி தேடிப்பெறுதியென்றவாறு. *

ப-ம். விடயசுகத்தைத் துன்பமெனக் கூறினர் இதனையங்ஙனங்கண்டோர்க்குச் சொரூபசுகத்தின்மே லிச்சைசெனிக்குமாகலிற் றும்பயனுப்பொருப்பாய்த் துக்கிக்குநன்குணத்தாற் பேரின்புக்கிச்சைபிறநதெதென்றூர். (எ)

(அ-கை.) பேரின்பமான்மாவைவிட்டுநீங்காதென்பதும் அதனைப்பெறுதற்குபாயமுங்கூறுதல். *

பேரின்பமுன்னைப்பிரியாதுன்னுண்மையஃ.....*
தோரின்பமாய்விடயத்துடுதிப்பும்- பேரின்...... ...*
பழிவிலேதோன்றுமறிவுமயலா....... ...... ......*
மொழிபுமிரண்டின்பமும்........ ....... ...*

(இ-ள்.)(பேரின்பமுன்னைப்பிரியாதுன்னுண்மையஃது)எ-து அந்தப்பேரின்பமுன்னைவிட்டெக்காலமும் ஓரணுவளவேனும் பிரியாதிருப்பது அவ்வின்பமேயுனக்குரித்தாய் மெய்ம்மையாயுள்ளது அங்ஙனமென்னைவிட்டுநீங்காதெனக் குரித்தாய் மெய்ம்மையாயிருப்பதெனக்குத் தோன்றுதிருப்பா னேனெனின் (ஓரின்பமாய்விடயத்துடுதிப்பும் பேரின்பழிவிலேதோன்றும்) உன்னு லறியப்பட்டோரின்பமாய் வனிதையர் விடயத் துடுதோன்றுவதும் யாங்கூறியவந்தப்பேரின்பமு மெதிரீடற்றவிடத்துத்தோன்றும் (அறிவுமயலாமொழிபுமிரண்டின்பமும்) எ-து, ஆணறிவும்பெண்ணறிவும் எதிரிட்டபோது அவ்வறிவுகளு மயலாம் அறிவுமயலாமென்ற வும்மையாலாணகுறியும்பெண்குறியு மெதிரிட்டபோது இக்குறிகளுமயலா மிவைகளபலாகவே யிவ்விருவகைக்கூட்டரவுகளால்வரும் இரண்டின்பங்களுமபலாயொழிபுமென்றவாறு. *

ப-ம். ஆண்குறியும்பெண்குறியுங்கலந்து எதிரிட்டழிந்தபோதும்ஆணறிவும்பெண்ணறிவுங்கலந்தெதிரிட்டழிந்தபோதும்அவ்வி

ன்பமுமிவ்வின்பமுந்தோன்றலான் அழிவிலேதோன்றுமென்திரு மைக்கும்பொதுவாகக்கூறினர். குறிகளுமறிவுகளுமெதிரிட்டபோ துஇன்பமின்மையாலொழியுமிரண்டின்பமு மென்றார், இருவகை க்குறிகளுங்கலந்தபோதவையிருந்துந் தோன்றாதழிதலானும் ஆண் குறி பெண்குறிக்குள் வீடாயிருத்தலானும் இன்பந்தோற்றலானும் அவற்றினதுகூட்டரவை யிவற்றினது கூட்டரவிற்குவமையாகக்கூ றினர். அழிவிலேதோன்றுமென்றமையான் அழியாதெதிரிட்டம்போ தென்பதும் வருவிக்கப் பட்டது, விடயானந்தமேலீட்டாற் பரவ சமாவதும்போற் சொரூபானந்தமேலீட்டாற் பரவசமாவதுங் கொ ள்க. (அ)

(அ - கை.) விடயானந்தம்போல்அவ்வானந்தமுமறியக்கூடா தோவெனின் இவ்வின்பம்போல் அவ்வின்பமும் போதத்தாலறியக்கூ டாதென்றறிவித்தல். *

விடையமுதித்துநின்றுவிட்டவிடங்கீழ்மே.... ..,*
விடைவிடாதேநிறைந்தவின்பந்-தொடுவரோ... ......*
தோன்றியழிவதுவேதுக்கசுகமுன்னுண்மை... ......*
தோன்றுவடங்காச்சுகம்........................ .........*

(இ-ள்.) (விடையமுதித்துநின்றுவிட்டவிடங்கீழ்மேலிடைவி டாதேநிறைந்தவின்பந்தொடுவரோ) எ-து, ஓர்விடயத்தின்கட்டோ ன்றிநின்றழியப்பட்டவின்பங்கீழாயவின்பம் எவ்வேறுவகைப்பட்ட பொருள்களினுமிடையறாது பரிபூரணமாய்நிறைந்த வின்பமேலா யவின்பமாகலின் இவ்வின்பத்தைப் பெற்றுள்ளார் தற்போதத்தா லதனைப்பற்றுவரோ அஃதெங்ஙனமெனின் (தோன்றியழிவதுவே துக்கசுகமுன்னுண்மைதோன்றுவடங்காச்சுகம்) எ-து, போதத்தா ற்பற்றியறிந்தனுபவிக்கும் அவ்வின்பந்தோன்றியழிவது அங்ஙனந் தோன்றியழிவதுவேசுகமுந் துன்பமுமாகலினுமுனதுள்ளேமெய் ம்மையாயிருந்தவின்பமோர்காலங்களினு முற்பத்திநாசமின்றியவீ ட்டின்பமாகலினுமென்றவாறு. *

ப-ம். அவ்வின்பமோர்விடயத்திற் றோன்றி யழிதலாற்பற்றிவி டப்பட்டதுஇவ்வின்பம்பூரணமாகலானும்உற்பத்திநாசமின்மையா னும்பற்றுதல்விடுதலிதற்கின்மையாயிற்று, தோன்றியபோதுசுகமு ம்மறைந்தபோதுதுன்பமும்வருதலிற்றோன்றியழிவதுவேதுக்கசுக மென்றார். அச்சுகதுன்பங்களால்விழைவுவெகுளியு மிவ்விழைவுவெ

குளிரனால் இருவினைகளுமிவ்விருவினைகளாற் பிறப்புமுண்டாமெ ன்பதுங்கொள்க. சிற்றின்பம் பற்றியபோதுந்தோன்றும் விடுத்த போதுமறையும்பேரின்பம்பற்றியபோதுமறையும்விடுத்த போது தோன்றுமென்பதுங்காண்க. *

(அ-கை) ஆயினவ்வின்பம் இத்தலத்திற் றோன்றுதலில்லையா கலின்மற்றோர்தலத்திற்சென்றிருந்து தவத்தைப்பண்ணி அதனைப் பெறுகின்றேனென்றமாணாக்கனைநோக்கி அப்பூரண வின்பமுறுத ற்குத்தலமிடமின்றென்றும் போதநாசமிடமென்றுமறிவித்தல். *

எங்குப்பரிபூரணமென்னிலீதல்ல...... ............*
வங்கங்காமென்னும்போதங்கிலையோ-பங்காகே ... ...*
ஆகாயந்தீண்டிவிடுமற்பவறிவழிவி......... .........*
லேகாண்பேரின்பமுதிக்கும்......... ... ..........*

(இ-ள்.) (எங்கும்பரிபூரணமென்னிலீதல்ல வங்கங்காமென்னு ம்போதங்கிலையோபங்காகேள்) எ-து, அப்பேரின்பம்இருநூற்றி ருபத்து நாலுபுவனமெங்கு முட்புறனுய்நிறைந்துள்ள பரிபூரண மென்றுவேதாகமங்கள்கூறுமெனின் அவ்வின்பம்பெறுத்தற்கேதுவி த்தலமன்று காசிமுதலிய அந்தந்தத்தலங்களிற்பெறலாமென்று நீ கூறும்பொழுது நீயிருந்த அத்தலத்தில் அவ்வின்பமின்றாயதோ ப குப்பறிவுநீங்காதவினைக்கேட்டி ( ஆகாயந்தீண்டிவிடு மற்பவறிவழி விலேகாண்பேரின்ப முதிக்கும்) எ-து, பரையோகமாகிய ஞானா காசத்தைப்பெற்றவிடத்து அதற்குமேற்றோன்று மனுபவத்தைநா டித்தாவின்ற நிலைபவமுழுவுமற்பவறிவழிந்தவிடத்திலே உனக்குப் பேரின்பந்தோன்றுமென்றறிதியென்றவாறு. *

ப-ம். பரையோகநிட்டைபெற்றகாலை அதற்குமேற் றோன்றுஞ் சிவத்தையுநாடாதவ்வருளையு மறவாதி நப்பிற்சிவ தெரிசனந்தானே தோன்றும் அதுதோன்றவேகிஞ்சிஞ்ஞபோதமழியும் அஃதழியவே பேரின்பந்தோன்றுமாகலின் ஆகாசந்தீண்டிவிடு மற்பவறிவழிவி லேகாண்பேரின்பமுதிக்குமென்றார். (சித்தியார்) வாடாதேகுழை ந்திருப்பையாயிற்பிறிபாதசிவந்தானே பிறிந்துதோன்றும் - பிரப ஞ்சமேபமெல்லாந்தானுய்த்தோன்றி - நெறிபாலேயிவையெல்லாம லவாகி- நின்றெனுந்தோன்றிடுவனிராதாரனுயே - என்றும் (திரு வாசகம்) இமைதேர்கொகத்திரவுபகலேசற்றிருந்தேவேசற்றே ன் - கழைச்சேரடியார்களிசிறப்பக்காட்சிகொடுத்துன்னடியேன்பாற்

பிறைசேர்பாலினைப்போலப் பேசாதிருந்தாலேசாரோ - என்றுமற்
றும்வருவனவற்றாற்காண்க. (௰)

(அ - கை.) அப்பேரின்பமடைதற்குச் சிற்றின்பமாகிய விட யத்தடையாகலின் இத்தனையொழித் ததனையடை வேனென்றமாணாக்கனைநோக்கிக்கருவிகளையுள்ளபடி யருளாலறிந்துநீங்கி யவ்வருளின்மறைந்துநின்முன்மீட்டுமவைகள்வந்து வாதியாதென்றறிவித்தல்.

உடம்புள்ளமட்டும்விடயமொடுங்கா... ... ... ...*
வொடுங்குகிலோகேவலமாமும்ப-ரிடம்புட்... .........*
பறந்தாற்கலங்குமோபாசத்திறுண்மை........ ......*
யறிந்தாற்சுடர்த்தடைபோலாம்..................*

(இ-ள்.) (உடம்புள்ளமட்டும்விடயமொடுங்காவொடுங்குகிலோ கேவலமாம்) எ - து, விடயங்களனுபவித்தற்கேதுவாய வுடம்பிருக்குமளவும் அவ்விடயங்களொழிபாவுடம்போடொற்றுமையா யிருந்த ஞானேந்திரியங்களைந்திற்கும் எதிரீடாய விடயங்கடோன்றுந்தோறுமவற்றையொழிப்பேனெனின் அங்ஙனமொழிக்கிற் கருவிகளெல்லா மொழியும் அவையொழியிலோ கேவலம் வந்தடுக்கும் ஆயின் அவற்றையொழிக்குமா றெவ்வாறெனின் (உம்பரிடம்புட் பறந்தாற்கலங்குமோபாசத்திறுண்மையறிந்தாற் சுடர்த்தடைபோலாம்) எ-து, ஆகாயத்திடமாய்ப்புட்பறந்தால் அவ்வாகாசமசையாததுபோல் நீயிம்மாயாவடிவத்தையானலனென்று நீங்கி அருள்வடிவாயிருத்தியெனின் அப்போது விடயங்கள் வந்தடுப்பினு நீயசையாதிருப்பையாயின் மாயாவடிவமா யிருந்தபோது வருத்தியவிடயந் திருவருள் வடிவாயிருந்தால் வருத்தாதிருப்பதெங்ஙனமெனின்அசுத்தந்துக்க மனித்தியமன்னியமென்று பாசத்திறுண்மையைத் திருவருளா லறிந்தனையாயினக்கினிச்சுட்டடக் தடுக்கு மந்திரம் போல் அவ்வறிவு கருவிச்சேட்டையைக்கெடுக்குமாலின்அக்கினியிருந்துஞ்சுடாததுபோற்கருவிகளிருந்துமுன்போலவாதியாதாகுமென்றவாறு. *

ப-ம். தான்கருவிகட்கன்னியமாய்ப்பிறிந்துநின்று அருளாலடக்காதக்கருவிகளோடுங்கூடிநின்று போதத்தாலடக் கினமையாற் கேவலமாமென்றார். அருள்வடிவாயிருந்தபோது கருவிகளசைவதேயன்றித்தானசையானாகலினும்பரிடம் புட்பறந்தாற்கலங்குமோ வென்றார். (௰௧)

(அ - கை.) விடயங்களை யிந்திரியங்களாலறிந்தனுபவித்தற் கேதுவாயவிவ்வுடலையொழித்து அவ்வின்பத்தைப் பெறுவேனெ னின் அவ்வின்பம்பெறுதற் குடலொழித்தலேதுவன்றுஇவ்வுடலாதி களெல்லாந்தனக்கன்னியமென்றருளாற்கண்டு நீங்கி அவ்வருளி னிற்றலேயேதுவென்றறிவித்தல். *

உடலிருந்தென்போயெனுருவருவமூன்று......... *
மடைவர்தொழிலுமனாதி - குடமுடைத்து............ *
மண்ணெனவேண்டுமோமாயாவயிர்துவத்து ...... *
முண்ணின்றுபார்த்திரிப்போதும்................... *

(இ-ள்.) (உடலிருந்தென்போயெனுருவருவமூன்று மடைவர் தொழிலுமனாதி)எ-து; இவ்வுடலிருந்ததனால் அவ்வின்பம்வருதற் குத்தடையென்னை யிதுபோயதனாலவ்வின்பம்வருமாறென்னைஅவ் வின்பம்வருதற்குத்தடை யிவ்வுடலாலியாதுமின்று உருவமுமருவ முமுருவாரூபமுமாகிய இம்மூன்றுவடிவத்தினையுமுடையசர்வஞ ர் அநாதியிலே யாணவமலத்திற்கிடந்த வுன்னைக்காருண்ணியத்தா லெடுத்து மாயையிற்றனுகரணபுவனபோகங்களைக்கொடுத்து இரு வினையொப்புமலபரிபாகம்வருவித்து விடைவிக்கும்பொருட்டு ச்செய்யும்பஞ்சகிருத்தியங்களுமநாதியாகலின் நீயிக்காயத்தையொ ழிப்பலெனக்கருதற்க (குடமுடைத்துமண்ணெனவேண்டுமோ மாயாவயிந்துவத்துமுண்ணின்றுபார்த்திரிப்போதும்) எ-து, ஒரு வருக்குக்கடத்தை மண்ணென்றறிவிப்பதேயன்றி அக்கடத்தையு டைத்துமண்ணென்றறிவிக்கவேண்டுமோ அதுபோலுனக்கிவ்வுட ம்பைமலமென்றறிவிப்பதேயன்றி யிதனையழித்துமலமென்றறிவி க்கவேண்டுமோவாகலின் இதனுளிருந்தே யிவ்வுடம்பையுமற்றமு ள்ளன கருவிகளையுமாயாமலமென்று முனக் கன்னியமென்றுங்க ண்டுநீங்கிவயிந்தவமாயையாகிய சுத்ததத்துவத்தின் முடிவினின் று உன்னையருளாற்கண்டவ்வருளிலசைவறவிருத்தி- யிப்போதுமவ் வானந்தமுதயமாம்தேகமுடிந்த வப்போது மவ்வானந்தமயமேயா வையென்றவாறு. *

ப-ம். பெத்தத்திசையிற் பஞ்சகிருத்தியத்தாற்பஞ்சாவத்தை களையுமுண்டாக்கி நடத்தாநின்ற சர்வஞரிப்போது முத்தித்தி சையினுமுனக் கப்பஞ்சாவத்தைகளையுநீக்கித்தமது திருவடியான ந்தத்தைக்கொடுப்பர் நீயுடலையொழிக்கவேண்டுவ தேதுக்கென்றறி

வித்தற்கடைவர்தொழினுமனுதியென்றார். இப்போது மென்றமை யானப்போதுமென்பதுவருவிக்கப்பட்டது. (௰உ)

(அ - கை.) வேதாந்தமுத்தியோ சித்தாந்தமுத்தியோ வுண்மையென்றமாணுக்கனைநோக்கி வேதாந்தமுத்தி சித்தாந்தமுத்தியிரண்டுந்தற்போதமொழிந்தோர்க்குச் சமநிலையென்றறிவித்தல். *

கயிற்றரவுங்கட்டையினிற்கள்ளனும்போன்மாயா... *
மயக்கமற்றவேதாந்தவாழ்வு - முயற்சிகெட்ட...... ...*
வானந்தாதீதத்தேயாணவராமாகமமுந்......... ......*
தானந்தினர்க்குச் சமன்................. ...........*

(இ-ள்.) (கயிற்றரவுங்கட்டையினிற்கள்ளனும்போன் மாயாமயக்கமற்றவேதாந்தவாழ்வும்) எ-து, உள்ளகயிற்றினிடத்தில்லாதபாம்பு கற்பிதமாய்த் தோற்றுதல்போலும் உள்ளகட்டையினிடத்தில்லாதகள்ளன் கற்பிதமாய்த்தோற்றுதல்போலும் உள்ளபிரமத்தினிடத்தில்லாதமாயை கற்பிதமாய்த்தோன்றுதென்றறிந்து இம்மாயாமயக்கஞ்சிறிதுந்தோன்றா திறந்தடையுமிடம்வீடென்றகூறும் வேதாந்தச்செல்வமும் (முயற்சிகெட்டவானந்தா தீதத்தே யாணவராமாகமமுந் தானந்தினர்க்குச்சமன்) எ-து, தற்போதமுயற்சிசிறிதுந்தோன்றாதிறந்தவானந்தாதீதத்திற்பெததத்திசையி லாணவராகியிருப்பாரைப்போலுமிருப்பதேவீடென்றுகூறும் ஆகமச செல்வமுந்தானென்றெதிரிட்டெழும் புல்லறிவுகெட்டார்க்குச் சமனுமென்றவாறு. *

ப-ம். அவித்தியாகதமாயிருந்த சீவனதுபுன்மை யறிவாயிருந்துநானென்றெதிரிடு மவ்வறிவுகெட்டபோ தச்சீவசாட்சியாயிருந்தபிரமந்தானாகலானும் ஆணவமயமாயிருந்த வான்மாவினது புன்மையறிவாயிருந்து நானென்றெதிரிடும் போதங்கெட்டபோ தவ்வான்மாத்தனக்குமுதலாகியசிவமயமாதலானும் இங்ஙனமாய்ப்பாஇருவர்க்கு மானந்தானுபவ மிருத்தலானுந் தானந்தினர்க்குச்சமனென்றார். தானந்தாதவபரஞானிகட்குச்சமனன் றென்பது தானேயாயிற்று. (௰௩)

(அ-கை.) முத்திநிச்சயமீதென்றறிவித்தல்.

என்றுணையென்றுணையென்றுணையேகமிரண்...............*
டென்றுமற்கும்மாதிருவென்று - சொன்னான்.........*
திருஞானசம்பந்தன்சீகாழிநாட...................*
னருளாளன்ஞானவினோதன்.........................*

(இ-ள்.) (என்றுணையென்றுணையென்றுணையேகமிரண்டென்றுமற்கும்மாதிருவென்றுசொன்னான்) எ-து, முக்காலுந் தம்பேரிற்றிருவாணைகூறி முத்தியில்வேதாந்தியைப்போலேகமென்றும் பேதசித்தாந்த வாதியைப்போ லிரண்டென்றுங்கூறாது இங்ஙனங்கூறுதற்கேதுவாய வுன்போதத்தை யொழித்து நீமவுனைந்தமாயிருத்தியென்றருளிச்செய்தார் (திருஞானசம்பந்தன்சீகாழி நாடனருளாளன்ஞானவினோதன்) எ - து, திருஞானசம்பந்தப்பிள்ளையாரென்னு நாமதேயத்தையுடையார் சீகாழிநாட்டிற்கதிபதியான வருளாட்சியுடையார் ஞானத்திருவிளையாட்டினையுடையாரென்றவாறு. *

ப-ம். ஒன்றெனிற்பெறுவானும் பேறுமின்றாம் இரண்டெனிற்பதமுத்தியேயன்றி யயிக்கமுத்தி கூடாதாகலினும் போதவிரிவிலிரண்டாயும் போதவொழிவிலொன்றாயுமிருத்தலினும் ஏகமிரண்டென்றுமற் கும்மாதிருவென்றானென்றார். (௰௪)

சரிதைக்கழற்றி - முற்றும்.

ஆ அதிகாரம்-௫-இ-திருவெண்பா-௱௫௰.





௳

சிவமயம்,

# ஆறுவது.

# விரத்திவிளக்கம்.



அஃதாவது. இங்ஙனஞ்சரிதாதிகளை நீத்துநின்றாராயினும்உட்டுறவில்லார்க்கு ஞானம்விளங்காதாகலின் இவ்வதிகாரத்திநுட்டுறவு விளக்கங்கூறி யுட்டுறவினதிலக்கணமறிவித்தாராகலின் இவ்வதிகாரத்திற்கு விரத்திவிளக்கமென்றுபெயராயிற்று. விரத்தியெனினுந்துறவியெனினுமொன்று. ❋

(அ-கை.) ஆன்மாவொன்றுண்டென்றறிவித்தல்.

அறிந்தவிடத்தின்பதுன்பமாகாததுவு.......... ......❋
மறந்தவிடத்தின்பமயக்கு - மறிந்த......... ..... ...❋
வலியறிவுநீயென்றானத்துவிதானந்த.................❋
மூலயமுதமுண்டமுனி.................................❋

(இ-ள்) (அறிந்தவிடத்தின்பதுன்பமாகாததுவுமறந்தவிடத்தின்பமயக்குமறிந்த வலியறிவுநீயென்றான்) எ-து, கருவிகண்முப்பத்தாறையுங்கடந்து அருளையறிந்த விடத்தாண்டின்பமுந் துன்பமுமுண்டாகாது அவ்வருளைமறந்தவிடத்துமுன்னீங்கிநின்ற கருவிகள் வந்துகூடலான் அத்துன்பமு மின்பமும்வந்தீண்டுமயக்குமாகலிற் பதியறிவோடுங்கூடி யின்பதுன்பமின்றிய அப்பதியறிவாயும்பாசவறிவோடுங்கூடி யின்பதுன்பமயமாயுநின்றதனையு மிவற்றையுமறிந்தவலியறிவுநீயென்றெனக்கருளிச்செய்தார் (அத்துவிதானந்தமூலயமுதமுண்டமுனி) எ - து, இரண்டற்றவத்துவிதத்திற்றோன்றும்பேரானந்தமாகிய திருமூலயமுதத்தை யம்மைபொற்கிண்ணத்தோடுங்கொடுப்பவாங்கியுண்ட திருஞானசம்பந்தப்பிள்ளையா மொன்றவாறு. ❋

ப-ம். பதியறிவு- ஆணறிவு- பாசவறிவு- பெண்ணறிவு - இவ்விருவகையறிவும்போலன்றிப் பதியறிவோடுங் கூடிப் பதியறிவாயும். பாசவறிவோடுங்கூடிப்பாசவறிவாயும், ஆண்வடிவும் பெண்வடிவுந் தழுவிநின்றவலிபோலிருத்தலிற் பசுவையலியறிவென்றார். அம்மையானந்தவடிவியாகலி னவளதுதிருமுலைப்பால யானந்தவமுதமென்றார். அதுவுமென்பதனை யத்துன்பமுமின்பமு மயக்குமெனக்கூட்டுக. *

(அ-கை.) உட்டுறவு புறத்துறவுடையாராச் சமயிகளெல்லாரும்ஞானிகளென்றங்கிகரிப்பதொன்றறிவித்தல். *

ஆறுசமயத்தோர்க்குமறுதியிட்டகூடற்.......... *
றுறவாயவாவறுத்தறூய்மை - பிறவா................... *
முடிகளசமுத்திரமுயற்சியெல்லாமூத்த........ .......... *
கடைகருமநாசமிதுகாண்................ ........ ....... *

(இ-ள்,) (அறுசமயத்தோர்க்கு மறுதியிட்டகூடற்றுறவாயவாவறுத்தறூய்மை) எ- து, அறுவகைச்சமயத்தோர்க்கும் வீடடைதற்குமட்டிட்டுவைத்த பொதுநெறியாதெனிற் கூடற்கட்சங்கப்பலகையிலேறியிருந்து உட்பற்றுபுறப்பற்றென்னும் இருவகைப்பற்றினையுந்துறப்பதாயித்துறவுகளான் மெய்ப்பொருளை யுணர்வதாய்பிராரத்துவவாசனையாலெழுமோர்காலையினுள்ளத் தெழுமவா வினையுமறுத்தல்தூய்மையாய்க்கூறிய இம்மூவகையதிகாரங்களி னெறிகளேயாம் (பிறவாமுடிகளசமுத்திரமுயற்சியெல்லா மூத்தகடைகருமநாசமிதுகாண்) எ-து, அஃதன்றியும்பிறவாமைக்கேது கூறியபலவாற்றுள்ளும் சிரசும் கருவிகண்முப்பத்தாறையும்போக்கப் பட்டவிடுமதற்கேபாதமுயற்சியெல்லாமுதிர்ந்த கடையாகிய கருமநாசமும் இம்மூவகையதிகாரத்திற்கூறிய நெறியாங்காணென்றவாறு. *

ப - ம். சமயிகளறுவரும் வீடடைதற்குமட்டு வேறு வேறுகூறினாயினும் ஒருவர்கூறிய தொருவர்க்குச்சம்மதமன்று துறவாய்மெய்யுணர்ந்து அவாவறுத்தலனைவர்க்குஞ் சம்மதமாகலின் அறுசமயத்தோர்க்கு மறுதியிட்டகூடற் றுறவாயவாவறுத்த லென்றார். துறவு மவாவறுத்தலுங்கூறினமையா னிடையினின்ற மெய்யுணர்வுமுருவிக்கப்பட்டது. இம்மூவகையதிகாரங்களினெறிகளி னெழுகவுயிர்ச்சுத்தி இங்ஙனமுயிர்ச்சுத்திபண்ணுவோர்க் குடற்சுத்தி பண்ணவேண்டுவதின்மையாற்கடைகருமநாசமிதுகாணென்றார். (௨)

(அ-கை.) அருந்தல்பொருந்தல்களிலாசையற்றோர்க்கே இந்நூலாமென்றறிவித்தல்.

வாசிக்குச்சாவீரர்வைதாற்பொருததுபோ... ... *
லாசைக்கேடர்க்கிதுவாமட்டதென-நேசித்த .. ......*
வொட்டையைப்போல்வார்க்காமுடம்பாரவூண்பழகும்*
பெட்டருக்கிதாகாப்பிழை........................ ......*

(இ-ள்.) (வாசிக்குச்சாவீரர் வைதாற்பொருததுபோ லாசைக்கேடர்க்கிதுவாம்)எ-து, வாசியென்றவார்த்தைக்குமனம்பொருதிறந்துவிடத்துணிந்த வீரர்வைதான்மனம்பொருததுபோற்பெண்ணாசையாகாதென் றோர்வார்த்தைகூறியமாத்திரத்தின் அவ்வாசைமனத்தின்கண் மீட்டெழாதடக்குமவ்வாசை நாசர்க்கே யிவ்வதிகாரத்தினருத்தஞ்சம்மதமாமஃதன்றி (அட்டதென நேசித்தவொட்டையைப்போல்வார்க்கா முடம்பாரவூண்பழகும் பெட்டருக்கிதாகாப்பிழை)எ-து, அறுசுவையடிசில்போல் வேப்பந்தழைபாதிலைப்பிணயிச்சித்த ஒட்டகத்தைப்போலக் காடிகூழ்களிமுதலிய வற்றைச்சுவையாய்விரும்புவோர்க்குசம்மதமாம் உடல்பருக்கும்படி யறுசுவையடிசில்களை நன்றுதீதென்று பகுத்தூண்பழகும்பேடிகளுக்குங்காமிகளுக்கும்இதனதருத்தஞ்சம்மதமாகாதகுற்றமாம்.எ-று. *

ப-ம். மற்றநூலின் கண்ணோரிடத்துப் பெண்ணாசையாகாதென்று கூறக்கண்டு அதனைவிடுத்தோர்க்கே அவ்வாசையுடையோரைமிகவுமிகழ்ந்துகூறும் இதனதருத்தஞ்சம்மதமா மாகலின்வாசிக்குச்சாவீரர்வைதாற்பொருததுபோலாசைக்கேடர்க்கிதுவா மென்றார். அருந்தலாசைவைத்துக்கூறினமையால்ஆசைக்கே டர்க்கென்றதைப் பொருந்தலாசையாகக்கொள்க. (௩)

(அ-கை) நீரிங்ஙனங்கூறியவாற்றா ணசையறுதலோ முத்தியெனின் ஆன்மாவிற்குப்பாசமுழுதுநீங்கிற் பதியைத்தேட வேண்டுவதின்றென்றறிவித்தல். *

பாசங்கழன்றாற்பசுவுக்கிடம்பதியா......... ......*
மூசல்வடங்கழன்றதொவ்வாதோ-நேசித்த........ ......*
பற்றற்றகண்ணேபிறப்பறுக்கும்பாட்டுமக்கோ ... ...*
மற்றைச்சமயமெங்குமாம்......... ... .............*

(இ-ள்.) (பாசங்கழன்றாற்பசுவுக்கிடம்பதியாமூசல்வட்டங்கழன்

றதொவ்வாதோ) எ-து,உயிர்ச்சார்வுபொருட்சார்வாகிய இருவகைச்சார்வும் இச்சார்வுகளை நீங்கிய போதும் இவற்றின்மேலெழா நின்றவவாவும்இவ்வவா நீங்கியபோதுங்கண்டபொருள் கண்மேற்சென்றுபற்றுமிந்திரியங்களும் இவ்விந்திரியங்களடங்கியபோது முன்னேயிருந்தவாசனையா லுள்ளெழுமன நினைவுகளும் இவைமுதலியபாசங்களெல்லாங்கழன்றபோது இவற்றினின்றபசுவிற்குப்பதியேயிடமாமஃதெங்ஙனமெனின் அந்தரமாய்நின்ற ஆசற்கயிற்றிலிருந்தோனுக்கவ்வாசற்கயிறற்றபோது நிலமிடமாவதும்பால் அஃதொவ்வாதோவதனை நீபறிதி அஃதன்றி (நேசித்தபற்றற்றகண்ணே பிறப்பறுக்கும்பாட்டு மக்கோமற்றைச்சமயமெங்குமாம்) எ-து, தம்மாலிச்சிக்கப்பட்டபற்றுக்களெல்லா மற்றபோதே அப்பற்றறுதி பிறப்பினையறுக்குமென்று திருவள்ளுவ நாயனார்கூறிய குறள் வெண்பாப்பாட்டு உமக்குமாத்திரமோ சம்மதம் மற்றைய சமயங் கட்கெல்லாஞ்சம்மதமாமென்றவாறு. *

க-று,ஊசலிருந்தபோதுமொழிந்தபோதும்அதனுளிருந்தோனுக்கசைவுமசைவின்மையு முண்டாவதுபோற் பாசமிருந்தபோது மொழிந்தபோதும் அசைவுமசைவின்மையும் ஆன்மாவிற்குண்டாமெனபதுங்காணக. (௬)

(அ-கை.) தனுவாதிகளைத் தனக்கன்னியமாய்க்காணிற் றிருவருட்டோற்றுமென்றறிவித்தல். *

உனக்குமெய்யாய்த்தோன்றியொழித்துவிடும்பாசம் *
வினைச்சடமேயென்னில்விடம்போ-லுனைச்சுழற்று...*
மானுந்தன்னையறியாத துன்னறிவு.................*
தானுஞ்சுஞானத்தடை..................................*

(இ-ள்.) (உனக்குமெய்யாய்த்தோன்றியொழித்துவிடும் பாசம் வினைச்சடமேயென்னில்விடம்போ லுனைச்சுழற்றுமானும்)எ-து, உனக்குத்தோன்றும் போதியாமெனதென்று கருதும்படி மெய்யாகத்தோன்றிநீங்கும்போது உன்னைப் புறம்பாயொழித்து நீங்கிவிடுந்தேகம்பாசங்களாகியபாசம் வினைக்கீடாய்வரும் மாயாகாரியமாகியசடமென் றறிவிப்பினும் நீயங்ஙனமறியாமையான் உன்னைவிடய் புசித்தவனைமயக்குதல்போன் மயக்குமெனினும் அப்பாசம் ஞானத்தடையன்று இனி ஞானத்தடையாதெனின் (தன்னையறியாத துன்னறிவுதானுஞ்சுஞானத்தடை)எ-து, தனுவாதிகளையெல்லாமிது

விதுவென்று நானவாய்ப்பகுத்தறிந்தும் அவற்றையறிந்த தன்னை யறியாததுனதுபுல்லறிவாகலின் இவ்வறிவேஞானத்திற்குத்தடையா குமென்றவாறு. *

ப-ம், ஆணவத்தான்மறைபட்டிருந்தவான்மாவிற்குச் சிவன் மாயையிற் றனுகரணபுவனபோகங்களைக்கொடுத்து இச்சாஞானக் கிரியைகளை விளக்குவித்தலானும் இத்தனுவாதிகளாற் சுருதிகுருசு வானுபவங்களையறிந்து வீடடைதற்கேதுவாகலானும்இவற்றைச் சு டமென்றுந் தனக்கன்னியமென்று மறிந்தபோது மயக்காமையா னு மூனைச்சுழற்றுமானலும் இவைஞானத்தடையலவென்றுந் நா னென்றுந் தனதென்றுந் தன்னாலறியப்பட்ட தேகபோகங்களைத் தானுந்தனது மல்லவென்றவற்றைத் தனக்கன்னியமாய்க்கண்டு தன் னையுள்ளபடியறியமாட்டாததனதறிவே ஞானத்தடையாகலி னுன் னறிவுதானாகு ஞானத்தடையென்றுங்கூற்னர். தனுவாதிநான்கினு ட்டனுவோடுகரணமும் போகத்தோடுபுவனமு மொற்றுமையாயி ருத்தலிற்றேகபோகமென்றிரண்டாகக்கூறப்பட்டது. (௫)

(அ-கை.) ஆன்மாவிற்கிவை யுருவமன்றாயினிவற்றின்மயமா யிருப்ப தென்னையென்ற மாணாக்கனைநோக்கி ஆன்மாவின துருவ சொரூபசுபாவமறிவித்தல். *

சிற்றறிவனுய்மறைப்பைச்சேர்ந்தவடிவொண்படிகம்*
பற்றுகினுமொன்றாகாப்பான்மைபோ-லுற்ற......*
வுருவசொரூபசுபாவமுனக்கு.................*
வருமடைவுசொன்னோமறி.........................*

(இ-ள்.) (சிற்றறிவனுய்மறைப்பைச்சேர்ந்தவடிவொண்படிகம் பற்றுகினுமொன்றாகாப்பான்மைபோல்) எ-து, சிஞ்சிஞ்ஞாவறிவனுய் செம்பிற்களிம்புபோன்ற ஆணவமறைப்பைச்சேர்ந்த வடிவான்மா வினது சுபாவம் படிகமடுத்தவன்ன மயமாயிருப்பினுந் தன்னிற மந்நிறத்தோடொன்றாகாதமுறைமைபோலத்தானடுத்தகருவிமயமா யிருப்பினுந்தன்னறிவு அக்கருவியறிவோடொன்றாகாதிருப்ப தா ன்மாவினதுருவம்படிகம்பற்றுகினுமொன்றாகாவெவ்வொன்றை யும்பற்றாதிருந்தபடிகம்நிருமலமாயிருத்தல்போல்ஆன்மாமும்மலங் களையுநீங்கிநிற்றலதனதுசொரூபம்)உற்றவுருவசொருபசுபாவமுனக் குவருமடைவு சொன்னோமறி) எ - து, இங்ஙனமுனக்குற்றசுபாவ வுருவசொரூபங்கள்வருமுறையைச்சொன்னோம்இவற்றைநீயறிந்து

கொள்ளுதியென்றவாறு. *

ப-ம். ஆணவஞ்சகசமலமாலின் அதனைச்சேர்ந்தவடிவுசுபாவ மென்றும்படிகத்திற்றுச்சிவப்புவன்னமுதலிய செயற்கையாய்வந்த துபோல்ஆன்மாவிற்குக்கருவிகள்செயற்கையாய்வந்துபொருந்தலி ன்அதனையுருவமென்றும்படிகம்வன்னங்களை நீங்கியபோதுதனது சுயசொரூபத்தோடிருத்தல்போல் ஆன்மாக்கருவிகளையெல்லா நீங் கியபோதுதனதுசுயசொரூபத்தோடிருத்தலினிதனைச் சொரூபமெ ன்றுங்கூறப்பட்டது. (சு)

(அ-கை.) சிவனதுருவசொரூபசுபாவமறிவித்தல்.

நினைப்புமறப்பற்றுநிறைந்தவறிவா.................*
யனைத்துடனுநின்றம்பரமாய்த்-தனக்கருளித்.........*
தன்னானந்தத்தைத்தனக்களித்தசர்க்கரையே ...........*
யன்னானுக்கின்னவைமூன்றும்......................*

(இ-ள்.)(நினைப்புமறப்பற்றுநிறைந்தவறிவாயனைத்துடனு நின் றம்பரமாய்த்தனக்கருளி) எ-து, நினைப்புமறப்பாகியசகல கேவல ங்களையறுதியிலேநீங்கி வெங்கும்பூரணவறிவாய் எல்லாவற்றோடுங் கூடிநின்றுமாகாயம்போலொன்றோடுந் தாக்கற்றிருப்பதாய்ஆன்மா விற்கருள்செய்து மும்மலங்களையுநீக்கித் (தன்னானந்தத்தைத் தன க்களித்தசர்க்கரையேயன்னானுக்கின்னவை மூன்றும்) எ-து, தனது பேரானந்தத்தை அவ்வான்மாதனக்குக் கொடுத்தருளிச் செய்த நாவிற்குச்சர்க்கரையன்ன சிவனுக்குமின்ன வுருவசொரூபசுபாவ மூன்றுமுண்டாமென்றவாறு, *

ப-ம். நினைப்புமறப்பற்று நிறைந்தவறிவாயெனவே சிவனது சுபாவமனாதியிலே நின்மலமாயிருத்தலெனவும் அனைத்துடனு நி ன்றம்பரமாயெனவே இங்ஙன மிருப்பதருளாகலின் அவனதுருவ மிச்சா ஞானக்கிரியைகளெனவுந் தன்னானந்தத்தைத் தனக்களித்த வெனவேயானந்தமவனதுசொரூபமெனவுங்காண்க. (எ)

(அ-கை.) பரிசுத்தமாகியதுறவிதுவென்றறிவித்தல்,

அறிந்துபற்றிநின்றழுந்துமறப்பவறிவை...........*
யறிந்தசத்தியேபேரறிவாய்-நிறைந்துசிவந்.........*
தோயாமனின்றதுபோற்றோற்றமுதலைந்துடனுந் ... *
தோயாமற்சுத்தத்துறவு.........................*

(இ-ள்) (அறிந்துபற்றிநின்றழுந்துமற்பவறிவை யறிந்துசுத்தியேபேரறிவாய்) எ - து, பஞ்சவிடயங்களையுஞ்ஞானேந்திரியங்களாலறிந்து கன்மேந்திரியங்களாற்பற்றியந்தக்கரணங்களாலவற்றுளழுந்துங் கிஞ்சிஞ்ஞபோதத்தை யான்மாவினதியற்கைக்குணமன்றென்றுமதுபானங்கொண்டோனுக்குலகரிந்தோன்றியதுபோல் அவ்விருவகையிந்திரியங்களையுங் கரணங்களையுங்கூடியவிடத்துத் தோன்றியவிடயபோதமீதென்றறிந்து அவ்விந்திரிய கரணங்களோடும் அப்போதத்தைநீத்துத்தன்னையுள்ளபடியறிந்து அங்ஙனந்தன்னை யறிந்தபோதுதனக்கிந்திரிய கரணங்களையும்வேறுக்கித் தன்னையுமறிவித்ததருளெனக்கண்டு அவ்வருளேவடிவாகியிருந்து தான்மலமு மாகாமற் சிவமுமாகாமற் சிவானுபோகத்திலிரண்டறவழுந்தி நிற்பது ஆன்மசுத்தி, யிந்தஆன்மசுத்தியே சிவத்தில்வியாபகமாகிய பேரறிவாகலின் இப்பேரறிவாகி (நிறைந்துசிவந்தோயாமனின்றது போற்றோற்றமுதலைந்துடனுந் தோயாமற் சுத்தத்துறவு) எ - து; தனக்குவியாப்தியாயிருந்த சிவமெல்லாவற்றோடும் பூரணமாய் நிறைந்திருந்துமொன்றோடுந் தோய்வற்றுநின்றாற்போலச் சிருஷ்டியாதியைந்தொழில்களோடுந் தோயாமல்நிற்பதே பரிசுத்தமான துறவென்றவாறு. *

ப - ம். இச்சாஞானக்கிரியைகள் சிவதத்துவங்களைச் செலுத்தச்சிவதத்துவங்கள்கலாதிகளைச் செலுத்தக் கலாதிகள் ஆன்மாவினிச்சாஞானக்கிரியைகளையெழுப்ப ஆன்மாவினிச்சை யந்தக்கரணங்களிடத்தும்ஞானம்ஞானேந்திரியங்களிடத்துங்கிரியை கன்மேந்திரியங்களிடத்துநின்று விடயங்களை யறிந்துபற்றி யழுந்து மாதலினிவ்விருவகையிந்திரியங்களுங் கரணங்களுநீங்கவே ஆன்மாவினிச்சாஞானக்கிரியைகள்நீங்கும் இவைநீங்கவேசிவதத்துவம் நீங்கும் இவைநீங்கவேதன்னையறியப்படுமாகலின் அறிந்துபற்றிநின்றழுந்துமற்பவறிவையறிந்தென்றார். அவ்வவளதுமுன்னில்லையாயிதாகிதங்களிருநலையும் அவற்றைத்தான்பெறுதலையுந்திருவருட்கண்ணாற் பார்த்தழித்துப் பேய்பிடியுண்டவனைப்போற் சிவத்துண் மறைந்து நின்றமையாற்றான்மலமுமாகாமலென்றும் அங்ஙனநின்றுழி யானந்த போகம் பெறுதலாற்றான்சிவமுமாகாமலென்றுங் கூறப்படும் இங்ஙனமிருப்பதான்மசுத்தியாகலிற் சுத்தியென்றார். ஒன்றையும் பகுத்துக்காணாது வியாப்தியாய்நின்ற சூரிய வொளியில்வியாபகமாகியகண்ணொளியுமொன்றையும்பகுத்துக்காணாது நிற்பதுபோல் ஒன்றையும் பு

குத்தறியாதுநின்ற சிவவியாப்தியில் வியாபகமாகிய வான்மாவும் பஞ்சகிருத்தியங்களால்விளங்கும் பிரபஞ்சங்களு மொன்றையும் குத்தறியாது நிற்கவேண்டுமாகலிற் சிவந்தோயாமனின்றது போற் றோற்றமுதலைந்துடனுந்தோயாமற்சுத்தத்துறவென்றார். பஞ்சகிருத்தியங்களாவன. ஓரிந்திரியத்திற் பிரவேசித்தல்சிருட்டி, யவ்விந்திரியத்தினின் றோர்விடயத்தைப்பற்றுதல் திதி, பற்றிய விடயத்திலிரண்டறவழுந்துதல்சங்காரம், அதிலிதம்பிறத்தல்திரோபாவம், அதனைத்தெளிந்து கோடலனுக்கிரகம், இங்ஙனமோரிந்திரியத்திற் பஞ்சகிருத்தியங்களும் வரலாலைந்திந்திரியங்களினுந்தோயாமனிற்பதேயைந்தொழிலினுந் தோயாமனிற்பதெனவறிக. அறிந்துபற்றி நின்றழுந்துதலைவிடயபோத மென்றறிதலான்மரூபகம் அவற்றை நீங்கித்தன்னையருளாற்கண்டவிடமான்மதெரிசனந் தான்மலமு மாகாமற்சிவமுமாகாமற் சிவத்தோ டிரண்டறக்கலந்துநிற்பது ஆன்மசுத்தியெனக்கொள்க. (அ)

(அ-கை.) ஞானிகளிங்ஙனம் பிரவஞ்சத்திற்றோயாமனிற்பரோவெனின் மேற்கூறுகின்றார். *

௬௨ இருளின்மின்மினியின்கூட்டம்போல்வாழ்சகத்தை
யாரறிவாரந்தவறிவுதயஞ் - சூரியன்கா...... ...... ......*
ணுன்னீழலைக்கெடுத்தவுச்சியிலேபூனமறச்...........*
சொன்னாரவத்தைகளைந்தும்..........................*

(இ-ள்.) (கூ.இருளின்மின்மினியின்கூட்டம்போல்வாழ்சகத்தை யாரறிவாரந்தவறிவுதயஞ்சூரியன்காண ) எ - று, மழைக்காலத்தனையிருளின் மின்மினிப்புழுக்கூட்டம்போன் றுணவாந்தகாரத்திலான்மாக்கள் கிஞ்சிஞ்ஞம்பாதத்தோடுங்கூடிப் பொய்ம்மையாய் வாழாநின்ற இப்பிரவஞ்சத்தைஞானிகளாயினோரியாவரறிவார் வாசகத்தோடுங்கூடியிருக்கசகத்தையுமதனையறியாரென் றுநீர் கூறியதென்னையெனின் அவர்க்கந்தஞானோதயஞ் சூரியோதயம்போற் றோற்றுமாகலின் அச்சகத்தையறியார் ஆயினிந்தஞானத்தை யடியேன்பெறுமாறெங்ஙன மெனின் ( உன்னீழலைக்கெடுத்த வுச்சியிலே பூனமறச் சொன்னாரவத்தைகளைந்தும்) எ - து, காலையினுமாலையினு நீளுமுன துநிழலைக்கெடுத்தவுச்சிகாலத்தைப்போற் சகல கேவலங்களிற் செல்லும்உன்போதமடங்கியபடுவிடத்துனக்காணவக்குற்றமறவும் ஞானச்செல்வம்வரவுமேதுவாகச் சுத்தாவத்தைகளைந்தினையுஞ் சொன்

ருர்பெரியர் அவற்றைபாஞ்சொல்லக்கேட்டு நீயறிதியென்றவாறு*

ப-ம். இருளைப்போலாணவம் மின்மினிபோற் கருவிப்போ தத்தோடுங்கூடியஆன்மாக்கண்- மின்மினிமின்னியவாறே தோன்று துமறைந்துமறைந்துமின்னல்போலான் மாக்களினது மறப்பு நினைப்புகளாகலிற் கூரிருளின்மின்மினியின் கூட்டம்போல் வாழ்சகமென்றார். சூரியோதயத்திற் பூதவிருளுமின்மினியொளிவுந் தோன்றாததுபோன் ஞானோதயத்தி லாணவவிருளுங் கருவிப் போதமுந் தோற்றாதாகலின் அறிவுதயஞ்சூரியன்காணென்றார். இந்திரியங்கள்பத்தும் பஞ்சபூதங்களிடமாய் நின்று விடயங்களைநேரேயவகரித்துவிசர்க்கரிக்கப்பொருந்திய சீவன் அப்போதமிறக்க விருந்தவிடநின்மலசாக்கிரம் அவ்விந்திரியங்க ளிடமாய் விடயங்களைப் பகுத்தறியப்பட்ட ஆன்மாவி னிச்சாஞானக் கிரியைகளுக்கிடமாகிய மனம்புத்தி யாங்காரங்களின் வியாப்தியறுமிடம் நின்மலசொப்பனம் ஆன்மசைதன்னியத்திற் கதிட்டான மானசித்தவிகற்பமொடுங்கினவிடம்நின்மலசுழுத்தி அச்சைதன்னியா வாகனமான பிராணவாயுநீங்கினவிடம் நின்மலதுரியம் ஊசல்வடமற்றபோ ததற்குவீழ்ந்தவிடமாதார மானாற்போல் இங்ஙனங் கருவிப்போதமெல்லாங்கழிந்தவிடத் தான்மாவருளாதாரமாய் நின்ற சுத்தாவவத்தைநின்மலாதீதம், இக்கருவிப்போதங்கழன்ற சுத்தாவத்தையிற்சுடர்காட்டக்கண்டகண்போல் அருளாற் றன்னையறிவது நின்மலசாக்கிரம் இங்ஙனந்தன்னையறிந்தவிடத்துத்தனக்கொரு சேட்டை யற்றந்தவருளே தனக்காதாரமா யவ்வருளிற் றானசைவறநின்றவிட மவ்வருட்டெரிசனம் இங்ஙனம் அவ்வருளைத்தெரிசிப்பது நின்மலசொப்பனம் இச்சாஞானக்கிரியைதோன்றாதுநின்றவிடம் பரையிந்தப்பரையினதுநின்மலமெல்லாந் தனதிச்சாஞானக்கிரியை தோன்றாது தனதாகியெதிரீடுசிறிதுமின்றி யிப்பரைமே தானாகியிருந்தவிடம் நின்மலசுழுத்தி தானிப்பரையாகியவிடத்துக் கதிரொளிநேரேநின்ற கண்ணக்கதிரிடத் ததீதப் படுந்தருவாயில் இக்கண்ணுக் கந்தக் கதிரினதுவட்டப்பளபளப்புமாத்திரந் தோற்றுவதுபோற பரையை நீங்கிஆனந்தசத்திநேரேநின்று தான்சிவத்தி லதீதப்படுந் தருவாயி லானந்தானுபவம்பெறுவது நின்மலதுரியம் அக்கதிரினது வட்டப்பளபளப்பாகிய சோதியைக்கண்டகண் ணக்கதிராகா திருக்கச்சித்தேயுந் தன்பார்வையுமிழந்து தன்னாற்காணப்பட்ட முதலையுமிழந்து அக்கதிர்தானும்மிகவு மதீதப்பட்டாற்போல் அங்ஙன மானந்தானுபவம்பெற்றவான்மா அந்தவானந்தமாகா திருக்கச்சித்தேயும் அவ்வா

னந்தானுபவத்தை யறிந்ததானுமின்றி ஆனந்தமாய் நின்றமுதலு மின்றி அவ்வானந்தமே தானா யதீதப்பட்டவிடம் நின்மலா தீதம்மு ன்சொன்னவைந்துங் கருவிகண்முப்பத்தாறும் நீங்குதற்கேது, பி ன்சொன்னவைந்துந் தற்போதங்கெட்டுச் சிவத்தி லதீதப்படுதற்கே து-சொன்னவத்தைகளைந்துமென்றறிவையெனக்கொள்க. உச்சி யிலேசொன்னவத்தைகளைந்துமென்றமைபான் அவ்வுச்சி நேர்ப டுதற்கேதுவாகிய வவத்தைகளைந்தினையுஞ் சொல்லப்பட்டது இரு ளைப்போற்கேவல முடுக்களைப்போற்சகலமுமுமின்றி யிருளைமாத் திரங்காணுங்கண்போலவும் இருளிடத்துவேறற்காணுங்கண்போலவு ங்கேவலசகலங்களையறியுமான்மாச் சூரியவுதயத்தி லிருளு முடுவுமி ன்றிச் சூரியப்பிரகாசமாத்திரங் கண்டகண்போல் அருட்டோற்றிய காலத்து முன்றோன்றிய கேவலவிருளுங் கருவிக்கூட்டங்களுந்தோ ன்றாதவ்வருளைமாத்திரங்கண்டுகொண்டிருப்பது அருட்டெரிசனஞ் சூரியப்பிரகாசத்தைக் கண்டகண் புடைபெடர்ந்து நோக்காதச்சூ ரியப்பிரகாசத்திலேபாவமாய் நிற்பதுபோல் அருளென்றுந் தா னென்றுஞ்சிறிதுந்தோன்று தவ்வருமுள்தானாய்நிற்பது பரைதெரி சனம்-சூரியப்பிரகாசத்தை விட்டச்சூரியனது வட்டப் பளபளப் பைப்பார்த்தகண்போல் ஆன்மாப்பரையை நீங்கி யானந்தபோகம் பெறுதல் சூரியனது வட்டப்பளபளப்பைப்பார்த்த கண்டன்பார் வையுமிழந்தப்பளபளப்பாகிய காட்சியையுமிழந்தச் சூரியனுள் அ தீதப்பட்டதுபோல் ஆனந்தபோகத்தைப் பெற்றவான்மா அதனை ப்பெற்றதாமெனவும் அவ்வானந்த மென்பதுமின்றி அவ்வானந் தந்தானா யகனுளதீதப்படுவதீண்டிருவகையாய்க் கூறியவவத்தைகட் குவகைமயிதனுனுங்காண்க. (கூ)

(அ-கை.) அந்தஞானத்தை நீர்கூறிய நின்மலாவத்தையி னின் றுபெறுவதேயன்றித் துறவின்கணின்றுதவத்தைப் பண்ணிப் பெற க்கூடாதோவெனின் மேற்கூறுகின்றார். *

மெய்யாகத்தோன்றிவிடும்பொய்யைவிசாரிக்கிற்...*
பொய்பாய்ச்சுவர்ப்பாம்பாய்ப்போமன்றி - யையா ...*
தொழிலைச்செயிற்றுனுசோரனைப்போற்றோன்றிக்... *
கழலைப்பறையறைதல்காண்........................*

(இ-ள்.) (மெய்யாகத்தோன்றிவிடும்பொய்யைவிசாரிக்கிற்பொ ய்யாய்ச்சுவர்ப்பாம் பாய்ப்போமன்றி யையா தொழிலைச் செயில்)

ன-து, விசாரியாதபடியினாலேமெய்யாகத்தோன்றும் பொய்யாகிய கருவிக்கூட்டங்களினதுண்மையைநின்மலாவத்தையினின்று விசாரித்தறியிற்சுவரிலெழுதியபாம்புபோலாய் பொய்யாய்த் தோன்றுமஃதன்றிஅவற்றை யங்ஙனம்விசாரித்தறிந்துநீங்காது வைத்துக்கொண்டவை போம்படிக்கு மாணாக்கனே நீதவத்தொழில்களைச்செய்தியெனினதுதான் (தானுசோரனைப்போற்றேன்றிக் கழலப்பறையறைதல்காண்) எ-து, சடமாகியகட்டையைத்தீபத்தாற் பாராதபடியினாற்கள்வனைப்போற்றேன்றக்கண்டு வெருண்டக்கள்வனீங்கும்படிக்குப்பறைபறைதலோடொக்குமென்றவாறு. *

பஃ.சுவரிலெழுதிய பாம்பிற் றேற்றரவு மாத்திரமேயன்றி சேட்டையின்றூபதும்போற் கருவிகளைமெதிரிட்டறிந்தபோது பிரவஞ்சந் தோற்றரவுமாத்திரமேயன்றி முன்போற் சேட்டியாதாகலின் அங்ஙனமுவமைகூறினர். நின்மலாவத்தையினின் றருட்கண்ணாலெதிரிட்டுப்பார்க்கும்போது சடமாய்நீங்குங் கருவிகளை மெய்யாகக்கருதிக்கொண்டு அவைநீங்கும்படிக்குத்தவத்தொழிலைச் செய்யத்துடங்கினமையாலிங்ஙனமுவமைகூறினர். (௰)

(அ-கை.) கருவிகளினதுண்மையையறிந்தால் எல்லாம்பொய்யாய்ப்போமென்றீர். இப்பிரவஞ்சமுந்தேகமும் பரிச்சேதமின்றூப்போமோவெனின் மேற்கூறுகின்றூர். *

உலகத்தைமாயாவுடலைப்பொய்யென்று......... *
லலகைத்தேர்போலறிவதல்லால்-விலகத்............. *
துடைத்தொழித்தலாகுமோ சொப்பனத்தீச்சூழ்ந்தாற் *
கடக்கவிடுஞ்சாக்கிரம்போற்காண்................. *

(இ-ள்.) (உலகத்தைமாயாவுடலைப்பொய்யென்றூலலகைத்தேர்போலறிவதல்லால்விலகத் துடைத்தொழித்தலாகுமோ) எ-து, மாயாகாரியமாகியஇப் பிரவஞ்சத்தினையும் உடம்பினையும் பொய்யென்றறிவித்தாற்பேய்த்தேர்போற்பொய்யாகக்கண்டறிவதல்லால் தேகாதிப்பிரவஞ்சங்களைப் பரிச்சேதமாய்நீக்கித் தள்ளியொழிக்கக்கூடுமோர்நீரிங்ஙனக்கூறியவாற்றான் ஞானமுமஞ்ஞானமுங் கூடியிருக்குமோவெனின் (சொப்பனத்தீச்சூழ்ந்தாற் கடக்கவிடுஞ் சாக்கிரம்போற்காண்) எ-து, சொப்பனவத்தையி லொருவனைக்கடக்கும் வழியின்றி அக்கினிசூழ்ந்து கொண்டால் அவ்வக்கினியைக் கடக்கவிடுஞ்சாக்கிராவத்தைபோல் உன்னைச் சூழ்ந்துகொண்டு நின்றதே

காதிப்பிரவஞ்சங்களை ஞானசூரியன்வந்துதோன்றி னுனக்குப்பொய்யாய்க்காட்டிவிடுமென்றறிதியென்றவாறு. *

ப-ம். பேய்த்தேர்நீரைப்பொய்யென்றுகண்டபோதுநீர்போறறோற்றரவும்முன்னர்மெய்யென்றுகண்டவாசனையுமிருக்குஞ் சொப்பனத்தீயைக்கட்கவிட்டசாக்கிரத்தில் இத்தோற்றரவின்றி முன்கண்டவாசனை மாத்திரமிருக்கும் அங்ஙனம்போற் சுத்தாவத்தையிலிற்போர்க்குஞ் சுத்தத்தினிற்போர்க்கும் பிரவஞ்சந் தோற்றுமாகலின் அவ்விரண்டுவமையுங்கூறினார். (௰௫)

(அ-கை.) கருவிகண்முப்பத்தாறையும் போய்யாகக்கண்டு நீங்கினால் அந்தஞானந்தோன்றுமோவெனின்மேற்கூறுகின்றார் *

பொய்யென்றவார்த்தைபுரையற்றமெய்யானுன்.*
மெய்யென்பதுதேடவேண்டுமோ-மையிருளைத்......*
தீர்த்தவெயிலைத்திரும்பியசைத்திமைத்துப்... ... ...*
பார்த்தறிலென்சந்தயம்வைப்பாய்... ... ...... ......*

(இ-ள்) (பொய்யென்றவார்த்தைபுரையற்றமெய்யானுன்மெய்யென்பதுதேடவேண்டுமோ)எ-து, கருவிகளெல்லாம் பொய்யென்று நீசொன்னவார்த்தைபோற் குற்றமற்றுனதறிவிற்கவைபொய்யென்ப துண்மையாய்த் தோற்றுமெனின் மெய்யாகிய ஞானமென்பதும்வறுந்தேடவேண்டுமோ அவற்றைப்பொய்யாய்த் தோற்றுவித்தததுசானே ஞானமன்றோவாயின் இங்ஙனந் தோற்றுவித்தஞானத்தையான் கண்டுகொண்டிருக்க வேண்டாவோவெனின் (மையிருளைத்தீர்த்தவெயிலைத்திரும் பியசைத்திமைத்துப் பார்த்தறிலென்சந்தயம்வைப்பாய்) எ- து, மயக்கமாகிய ஆணவவிருளைத் தீர்த்தஞானப்பிரகாசத்தை உன்பாதத்தாலெதிரிட்டசைத்துப் பார்த்துமங்ஙனம்பாராதொழிந்து மந்தஞானப் பிரகாசத்தை யிஃதாமோவன்றோவென்று நீஎன்ஐபுறுகின்றாய் அங்ஙனம் ஐயுறாததனுளசைவறதிற்றியென்றவாறு. *

ப-ம். சூரியப் பிரகாசத்தாலிருணீங்கிஅப்பிரகாசத்தைக்கண்டகன்சறு அப்பிரகாசமோவன்றோவென்றறன் மேலையுறுதவ்வொளியிலேசோவமாய்நிற்பதுபோல் அருளிலசைவறநிற்கவேண்டுமாகலின் இங்ஙனமுவமைகூறினார். (௰௬)

(அ-கை.) தேகாதிப்பிரவஞ்சமெல்லாம் பொய்யென்றும்பிற

வித்துன்பமீதாகாதென்றும் ஞானிகளும் ஞானிகளல்லாருங்கூறுகி ன்றார். இவ்வருண்ஞானிகளை யறிவதெங்ஙனமென்ற மாணாக்கனை நோக்கி வாசகஞானிகளையும் அனுபவஞானிகளையுமறிதற் கேதுகூறுதல். ✻

வேண்டாம்பிறப்பென்றவார்த்தையினின் மெய்விடயந்✻
தீண்டாததிலேதெரியாதோ - காண்பீர்........................✻
ருடம்புமிகையொன்றிலாமையேநோன்பென்..................✻
றடங்கவடங்கினுரை.................................................✻

(இ-ள்.) (வேண்டாம்பிறப்பென்றவார்த்தையினில்) எ-து, பிரவஞ்சம்பொய்யென்றும் பிறவியாகாதென்றும் மெய்ஞ்ஞானிகளும்பொய்ஞ்ஞானிகளுங் கூறியவார்த்தையினுல் அவர்களைப்பிரித்துக்காணக்கூடாதாயினும் (உடம்புமிகையொன்றிலாமையேநோன்பென்றடங்கவடங்கினுரை மெய்விடயர் தீண்டாததிலே தெரியாதோகாண்பீர்) எ-து, உடம்பைச்சத்துருவென்று மேரர்விடயங்களினும்பற்றிலாமையே நோன்பென்றுமறிந்தத் தேகபோகங்களையானெனதென்றுசாருதும் பறந்துநின்றபோதமடங்க வுண்ணின்றபோதமுமடங்கிய மெய்ஞ்ஞானிகளை யவரதுடம்பு விடயங்களைப் பற்றாததனுற்றெரியுமாகலின் இக்குறிப்பாற்கண்டுகொள்வீ ரென்றவாறு. ✻

ப-ம், மெய்யாற்காண்பீ ரென்றமையால் வார்த்தையிலேகாணக்கூடாதாயினுமென்பதுவருவிக்கப்பட்டது. மெய்யோடிந்திரியங்களொற்றுமையா யிருத்தலின் மெய்விடயந் தீண்டாவென்று ஆகுபெயராக்கூறினுரென்றென்பதனையுடம்புமிகையென்றதனுலு நீங்கூட்டுக. (௰௬)

விரத்திவிளக்கம் - முற்றிற்று.

ஆ-அதிகாரம்-௬- இ - திருவெண்பா-௱௬௬.





உ

திருச்சிற்றம்பலம்.

எழாவது.

# துறவு.



அஃதாவது. எத்தனையுட்டுறவுடையாராயினும்புறப்பற்றோடிருப்பின்இப்பற்றோரோர்காலையறிவைமயக்குமாகலிற் புறத்துறவும் வேண்டுமென்றிதனுட்புறத்துறவிலக்கணங் கூறினாராகலின் இவ்வதிகாரத்திற்குத்துறவென்றுபெயராயிற்று. *

(அ-கை.) இளமைக்கண்ணேவனிதாதி போகங்களைத்துறந்து ஞானசாரியனாயடைந்துவீடடையவேண்டுமென்றுகூறுதல். *

தேடப்படும்பொருளைச்சிக்கனவாகப்புதைத்துக் *
கோடிக்கொருநிமிடங்கொள்ளுகினுங்-கூடாத ... ...*
வாணாளைவீண்கழிக்குமானிடனைப்போன்மயக்கம் ...*
பூணார்பொய்கண்டுதுறப்போர்........................*

(இ-ள்.)(தேடப்படும்பொருளைச்சிக்கனவாகப்புதைத்துக்கோடிக்கொருநிமிடங்கொள்ளுகினுங்கூடாத வாணாளைவீண்கழிக்கும்) எ-து, தம்மாற்றேடப்பட்ட திரவியங்களைப்பலலாஞ் சிலவழியாது பத்திரமாகச் சேமஞ்செய்து வைத்துக்கொண்டு தாமுடலைவிட்டுப் போங்காலைநிமிடகால மவ்வுடலிருக்கக்கோடிதிரவியத்துக்குப் பிறர்கையிலாயுள்வாங்கிக்கொள்ளுவோமெனினுங் கூடாதவிவ்வுடலோடுயிர்வாழ்நாளைத் தவத்திற் கழியாதவத்திற்கழிக்கும் (மானிடனைப் போன்மயக்கம் பூணார்பொய்கண்டுதுறப்போர்) எ-து, பேதைமானிடனைப்போல் இம்தகாதிப்பிரவஞ்சங்களைமெய்யாக்கண்டு இவற்றின்மயக்கம்பூணார்கள் இவற்றைப்பொய்யாக்கண்டுதுறப்போரென்றவாறு. *

ப-ம். கடவுளராயினும் அங்ஙனமாயுள்கொடுக்கவுங்கொள்ள

வுங்கூடாதாகலிற்கூடாதவென்றார். (ச)

(அ-கை.) மனைவிய திருடும்பம்வினைக்கீடாய்வந் ததனறிந்தம க்குறவன்றென்பதுமனித்தியமென்பதுமறிவித்தல். *

ஊர்க்குருவியும்வளர்த்தகுஞ்சுமொருமனையிற்... *
பாக்கனையும்பார்த்திருநம்பற்றென்னோ - மூர்க்க... *
ரரிபிரமரிந்திரர்கள்வாழ்வனித்தநம்வாழ்.............*
வொருபொருளாமோவென்றொழிவாரோ......... ... ...*

(இ-ள்.) (ஊர்க்குருவியும்வளர்த்தகுஞ்சுமொருமனையிற்பாக்க னையும்பார்த்திருநம்பற்றென்னோமூர்க்கர்)எ-து, ஓர்மனையில்வாழா நின்றவூர்க்குருவியும் அதுவளர்த்தகுஞ்சுகளும் அம்மனையிற்பூனை யும் அப்பூனையினது குட்டிகளும் இளமையினல்வினைக் கீடாய்த் த ம்முளுறவாய்க் கூடியிருப்பதையும் முதிர்ந்தபோது தீவினைக்கீடா யுறவாயிருந்த தாமேதம்முட்பகையாய்ப் பிரிந்து போவதையும் அ ம்மனையுளிருந்து நாம்பார்த்திருந்து மங்ஙனம்வினைக்கீடாய் வருமனை விமக்கண்முதலிய இப்பிரவஞ்சத்தினைத்துறவாதிதன் மேன்மன துபற்றிருத்தலென்னையோவெனில் - ஆயினவற்றைப் பார்த்திருந்து மெல்லொருமில்வாழ்க்கையோடுமிருக்கவில்லையோ நீ யிங்ஙனங் கூறியதென்னையெனின் அம்மனைவிமக்கண்முதலிய இப்பிரவஞ்சம் வினைக்கீடாய்வந்ததென்றறியாதப்பிரவஞ்சத்தோடுங் கூடிவாழ்பவ ர்மூர்க்கர் (அரிபிரமரிந்திரர்கள் வாழ்வனித்தநம்வாழ்வொருபொ ருளாமோவென்றொழிவாரோ) எ - று. மப்பிரவஞ்சமிருவினைக்கீடாய் வந்ததென்றறிந்த வுத்தமராயினோ ரியாவர்க்குமேலாய அரிபிரமரிந் திரர்முதலிய தேவர்கள்வாழ்வுமனித்தியமென்று வேதாகமங்கள் கூ றுதலானமதற்பவாழ்வேதோர் பொருளோவென்று கருதி அப்பிர வஞ்சத்தைத் துறவாதொழிவரோவென்றவாறு. *

க-து. ஒருவன் நல்வினையனுபவிக்குங் காலத்துத் தாய்தந்தை மனைவிமக்கள் சுற்றம் நட்பினர்முதலியோருறவாயிருந்திதஞ்செய் வார் அவன்தீவினை யனுபவிக்குங் காலத் தங்ஙனமுறவா யிருந்தவர் தாமேபகையாய் அகிதஞ்செய்வாராகலின் இவரிருவினைக் கீடாய்வந் தவென்றறிந்து துறக்கும்படிக்கவைகளையுவமைகூறினார். (ரு)

(அ-கை.) இங்ஙனமெல்லாவற்றையுந் துறந்த வரியாவரெனின் மேற்கூறுகின்றார். *

பட்டினத்துப்பிள்ளையினைப்பத்திரகிரியைப்பரவி...*
விட்டுவிடமாட்டார்வெறுவீடர் - வெட்ட...... ......*
வெறுவெலும்பைநாய்கறண்டவேந்தர்வரநாய்பார்த்...*
துறுமுவதைக்காட்டுவோமோ................ .........*

(இ-ள்.) (பட்டினத்துப்பிள்ளையினைப்பத்திரகிரியைப்பரவிவி ட்டுவிடமாட்டார்வெறுவீடர்) எ-து, அளவற்ற செல்வராயிருந்தும் அச்செல்வங்களெல்லாந் துரிசறத்துறந்த பட்டினத்துப் பிள்ளைநா யனாரையும் பத்திரகிரிநாயனாரையுந் தோத்திரம்பண்ணி மனைவியா தியபற்றுக்களைவிட்டுத் துறக்கமாட்டார்கண் மிகுந்த மிடியராயிரு ந்தும்- ஆயின்மனைவிமக்கண் முதலாயினாரை யாம்விடுத்துத் துறந் தோமேல அவரையயலார்கைக்கொண்டுபோகாமோ வெனில் (வெட் டவெறுவெலும்பைநாய்கறண்டவேந்தர்வரநாய்பார்த் துறுமுவதை க்காட்டுவோமோ) எ - து, ஊன்சிறிது மின்றிய வெள்ளெலும்பை ஓர்நாய் தனதுபற்கொண்டுகறண்ட அந்நாய்முன்னரவாய வெதிர்வரவ ந்நாடவ்வெலும்பை யவர்கவர்ந்து கொள்வரென்று கருதி அவரைப் பார்த்துறுமுவதைப்போலிபாமுமங்காட்டுவோமோவென்றவாறு. *

ப-ம். அளகேசனைப்போன்ற செல்வத்தினையும் அருந்ததிபோ ன்றகற்பினையுடையமனைவியையுங் காரணைப்பாலுங் கட்டழகினை யுத்துறந்தோர்பட்டினத்துப்பிள்ளைநாயனாரும்பத்திரகிரி நாயனாரு மாகலின் அவரைத்துறந்தோரென் றெடுத்துக்காட்டி யம்மூவகையு ளொன்றேனுமில்லாருமவரைப்போற்றுறக்க மாட்டாமையான்விட் டுவிடமாட்டார்வெறுவீடரென்றார். எலும்புகறண்டும் நாய்க்குத்த னதெயிற்றிலதுரைததுதன்பந்தெரிபா தின்பமாய்த் தோற்றல்போ ல்வனிதாதிபோகங்ளாகிய துன்பத்தை யாணவமின்பம்போன் மா னுபடுத்திக்காட்டவின்பமாய்க்கருதல் ன்வெறுவெலும்பை நாய்கற ண்டவென்றார். தாங்பற்றிய வெலும்பை யனையர் கவர்வரெனக்கரு தியவரைப்பார்த் துறுமுவதுபோற் றாம்பற்றிய குடும்பத்தைப் பி றர் கவர்வரெனக்கருதிக்கூறலா னுறுமுவதைக் காட்டுவோமோ வெ ன்றார். (௬)

(அ-கை.) நீரிங்ஙனங்கூறியவாறே துறந்தோர்பிறப்பு நீங்குவ ரோவெனின் மேற்கூறுகின்றார். *

நாடுநகர்விடுடைடாடாய்தந்தைநட்புமக்கண்... *
மாடுகுலம்பொன்னுடம்பின்வாதனைகள் - கூடத்... ...*

தொடுத்தவலைக்கண்ணித்துடக்கிதனையிப்போ........*
விடப்பெறுவாரோன்பிறப்பார்மேல்.................*

(இ-ள்.) (நாடுநகர்வீடுடையாடாப்தந்தைநட்புமக்கண் மாடுகுலம்பொன்னுடம்பின்வாதனை - ள்) எ - து, நாடுநகரும், வீடுமனைவியும், தாயுந்தந்தையும், நட்புமக்களும், மாடுஞ்சாதியும், திரவியமுமிவைமுதலிய வுடம்புவாதனைகளுங் (கூடத்தொடுத்தவலைக்கண்ணித்துடக்கிதனையிப்போ விடப்பெறுவாரோன்பிறப்பார்மேல்) எ-து, நாமகப்படப்பிணித்த வலையுங்கண்ணியுமாகிய தொந்தனை யென்றறிந்தித் தொந்தனையையிப்பொது விடப்பெறுவார் இனிமேலன் பிறப்பாரொன்றவாறு. *

ப - ம். உடம்பின்வாதனைகளென் றமைபான் ஆடையாபரணம் ஆனைகுதிரை சவிலகசிவிகைசாய்மனைமுதலியவுங்கொள்க. இங்ஙனங்கூறியவெனதென்னும் போகப்பற்றைநீத்துத் தவஞ்செய்வோர்க்கியானென்னுந்தேகப்பற்றுமறும் இத்தேகப்பற்றறவே யிவற்றையானெனதென்றுபுறத்துநின்ற போதமறும் இப்போத மறவேயுண்ணின்றபோத மசுத்தவாசனை பண்ணாது சுத்தவாசனை பண்ணும் இவ்வாசனையான்ஞானங்கிடைக்கும் இஞ்ஞானத்தால் வீடுளவாமாகலின் ஏன்பிறப்பார்மேலென்றார். (௪)

(அ-கை.) நீர்கூறியமனையாதி பற்றுக்களையெல்லாந்துறந்து பொன்னைமாத்திரம்பிடித்துக்கொண்டு தவஞ்செய்யலாகாதோ வெனின்மேற்கூறுகின்றார், *

தின்னிற்றிமிரில்விடம்பிடித்துத்தீர்ந்துவிடும்.....*
பொன்னை நினைக்கப்பொருதுகாண் - பின்னை.........*
மருந்தாலுமந்திரத்தினாலுந்தவிராப்.................*
பெரும்பாவம்பெண்ணிற்பெரிது.........................*

(இ-ள்.) (தின்னிற்றிமிரில்விடம்பிடித்துத்தீர்ந்துவிடும்பொன்னைநினைக்கப்பொருதுகாண்பின்னைமருந்தாலு மந்திரத்தினாலுந் தவிராப்பெரும்பாவம்) எ - து, கோபாதிகளாகிய திமிரினால் விஷமுண்டால் அவ்விஷஞ் சிறிதுபோதுதாழ்ந்து தலைமீக்கொண்டு பின்னர் மணிமந்திர அவுஷிதங்களாற் றீர்ந்துபோம் பொன்னைக் கரத்தாலும் பற்றாதுவாக்கானுங்கூறாது மனத்தானினைக்கவே அப்பொன்னாசையாகியவிஷம்அரைக்கண மேனுந்தாழாது அந்நினைவினும் விரைந்துதலைமீக்கொண்டு பின்னர் மணியானும் மருந்தானு மந்திர

த்தானுந் தீராதபெரும்பாவமாகலின் (பெண்ணிற்பெரிது) எ-து நீவிடுகின்றேனென்கிற பெண்ணாசை விஷத்தைப்பற்ற இப்பொன்னாசைமிகவும்பெரிது இதனைமனத்தானுநினையாது விடம்வண்டுமென்றவாறு. *

ப-ம். துறந்துளோர்பொன்பிடித்தால் அதனைப் பாதுகாத்தற்கிடம்பிடிக்கவேண்டும் அஃதன்றியப் பொன்னை வளர்த்தற் கவாத்தோன்றி அபக்குவருக்கு ஞானசாத்திரங்களைக் கூறிப்பொன்கொடுத்தார்ம்மேல்விழைவுங் கொடாதார்மேல் வெகுளியுந்தோன்றும் இவைதோன்றவே துறவான்வருந்தவப் பயனுமின்றி முன்பெண்ணோடுங்கூடிச்செய்த வில்லறப்பயனுமின்றிக் கேடுவருமாகலிற் பெரும்பாவம்பெண்ணிற்பெரிதென்றார். (ரு)

(அ-கை.) இங்ஙனந் தேகாதிப்பிரவஞ்சமெல்லாம்பொய்யென்று நீர்சொல்லக்கேட்டதே யன்றி மற்றியாவருஞ் சொல்லக்கேட்டிலேனென்றமாணாக்கனைநோக்கிமேற்கூறுகின்றார். *

செல்வமிளமையுடம்புபேய்த்தேரொன்று...... ...*
சொல்லுவதென்காணோசுட்டதுபோ - யொல்லை...*
விடுவோர்பிறப்பிறப்பின்மீளார்கண்மீண்டாற்.......*
றொடும்மாசிவனைத்தொடா.................. .....*

(இ-ள்.) (செல்வமிளமையுடம்புபேய்த் தேரொன்று சொல்லுவதென்காணோ) எ-து, செல்வமுமிளமையுமுடம்பும் இவைமுதலியபிரவஞ்சங்களுங் கானற்சலம்போலப் பொய்யென்று யாங்கூறும்வண்ணமென்னை அவைகெட்போற்றோன்றி யழிவனவற்றைத்தான்சாட்சிப்பிரமாணமாக் காணீர் சொல்லோவாயின் எல்லோருஞ்ஞானத்தாற்பிறப்பறுமென்றுகூற நீர் துறவாற்பிறப்பறுமென்று கூறியதென்னையெனின் (சுட்டதுபோ யொல்லைவிடுவோர் பிறப்பிறப்பின்மீளார்கண்மீண்டாற்றொடும்மாசிவனைத்தொடா) எ-து, தேகாதிப்பிரவஞ்சங்களை யென்னதியா னென்று சுட்டியறியும் இச்சுட்டுப்போகப்போய்ப் பிரவஞ்சத்தைச்சீக்கிரத்தில் விட்டுத் துறப்போர்பிறப்பிறப்பின்மீண்டுவாரார்கண் ஞானக்குறையினான் மீண்டார்களேனுமுற்றுறந்துதவம்பண்ணியவாசனையால் அப்பற்றுக்களைக்கடந்துநிற்பரேயன்றி அவரைப்பற்றுத்தீண்டுமோ தீண்டாதாயினும்பிறப்பின்மீண்டோரைத் தீண்டாதோவெனின் அவர்சிவனைப்பாலுமொன்றேனும் பற்றற்றுடையாராகலிற் றீண்டாதென்றவாறு. *

ப-ம். அனித்தியவிவேகந் தோன்றியவக்கணமே தாழ்த்திரா தெல்லாவற்றையும் விடவேண்டுமாகலி னெல்லவிடுவோரென்றார். மூற்பிறப்பிலவாவுடையார்க் கிப்பிறப்பினுமது தொடர்தல்போன் முற்பிறப்பிலவாவறு தியுடையார்க்கிப்பிறப்பினு மவ்வவாவறுதியே தொற்றுமாகலிற்சிவனைத்தொடாவென்றார். (ங)

(அ-கை.) இந்தவவாவறுதியினால்வரப்பட்ட வின்பமென்னை யென்றமாணாக்கனை நோக்கிமேற்கூறுகின்றார். *

ஆசையினாலற்பசுகமாயழிந்தாற்பேரின்ப......*
மாசையின்போக்கென்றறியலாகாதோ-வாசை ......*
நளிகைக்கழுக்குவந்தநாசமெனநாடித்............*
தெளியப்போமற்றிவையைந்தும்...................*

(இ-ள்.) (ஆசையினாலற்பசுகமாய்ழிந்தாற்பேரின்ப மாசையின்போக்கென்றறியலாகாதோ) எ-து, ஆசையினாலேபோதஞ்சகமு கமாய்ச்சென்று விடயங்களிலழுந்தத் தமக்கவற்று ளற்பமாய்ச்சுகந்தோன்றி யழியுமானால் அவ்வாசைநாசமே சிவத்திற்றோன்றும். பேரின்பம்பெறுதற் கேதுவென் றறியலாகாதோ வாயினவ்வாசை போமாறெங்ஙனமெனின் (ஆசைநளிகைக்கழுக்குவந்த நாசமென நாடித்தெளியப்போமற்றிவையைந்தும்) எ-து, அவ்வாசை போதத்தின்கண்ணேறுவது நெய்பாதிவார்த்தடைக்கு மூங்கிற்குழாய்க்கு அழுக்குவந்தநாசம்போலத் தமக்குநாசமாமென விசாரித்தறிய அவ்வாசையின் போதமாய் விடயங்களிற்பிறிந்து செல்லும் இவ்வைந்துவாவுநீங்குமென்றவாறு. *

ப-ம். ஆன்மா வாசையினால் விடயத்திலழுந்திச் சிற்றின்பம்பெறுதல்போல் அவ்வாசைநாசத்தாற்சிவத்தி லழுந்திப்பேரின்பம்பெறுமாகலிற்பேரின்பமாசையின் போக்கென் றறிய லாகாதோ வென்றார். தேன்நெய்யெண்ணெயாதிவார்க்குமூங்கிற்குழாய்ச்சிறுதுவாரத்தின்கண் மரவட்டைமுதலியபூச்சிநுழைந்தால் அதிற்சுழல்வதேயன்றி யழுக்கினான்மீளமாட்டாதாகலின் முன்போற்றேனாதிவார்த்து அங்கிதரியாததனைப் புறம்பாய்விடப்படும் அதுபோல்ஆசை போதத்திலேமிகுந்தபோதெவ்விதத்தானுமீளாததனால் அப்போதத்தில் வீட்டின்பத்திற்கேதுவாய துறவுமெய்யுணர்வு முதலியநற்குணங்களேறுது இக்குணங்களேறுமையின் முன்போற்பிறவித்துன்பத்தையேபெறுமாகலின் அங்ஙனமுவமைகூறினார். நளிகையின்

மாவட்டையாதிருழையும்போது இன்பம்போலெளிதினுழைந்து மீளமாட்டாதரும்போற் போகத்தின் கண்ணுசையேறும்போது இன்பம்போற்றோன்றிவெளிதிலேறி மீளாமைக்குங்கொள்க. நளிசையென்பதுழைங்கிற்குழாய்அதுநிசைச்சொல். (எ)

(அ-கை.) இனித்துறவினதுமுடிவுந் துறந்துசெய்யுந் தவத்தினது முடிவும் அடிப்பெற்கநளிச்செய்யவேண்டுமென்ற மாணாக்கனை நோக்கிமேற்கூறுகின்றார். *

உதையந்தொழப்போவார்க்குள்ளும்புறம்பும் ... *
புதைபவொளிவீசுமாபோலே-யதிமோகி...... ......*
தீக்காட்டிலேகொடுக்கச்சென்றவாகண்டக்காற்... ...*
றுக்காததன்றேதவம்................. ...........*

(இ-ள்.) (உதையந்தொழப்போவார்க்குள்ளும்புறம்பும் புதையவொளிவீசுமாபோலே) எ-து, சூரியவுதயந்தொழச்செல்வோர்க்கு உள்ளும்புறம்பும் இருண்மறையவொளிவீசுமாறுபோலே மனைசார்முதலிய பற்றுக்களெல்லாவற்றையும்விட்டு அவற்றின்மேலுள்ள நெருமவாவினையுமறுத்துக் கண்ட விடயங்கண்மேற் சென்று பற்றுமிந்திரியங்களையுமடக்கி யுள்ளும்புறம்புமாசையாகிய விருளறநிராசையாகியவொளிவீசநிற்றலே துறவினது முடிவு (அதிமோகி தீக்காட்டிலேகொடுக்கச் சென்றவாகண்டக்காற் றுக்காததன்றேதவம்) எ-து, தனதுபுருடன்மேலதிமோகியாயிருந்துளா ளவன்மரித்தகாலையவனுக்குத் தன்னைக்கொடுக்கச் சுடுகாட்டிற்சென்றவாறுகண்டால் அவளைப்போலுந்தற்போதத்தைச் சிவனுக் கூணுக்கொடுத்துத்தாமொன்றேநிந் தாக்கற்றிருத்தலன்றோ தவத்தினது முடிவென்றவாறு. *

க-ரு. உதயந்தொழுவார்க்குக் கண்விழித்தபோது மிமைத்தபோதுமொளிவீசுதல்போலுந் துறந்தோர்க்குப் பொறிகளால்விடயங்களைக் கண்டபோதுங் காணுதிருந்தபோதும் உள்ளும் புறம்புநிராசையோடிருக்கவேண்டுமாகலின் அங்ஙனமுவமைகூறினர். தவமென்றமையாற்றுறவுவருவிக்கப்பட்டது. (அ)

(அ-கை.) இங்ஙனநிராசையோடிருந்தோர்க்குத்தற் போதமறுமோவென்றமாணாக்கனைநோக்கிமேற்கூறுகின்றார். *

உவரி மைமணிபாட்டுகிறுமோசையொழிந்தாற்போல
வரமதுபோனிற்கவரிதுகணுமாய்.......... ... ......*

வளர்ந்தவசத்தையெலாமாளமரக்காலா...... .........*
லளந்தெறிந்துபோட்டதுபோலாம்......... .........*

(இ-ள்,) (ஊமைமணியாட்டுகினுமோசையொழிந்தாற்போல வாம்)எ-து, நாவிழந்தமணியைப்பிடித்தசைப்பினும் ஓசையொழிந்துநின்றாற்போலப் பஞ்சவிடயங்களும் வலியவந்தும்பினும் அதிதீவிரபக்குவர்க்குப் போதங்கலங்காதுநிராசையுண்டாம் (அதுபோனிற்கவரிது காணுமாய் வளர்ந்தவசத்தையெலா மாளமரக்காலாலளந் தெறிந்துபோட்டதுபோலாம்) எ-து, அவரங்ஙனநிற்குமது போனிற்கமற்றையபக்குவர்க்கு மிகவுமரிதுசான் நாளுவுபார்த்தானுமங்ஙனநிற்கவருமயினுசையான்முன்னர்ப்போத மேலிட்டுமேன்மேல்வளர்ந்த வதனது சேட்டையெல்லாமிறந்துபோம்படியறிவாகியமரக்காலாலிவ்வளவென்றளந்து புறம்பாயெறிந்து போட்டதுபோலாமென்றவாறு, *

க-து. நிராசையோடிருப்போனைக் கருவிகள்சேட்டியாது நீங்கும் அக்கருவிகணீங்கவேதிருவருட்டோன்றும் அத்திருவருளாற்போதத்தையீதென்றளவிட்டறிந் தொழிக்கலாமாகலின் இங்ஙன மூவமைகூறினார். (கூ)

(அ-கை.) தனுகரணபுவனபோகங்களிற் சிறிதேனும்பற்றின்றிநிற்றற்குபாயமெங்ஙனமென்ற மாணாக்கனை நோக்கி மேற்கூறுகின்றார். *

தனுவாதிநான்கினுக்குஞ்சார்வழிந்துசற்று .. ......*
நினையாதிலைப்பாறிநின்றான்-மனையாமோ..........*
காந்தக்கடத்துசிகாற்றற்றதிபமென ...............*
வாந்தத்துவங்களயலாம்...... ......... .......... ..*

(இ-ள்.)(தனுவாதிநான்கினுக்குஞ்சார்வழிந்துசற்று நினையாதிளைப்பாறிநின்றான் மனையாமோ) எ-து, போகமுநானல்ல புவனமுநானல்ல தனுவுநானல்ல கரணமுநானல்லவென்ற உள்ளபடியறிந்துநிட்டிசேர்ந்தததனுவாதி நான்கினிடத்திரி யானெனதென்று சார்ந்துநிற்றம்பாதச்சார்வுகெட்டவர்ற்றை மீட்டுச் சற்றுப்பற்றுதருளிலிளைப்பாறியசைவறநின்றால் மனையாகியபுவனத்திடத்தும் அம்மனையைப் பற்றியிருந்த வனிதாதிபோகத்திடத்தும் முன்போற்பற்றுண்டாமோ-வாயின் புவனபோகங்களிற்பற்றின்றிநிற்பினுந் தனுகரணங்களிற்பற்றின்றி நிற்பதெங்ஙனமெனின் ( காந்தக்கடத்

துசிகாற்றற்றதீபமென வார்த்தத்துவங்களயலாம்) எ-து, காந்தக்க டத்திற் கெதிர்முகமாய போதுபற்றிய ஊசியதனுட்கிடந்தபோது பற்று திருந்த அந்தக்காந்தக்கடத்தூசிபோலுங் காற்றிலிருந்தபோ திசைந்ததீபங்காற்றின்றிப்போதசையாதிருந்தகாற்றற்ற தீபம்போ லும் அத்தனுகரணங்களைத் தனக்கன்னியமாய்க் கண்டுநீங்கி நிற்பி லவற்றோடுந்தாக்கற்று நிற்பதுண்டாம் அவற்றோடுந் தாக்கற்று நி ற்கவேமற்றையதத்துவங்களுமயலாநீங்குமென்றவாறு. *

ப-ம். தனுவாதிகளிற்கறங்குபோற்சுழன்றதன்மை திருவருட் கணின்றபோது இன்மையாலிஃளப்பாறிய்யென்றார். காந்தக்கடத்தி ற்கெதிர்முகமாயபோதுபற்றியவூசி யதனுட்கிடந்தபோது பற்று திருந்தது போற்சகமுகமாய்நின்று தேகத்தை யானென்றுபற்றிய போதமகமுகமாய்நின்று திருவருளை யடைந்தபோதத் தேகத்தை யானென்றுபற்றுதாகலிற் காந்தக்கடத்தூசியென்றும், அப்புவன போகதனுக்களைப்போதம்பற்றாது நின்றபோதுகரணந் தற்சே ட்டையற்றடங்கும் அப்போது போதந்திருவருளோடுங்கூடிகாற்ற ற்றதீபம்போலாகிமீட்டும் அக்கரணத்தோடுகூடாதாகலிற்காற்றற் றதீபமென்றும், கரணங்களறவே அக்கரணங்களினதுசேட்டைக்கே துவாயகலாதிகளும் அக்கலாதிகளைப்பிரேரகம்பண்ணுஞ் சுத்ததத் துவங்களுநீங்குமாகலிற் றத்துவங்களயலாமென்றுங்கூறினர். (ய)

(அ-கை.) உத்தமராயினோர்கற்புடையமனைவியைத் துறப்பு ரோவென்றமாணாக்கனை நோக்கிமேற்கூறுகின்றார். *

நாயலகைநெய்விரும்பிநக்குவதுநஞ்சிட்ட... ...*
பாயசமுமெய்ப்பரிசப்பாவையிடச்சாயனீர்...... ...*
வேட்கையசுணமிபம்விட்டின்மீன்வண்டிவையின் ... *
சாட்சியைக்கண்டார்துறவாதார்............ ... .......*

(இ-ள்.) (நாயலகைநெய்விரும்பிநக்குவதுநஞ்சிட்டபாயசமு மெய்ப்பரிசப்பாவையிடச்சாயனீர் வேட்கை) எ-து, நாயானதுவாள் வாயிற்றடவியநெய்யைவிரும்பி அவ்வாள்வாயைநக்குவது போலும் விஷங்கலந்தபாயசத்தைபொருவன்சுவையெனவிரும்புவதுபோலு மாகும் பாவையாதுமெய்ப்பரிசத்தையின்பமாய் விரும்புதலாகலி னும்பொய்யாகிய அப்பாவையாது மெய்ப்பரிசத்தை மெய்யாக்க ண்டனுபவிக்கவிழைதன்றியவும் பொய்யாகியகானனீரை மெய்யா கக்கண்டு தாகத்திற்குண்ணவிரும்புதல்போலாமாகலினும் (அசுண

யிபம்விட்டின்மீன்வண்டிவையின் சாட்சியைக்கண்டார் துறவாதார்.) எ - து. அசுணப்புள்சத்தத்தாலும் யானைபரிசத்தாலும் விட்டிற்பூச்சியுருவத்தாலு மீனிரதத்தாலும் வண்டுகந்தத்தாலுங் கெடுமென இவைகளைச்சாட்சியாய்க்கண்டுறலாலும் இவ்வைந்துவிடயங்களுமூளவாகிய அப்பாவையைத்துறவாதாரியாவரொன்றவாறு. *

க-து,வாள்வாயினெய்யைநக்கினநாய்க்கும்நஞ்சிட்டபாயசமுண்டோனுக்கும்முன்னரனுவளவின்பம்போற்றேன்றிப் பின்னரதனுன்மலையளவுதுன்பம் வருவதுபோல் அனுபவிக்கும்போது சிறிதின்பம் போற்றேன்றிப் பின் துன்பம் வருமென்பதும் பொய்யாய்த்தோன்றுங்கானனீரை மெய்யாய்க்கருதியுண்ணத் தொடங்கினேனைப்போற்பொய்யாய்த்தோன்றும்பாவையரை மெய்யாய்க்கருதியனுபவிக்கத்தொடங்குவதென்பதும் 'ஓரோர் விடயத்தை விழைந்தோவ்வொன்றுகெடுமெனிலைந்து விடயங்களுமுளவாகிய பாவையரைவிழைந்தால் அவரால்வருங்கேட்டிற்களவின்றெனபதுமிதனுற்காணக.

(அ- கை.) எல்லோரு மனைவியாதிய குடும்பத்தோடிருந்து இன்பங்களையனுபவித்துக்கொண்டு பூரிப்போடுமிருக்க அக்குடும்பத்தைநீர் துன்பமென்றீரதென்னையெனின் மேற்கூறுகின்றார். *

இடும்பைக்கேகொள்கலமாயேழ்நரகுக்கோடாங்.......*
குடும்பத்தைக்குற்றமறைக்கி - னடுங்காரோ... ... ...*
வைவர்க்கொருவனறுதொழிலைச்செய்தலான்....... ...*
மெய்யைப்பொய்யாக்கிவிடும்........................*

(இ-ள்.) (இடும்பைக்கேகொள்கலமாயேழ்நரகுக்கோடாங் குடும்பத்தைக்குற்றமறைக்கினடுங்காரோ) எ- து, இம்மைக்கண்ணே துன்பங்களையெல்லாந் தாமனுபவித்தற்கேற்றுக்கொள்வதாயகப்பலாய் மறுமைக்கண்ணே யெழுவகைப்பிறவியாகிய எழுவகை நரகத்தையுமுண்டாக்குங் கனதையினையுடைய மனைசுதர்முதலிய குடும்பத்தையிங்ஙனமிகபரங்களினுந் துக்கத்தைத்தருவதென் றறிய வொட்டாதாணவமாகியகுற்றம் அவரைமறைத்தலால் இவ்வாணவக் குற்றநீங்கினேர் குடும்பக்குழாத்தைக்கண்டாலு முளம்வெருவி நடுக்கமுறார்கொலோ-வாயினீர்மெய்யென்றுகூறிய சிவமொருவர்க்குந்தோன்றுதிருப்பானேனென்னில் (ஐவர்க்கொருவனறு தொழிலைச்செய்தலான் மெய்யைப்பொய்யாக்கிவிடும்) எ - து, ஐந்திந்திரியங்கட்கு

மோர்முதல்வனுகியவான்மா அவ்விந்திரியங்களா லனுபவிக்கும் விடயசுகத்தின்பொருட்டு உழவுமுதலிய அறுவகைத் தொழில்களின் முயற்சிப்படலான் இம்முயற்சி அச்சிவத்தைத் தெரிய வொட்டாது பொய்யாக்கிவிடும் இதனை நீயறிதியென்றவாறு. *

ப-ம். குடும்பத்தாலிம்மைக்கட் டேகதுக்க மனோ துக்கங்களி னடைய்ருதுவருதலின் இடும்பைக்கேகொள்கலமா யென்றும் இக்குடும்பவாசனையான்மறுமைக்கட் பிறவிக டொன்று தொட்டுவருமாகலின் எழ்நரகுக் கிடாமென்றுங்கூறினர். அறுதொழிலைச் செய்தலான்மெய்யைப்பொய்யாக்கிவிடுமெனவே குடும்பத்தின் பொருட்டுச் செய்யும் அறுவகைத்தொழில்களின் முயற்சியைவிட்டுச் சிவயோக முயற்சியிற்றுடங்கின்மெய்ப்பொருள்தோற்றுமென்றதாயிற்று. அறுவகைத்தொழில்களாவன - உழவு தொழவு வாணிபம் எழுத்து சிற்பம் பரதம் இவையாறுமெனக்கொள்க. (௰௨)

(அ - கை,) உத்தமபக்குவராயினோர் குடும்பத்தோடுங் கூடியிராரென்றின்னுங்கூறுகின்றார். *

குரங்குத்துனிசிக்குடும்பக்குழாமும்...... .........*
பெருங்குப்பைபிற்கரடிப்பெண்டும்-பொருந்துவரோ*
காலனுந்தீயுங்கட லுமிருங்கல்லுமாய்...................*
மேலுநரகாய்விடும்....................................*

(இ-ள்.) (குரங்குத்துனிசிக்குடும்பக்குழாமும்பெருங்குப்பையிற்கரடிப்பெண்டும்பொருந்துவரோ) எ-து; ஒருகுரங்கைப்பலகுரங்குவந்துசேட்டித்தல்போலத் தாய்தந்தைகதர்சுற்ற முதலியோர் தம்மைவந்துயாதிக்குங் குடும்பக்கூட்டத்தையும் அக்குடும்பக்கூட்டமாகிய பெரியமலக்குப்பைக்கட் கரடிபோலும்பற்றப்பட்ட பெண்டிராதுகூட்டரவினையும் பொருந்தி யிருப்பரோ உத்தமராயினோர் ஆயினெல்லாரும் அவரோடுங்கூடி யிருக்கவில்லையோ இவ்வொன்னையங்ஙனமிராதுபோவதெனின் (காலனுந் தீயுங் கடலு மிருங்கல்லுமாய் மேலுநரகாய்விடும்) எ - து, அக்குடும்பக் கூட்டங் காலனைப் போலுந் தீயைப்போலுங் கடலைப்போலும் பெரியமலையைப்போலும் இம்மைக்கண்ணே துன்பந்தருவதாய் மறுமைக்கண்ணும் அதனோடுங்கூடியிருந்தவாதனையாற் பிறப்பாகியநரகத்தையுந் தருவதாய்விடுமெனவறிந்து அதனோடுங்கூடியிராரென்றவாறு, *

ப-ம், சோறுகூறைமுதலியன கொடுக்கும் போதுங் கொடாது

ந்போதும் வரும்பிணக்கானும் அவற்றிற்கேதுவாய் திரவியந்தேடுதலானும அதனைப் பாதுகாத்தலானும் அவர்க்கு வியாதியாதி துன்பம்அபிமானபங்கம்வந்தகாலையினும் அனையர் கலகமற்பகாலம்வந்தகாலையினும் அவரிறந்தகாலையினும் இவைமுதலியவற்றால் அக்குடும்பத்தாற்பிறகதுக்கம் மனோதுக்கங்களிடையறாது வருதலிற்குரங்குத்துணிசிக்குடும்பக்குழா மென்றார். இத்துன்பக் குழுவிற் காடிபோலுங் குணத்தானுஞ்செய்கையானும் இழிவாய பெண்டிரைக்கூடியவரோவென்பதனைப் பெருங்குப்பையிற் காடிப்பெண்டும் பொருந்துவரோவென்றுகுறிப்பாற் கூறினார், காலனுயிர்களைப் பாசத்தாற்பிணித்துக் கொடுசென்று நிரயத்துள் வீழ்த்திவருத்துதல்போற்றுறந்துசெல்கின்றேமென்றிரண்டடிச்செல்வோனைமனைசுதர்முதலியோர்காசரணங்களைப்பற்றிக்கொண்டோவிட்டழுதுஅவனுள்ளமிளகப்பண்ணி மீட்டுங்கொடுவந்துகுடும்ப மாகிய துன்பத்துளகப்படுத்திவருத்துதலிற் காலனுமென்று, மொருவனைத் தீச்சூழ்ந்துகொண்டதுபோற்சூழ்ந்துகோடலிற்றீயென்றும், நடுக்கடலில்வீழ்ந்தோனுக்குக் கரைகண்டேறக் கூடாததுபோல்அக்குடும்பசாகரத்தில்வீழ்ந்தோனுக்குக்கரைகண்டேறக்கூடாதாகலிற் கடலென்று, மலையிருத்திக்கொண்டதுபோற் குடும்பபாரந் தன்றலைச் சுமையாயிருத்தலிற் கல்லென்று, பிறக்கும்போதுஉயிர்க்கெந்த வாசனை யிருந்ததந்தவாசனையோடுஞ் சென்றுபிறத்தலின் மேலுநரகா யென்றுங்கூறினார். *

(அ-கை.) இங்ஙனந்துன்ப மென்றறிந்து துறந்துசெல்வோர் தம்மைநம்பியிருந்த குடும்பத்தைப் பாதுகாத்தற்குச் சகோதரர் முதலாயினோருள் ஒருவரைத்துணையாய்வைத்துப் பின்றுறந்து சேறலாகாதோவெனின்மேற்கூறுகின்றார். *

கன்னனைப்போற்றன்னையறிவனோகாக்கையுடன்... *
மன்னுகுயில்போனவாறுபோ - லன்னியமாய்ப்... ...*
பேசாதுபோனதுறவிபிறப்பறுப்பார்க்............ *
காசானுமென்றேயறி........................ ...........*

(இ-ள்,) (கன்னனைப்போற்றன்னையறிவனோகாக்கையுடன்மன்னுகுயில்போனவாறுபோலன்னியமாய்ப்பேசாதுபோனதுறவி )என-து, யானின்னசாதியின்னகுலந்தாய்தந்தையின்னாரொன்றுதனதுகுலகுடும்பங்களையறியாத கன்னனைப்போலும் உத்தமபக்குவன் யானி

ன்னசாதி யின்னகுலம் இன்னார்தாய்தந்தையென்று தனது குலக்கு டும்பங்களைப்பகுத்தறிவனே இங்ஙனமொன்றையும் பகுத்தறியாது காக்கையுடன் பருவம்வருமளவுந் தனதினம்போற் கூடிச்சென்று பருவம்வந்தகாலை அதற்கன்னியமாய்ப் பேசாதுசென்ற நிலைபெற் றகுயில்போலும் அனித்தியவிவேகம்வருமளவும் அவரினம்போற் கூடியிருந்து அந்தவிவேகம்வந்தகாலை யவர்க்கன்னியமாய்ப் பிறிந் தவரோடுஞ் சொல்லாதுசென்றதுறவியே மெய்த்துறவி (பிறப்பறு ப்பார்க்காசானுமென்றேபெறும்) எ - று, அத்துறவி பிறப்பறுக்கும் பொருட்டு துறந்தார்க்காசாரியனுமாவனென்றவாறு. *

ப - ம். தருமன்முதலிய துணைவரையுங் குந்தியாகிய தாயையுங் கண்டிருந்துங் கன்னனறியாததுபோ லிவன்குடும்பத்தாரைக்கண் டிருந்தும் அனித்தியவிவேகத்தாற் பொய்யாய்க் கண்டானாகலிற் க ன்னனைப்போற்றன்னையறிவனேனென்றுங், குயில்காக்கையோடுகூ டியிருந்தபோதுந் தன்குரலைக்காட்டினாற் குத்துமென் றடங்கியிரு ந்து செல்லும்போதுங்கூவாதுசென்றதுபோற் குடும்பத்தோடு கூ டியிருந்தபோதுந் தான்துறந்துசேறலை யவரோடுஞ் சொன்னாற்ப ற்றுவரென்பதறிந்து சொல்லாதடங்கியிருந்து செல்லும் போதுஞ் சொல்லாது சென்றமையாற் குயில்போனவாறுபோற் பேசாது போன்துறவியென்றுங்கூறினார். இங்ஙனம்அறிவுந் துறவுமுள்ளஞா னிசிறப்புளனாகலினிவனையாசானுமென்றார். (௰௪)

(அ-கை.) இங்ஙனந் துறந்துசெல்வாரை மாதாபிதாக்கள் வந் துதடுத்தால் எங்ஙனஞ்செல்வாரெனின்மேற்கூறுகின்றார். *

நித்திரைசெய்வீட்டினெருப்பும்பெரும்படையு... *
முற்றிப்புறப்பட்டார்முற்றத்தே - பித்தனைப்போ... *
னில்லென்றுசொன்னானுநிற்பரோவப்படிகா... ... ...*
னில்லறத்தைநீத்தாரியல்பு.................... ......*

(இ-ள்.) (நித்திரைசெய்வீட்டினெருப்பும் பெரும்படையுமுற் றிப்புறப்பட்டார்முற்றத்தேபித்தனைப்போனில்லென்றுசொன்னானு நிற்பரோ) எ - று, தானித்திரைபண்ணுகின்றவீட்டினுள்ளே நெரு ப்பும்பெரும்படையுஞ்செறிந்துவராவிழித்து அவற்றைக்கண்டுவெரு ண்டு அவ்வீட்டின்வாயில்கடந்து முன்றிலிற் புறப்பட்டார் தனக்க னுகூலராயினும் அவர்நிலைநிற்பரோ சொன்னியாது கூறினும் பித்தனை ப்போலுமவர்மொழியையுட்கொண்டுனைப் போதாயினு நிற்பரோ.

(அப்படிக்கா ணில்லறத்தைநீத்தாரியல்பு)எ-து, அவரொப்படிநில்லா தோடிச்செல்வரோ அப்படிதான் மாதாபிதாக்கள்வந்துதடுப்பினு ம்நில்லாறில்வாழ்க்கையைத் துக்கமாய்க்கண்டுதுறந்துசெல்வாரதுமு றைமையுமென்றவாறு. *

க-து. குடும்பந்துக்கமென்றறியாதபோது அதனோடுங்கூடி யிருப்பாமொன்பதுந் துக்கமென்றறிந்தபோ ததனைத்துறந்து செல் வாமொன்பதுந் துறந்துசெல்லும்போது யாவர்தடுப்பினும் நில்லா மொன்பதும்இவ்வுவமைக்குறிப்புகளாற்காண்க. (௫௫)

(அ-லக.)இங்ஙனந்துறந்துசெல்வாரியல்பின்னுங்கூறுகின்றார்.

கட்டுநெகிழ்த்துவிட்டகள்ளனைப்போற்கங்குலிற்பேய்
வெட்டுகளத்தின்வெருவினர்போன்-முட்டத்... ......*
தொடர்ந்தபடைபிழைத்துத்தோன்றப்போவார்போ *
லடங்கத்துறந்தேகுவார்.................... .........*

(இ-ள்.)(கட்டுநெகிழ்த்துவிட்டகள்ளனைப்போற்கங்குலிற்பேய் வெட்டுகளத்தின்வெருவினர்போன்முட்டத்தொடர்ந்தபடை பிழை த்துத்தோன்றப்போவார்போல்) எ-து, பொருள்திருடிய கள்வனை ச்சிலர்வந்துபற்றிப் பிணித்துவருத்த அவருளருளுயத் தொருவன் வந்து அப்பிணியையவிழ்த்து விட்டகாலையில் விரைந்துசெல்லும் அக்கள்வனைப்போலும் அரையிரவிற் பெரும்பேயைக்கண்டுவெரு விவிரைந்துசேறல்போலும் உயுத்தகளத்தின்வெருவினர் விரைந்து சேறல்போலுந்தம்மைப்பிடிக்கப் பின்றுடர்ந்தபடைக்குத் தப்பி மிகவுங்கைகடந்து செல்வார்போலும் (அடங்கத்துறந்தேகுவார்) எ-து,தாய்தந்தை மனைசுதர் சுற்றமுதலிய குடும்பக்கூட்டங்களை யெல்லாமொருங்கேதுறந்துசெல்வாரன்றி யவர்க்கோர்தடையுமின் றென்றவாறு. *

க-து. மலபரிபாகம்வாராமுன் தாம்செய்த இருவினைக்கீடா யகுடும்பபாசத்தாற் பிணிப்புண்டு வருந்துவமொன்பதும் அப்பரி பாகம்வந்தகாலைத் தோன்றுநின்றவருட்சத்தி அக்குடும்ப பாசந்து க்கமென்றறிவிக்கவறிந்து துறந்துசெல்வாமொன்பதும் அப்போதிர விற்றோன்றும்பேய்போலும் உயுத்தகளம்போலுங் குடும்பமவர்க் குத்தோற்றுமென்பதும் அக்குடும்பக்குழாங்கள் பின்றொடர்வரொ ன்றறிந்து தூரதேசத்திற் செல்வாமொன்பதும் இவ்வுவமைக்குறிப் புகளாற்காண்க. (௫௬)

(அ-கை.) தாம்துறந்துபோதற்குக்குடும்பத்தார் சம்மதித்தால்அப்பதியிலிருந்து தவம்பண்ணலாகாதோவெனின் மேற்கூறுகின்றார். ✻

உடுக்கைமறந்தவருக்கூர்காடென்றுண்டோ ... ...✻
வடுத்தயலாருண்டோபேயானாற்-சுடப்போட்... ......✻
டெதிரிட்டதெல்லாமிழந்தார்க்கிருந்த... .. .........✻
பதியைக்கொண்டுண்டோபயன்.......... ... ......✻

(இ-ள்.)(உடுக்கைமறந்தவருக்கூர்காடென்றுண்டோ வடுத்தயலாருண்டோபேயானால்) எ-து, குடும்பக்கூட்டங்களையெல்லாந்துரிசறத்துறந்துதேகத்தையுஞ் சத்துருவாய்க்கண்டு அத்தேகத்தினுண் குழுமுஞ்சுற்றமுடுக்கையு மறந்து அடுத்தார் அயலாரென்பதுந்தோன்றாதிருப்பதுமன்றி (சுடப்போட்டெதிரிட்டதெல்லா மிழந்தார்க்கிருந்தபதியைக்கொண்டுண்டோபயன்) எ-து, கரத்திலெடுத்தபொருண் மிகவுஞ்சுடவிரைந்துபோட்டுநின்றாற்போற் றமதறிவிற்கெதிரிட்டகருவிகளையெல்லாம் துன்பமாய்க்கண்டு ஞானக்கினியினாலெரித்து அவற்றையுமிழந்தார்க்குத் தாமுன்னிருந்தபதியிலிப்போதிருந்தது கொண்டுபயனென்னையுண்டுகொலென்றவாறு. (௰௭)

(அ-கை.)முன்னிருந்தபதியைவிட்டுமற்றோர்சிவஸ்தலத்திலேயிடம்பற்றியிருந்து ஒருவர்முன்னிலைபாயுதராகக்கினிக் கன்னமாத்திரம்வாங்கியுண்டு தவத்தைப்பண்ணலாகாதோவெனின் மேற்கூறுகின்றார். ✻

துக்கஞ்சுகமானசுட்டறிவுகெட்டவர்க்குத்...... ...✻
திக்குண்டோவெங்குஞ்சிவாலயமா-மக்கினிக்குப்......✻
பிச்சைபொதுநீழனீர்ப்பெரிதுவேபேசார்தம்... ......✻
மிச்சையிருப்பகாந்தத்தே......... ... ...... ......✻

(இ-ள்.) (துக்கஞ்சுகமானசுட்டறிவுகெட்டவர்க்குத் திக்குண்டோவெங்குஞ்சிவாலயமாம்) எ-து, முன்கண்டபிரவஞ்சதுக்கமெல்லாம் இப்போதானந்தமாய்க்கண்ட சுட்டுப்போதங்கெட்டோர்க்கின்னதிசையென்றும் இன்னவிடமென்றும் பகுப்புண்டாமோ அவர்க்கெத்திசையுமெவ்விடமுஞ்சிவாலயமேயாகுமஃதன்றி (அக்கினிக்குப் பிச்சைபோதுநீழனீர்ப்பெரிதுவேபேசார்தம் மிச்சையிருப்பகாந்தத்தே) எ-து,உதராக்கினிபவித்தற்கூரின்கட்பிச்சையும்

இருத்தற்கிடம்பொதுச்சாவடியுமரநீழலுந்தாசந்தனித்தற் சேரியா தியினீர்களுமுளவாகலின் அன்னமிடம்நீரொன்றும்இவற்றினதுபெ யனாயேசொல்லா ராயின் இவர்க்கிச்சைதானேதெனிமொருவரோடு ங்கூடியிராதுபேசாதேகாந்தத்திருப்பதேயிச்சையா மென்றவாறு,

ப-ம். சிவத்தையுணர்ந்தோர்க் கெங்கும்பரிபூரணமாய்த்தோ ற்றுமாகலின்எங்குஞ்சிவாலயமாமென்றார்.　(௰அ)

(அ-கை.) ஒருவரோடுக்கூடியிருந்து பேசுதலுமாகாதோவெ னின்மேற்கூறுகின்றார்.　*

அங்கக்காறன்றுதிப்புநாவிசுவையானதுவுஞ்......*
சிங்கிகுளிர்ந்ததுவும்போற்செகத்தோர்-சங்கத்தைத்...*
தீண்டுமனம்மபலகையாய்ச்சேராதுடலோடே..........*
மாண்டுதிரிவார்துறவாவார்.. ....... ........ ... .....*

(இ-ள்.) (அங்கக்காறன்றுதிப்பு நாவிசுவையானதுவுஞ்சிங்கிகு ளிர்ந்ததுவும்போற்செகத்தோர்) எ-து, நானாவேடங்கொண்டுநடிக் குப்வேடதாரி உவ்வேடங்கட்கேற்றபாடைபேசுதல்போலவுங் கொ ல்லாநின்ற வற்சநாவியொருவர்க்குச்சுவையானதுபோலவுந் தன்கா லிற்பூண்டவிலங்கு ஒருவர்க்கிதமானதுபோலவுந் தத்தஞ்சாதிகட் குந் தொழில்கட்குமேற்றசொற்களைச்சொல்லியுந் துன்பமாயுள்ள விடயங்களை யின்பமாய்க்கருதிக்கொண்டு படனவிமுதலியபாசவி லங்கையிதமாகச்கைக்கொண்டிளையிர்சுழலாநிற்பர் இச்சகத்தோ ர்(சங்கத்தைத் தீண்டுமனமேபலகைபாய்ச் சேராதுடலோடேமாண் டுதிரிவார்துறவாவார்) எ-து, இங்ஙனஞ்சுழலாநின்றோர் கூட்டத்தை க்கூடவேண்டுமென்றுகருது மனநினைவேதம்பலகையாகி அந்நினை வோடுக்கூடா துடலோடுங்கூடியிருந்துங்கூடாதவ்வுடல்வாதனைமா ண்டுதிரிவாரேதுறவினையுடையராவரொன றறிதியென்றவாறு.　*

ப-ம். உடலோடேமாண்டுதிரிவாரெனவே போகவாதனை தே கவாதனை போதவாதனையாகிய இம்மூன்றுவாதனையுந்தீர்ந்தாரொன் பதாயிற்று.　(௰கூ)

(அ-கை.) ஞானிகட்குமஞ்ஞானிகட்குந் தாரதன்மியமும்அவ ராயிவரொண்ணுமலனழைப்பதும்இங்ஙனமென்றறிவித்தல்.　*

பொன்மலைமேலாகாயம்போவார்க்குப்பூமியுளா
ரொன்னவேநாதாந்தமெய்த்தினரை -யென்னருகே... *
வாவென்றல்பாற்கடலின்வாழரியைமண்டுகங்.........
கூவுந்தகைமையதொக்கும்................................*

(இ-ள்.) (பொன்மலைமேலாகாயம்போவார்க்குப்பூமியுளாரொன்னவே) எ-து! பொன்மலைமுடியின்மேலாகாசகமனம்பண்ணுவோர்க்கு இந்நிலத்தின்கண்ணுள்ளார்மிகவுந்தாழ்ச்சியானதுபோன்ஞானிகட்கும் பிரவஞ்சிகட்குமுயர்ச்சிதாழ்ச்சியிருப்பவும் ( நாதாந்தமெய்த்தினரையென்னருகே வாவென்றல் பாற்கடலின் வாழரியைமண்டூகங்கூவுந்தகைமையதொக்கும்) எ-து, நாததத்துவத்தின் முடிவாயிருந்த திருவருளையடைந்த ஞானிகளைப் பஞ்சபூதகாரியத்தானாகியதேகந்தானாகியிந்திரிய வழிநுழைந்து செல்லும் பிரவஞ்சி ஒருவன் என் மனைக்குநீர்வருக வென்றழைத்தல் பாற்கடனுட்பணரவணையிற்பள்ளி கொள்ளாநின்ற பெருமானைப்பார்த்து ஓர்தவளை நீருமிக்கடன்மிசையிதந்து துயில்கின்றீர் யானுமிக்கடன் மிசையிதந்து துயில்கின்றேன் உமக்குமரியென்றுபெயர் எனக்குமரியென்று பெயராகலினென்னருகே நீர்வருகவென்றழைக்குமுறைமையதொக்குமென்றவாறு. *

ப-ம், பொன்மலைமுடியை நாதாந்தத்திற்கும் அம்மலை முடிமேற்றோன்றுமாகாயத்தையிந்நாதாந்தத்திற் றோன்றுந் திருவருளுக்கும் அவ்வாகாயத்திற் கமனம்பண்ணுவோரை யித்திருவருளையுங்கடந்துசெல்லுஞானிகளறிவிற்கு முவமித்துக்கூறியவாறுகாண்க. ஞானிகள்தத்துவங்கட்கெல்லா முடிவாய் நின்ற பரிபூரணத்தையடைந்தவர்பிரவஞ்சிகள்தத்துவங்கட்கெல்லா மடியாயுள்ளபஞ்சபூதகாரியத்தாலுப தேகத்தை யடைந்தவராகலிற் பொன்மலைமேலாகாயம்போவார்க்குப் பூமியுளாரொன்னவேயென் றங்ஙனமுவமை கூறினார், ஞானிகளதுமகிமையறியாததால் அவருமுலகத்தின்கண்ணிருக்கின்றார் யானுமுலகத்தின்கண்ணிருக்கின்றேன் அவருமனிதரியானுமனிதனென்று கருதியழைத்தானாகலிற் பாற்கடலில் வாழரியைமண்டூகங்கூவுந் தகைமையதொக்குமென்று இங்ஙன முவமை கூறினார். (௨௰)

(அ-கை.) ஆயிற்பத்தியோடு மனமொழிமெய்களா லவரைவணங்கி யென்மனைக்குத்தவரீரெழுந்தருள்கவென்று ஒருவனழைத்தாற்செல்வரோவெனின் மேற்கூறுகின்றார். *

கும்பிட்டுக்கீர்த்தித்துங்கோடியுபசாரம்.............*
வம்பிட்டபத்திவலைவழியை - நம்புவரோ...................*
ஊறுதிவாதனைகளொன்றுதவப்பெருமை...... ... ...*
வீணேவிளைக்குமெனின்.........................................*

(இ-ள்.) (கும்பிட்டுக்கீர்த்தித்துங்கோடியுபசாரம் வம்பிட்டபத்திவலைவழியைநம்புவரோ)எ-து. ஒருவன்வந்து அட்டாங்கபஞ்சாங்கத்தோடும் வணங்கியும் அனேகதோத்திரங்களைப்பண்ணியுஞ்சுவாமிகளடியேன்மனைக்கெழுந்தருள்கவென்று கோடிபேதமாயுபசாரங்களைச்செய்தும் இங்ஙனமழைக்கும்புதுமை பொருந்தியபத்தியாகிய வலைநெறியை ஞானிகளாயினோர் ஒர்பொருளாகக்கருதிச் செல்வரோ-ஆயினன்போடுவணங்கி யன்னங் கொடுக்கின்றேனென் றழைத்தால் அவ்வன்னமாத்திரஞ்சென்றுவாங்கிக்கொள்ளலாகாதோ வெனின் (ஊறுதிவாதனைகளொன்றுதவப் பெருமை வீணே விளைக்குமெனின்) எ-து, ஊணுடுக்கைமுதலியவாதனைகளும் விரும்பாதவந்தவவாவறுதியாகியபெருமையவரிருக்குமிடத்தவர்வேண்டாவென்றுதள்ளவும் வீணுயவ்வூறுதிகளைக்கொடுப்பிக்குமாயின்- எ-று. *

ப-ம். உபசாரமிகுதியைக் கோடியென்று மொருவருபசரணஞ்செயக்கண்டதின்மையால் வம்பிட்டவென்றுங்கூறினார். ஊறுதிவாதனைகளெனவே நோய்குளிர்கட்குமருந்துமுறையுளும் வேண்டாவென்பதாயிற்று. (௨௧)

(அ-கை.) தாமூறுதிகளை விரும்பி ஒருவனைப் பின்சேறலாகாதன்றி ஒருவனன்போடும்வணங்கி யூறுதி கொடுத்தற்குத் தன் மனைக்கழைத்தாலுஞ் செல்லாதிருப்பதேதுகாரணமெனின் மேற்கூறுகின்றார். *

கருமந்திரிவிதத்திற்கட்டவிழுங்கால............ ...*
மரவுந்தவளையும்போலாகி - யிருதலையிற்.... ...... .. *
கொள்ளியெறும்பாயுடம்பே கூற்றாகித்தோற்றுமெனி*
னுள்ளினருமூருமென்னாகும்......... .........  .....*

(இ-ள்,) (கருமந்திரிவிதத்திற்கட்டவிழுங்கால மரவுந்தவளையும் போலாகியிருதலையிற்கொள்ளியெறும்பா யுடம்பே கூற்றாகித்தோற்றுமெனின்) எ-து. ஞானசாரியர்கிருபாநோக்கத்தானுங்கரசரண

பரிசந்தானுந்திருவாக்கானும் அவரதாணவமாயை கருமங்களாகிய
கட்டுவிடுதலை யாகாநின்ற காலமாகலிற் றம்முடம்பேப்பாம்புந் தா
மோர்சட்டையும்போலாகியவ்வுடம்பேயிருதலையு மெரிசூழ்ந்த கொ
ள்ளியாகித் தாமக்கொள்ளிக் குழலுட் சுழலு மெறும்பாகி, அவ்வுட
ம்பேதம்மைப்பிணித்துச்செல்லுங் கூற்றாகித் தோற்று மெனின் (உ
ள்ளினருமூருமென்றாகும்) எ - து, இங்ஙனம்பகையாய்த் தோற்று
முடம்பிற்குபசாரஞ்செய்யக் கருதினோரும் வரவழைத்துச் செல்லு
மூருமென்னபயனைத்தருமவர்க்கென்றவாறு. *

ப - ம். பாம்புதவளையைப் பற்றிநிற்றல்போல் உடம்பவனை
ப்பற்றிநிற்றலானும்நெருப்பவியு மளவுங்குழற்கண்வருந்திச் சுழலு
மெறும்புபோ லூழ்வினையறுமளவும் உடம்புள்வருந்தி யிருத்தலா
னுங் கூற்றுயிரைப்பிணித்துச்சேறல்போல் அவனைப்பற்றி நின்றுபி
ச்சையாதிக்குச் செல்லப்பண்ணுதலானும் அங்ஙனமூவகைகூறினார்
ஒருவன்றனக்குப்பகையானார்மேல் வெறுப்புண்டாவது மன்றி அப்
பகைவர்க்கிதஞ்செய்வார்மேலும் வெறுப்புண்டாவது போலவர்க்கு
ப்பகையாகியவுடம்பின்மேல் வெறுப்புண்டாவது மன்றி யவ்வுடம்
பிற்கிதஞ்செய்வார்மேலும் வெறுப்புண்டாமாகலின் உள்ளினருமூ
ருமென்றாகுமென்றார். திரிவிதத்தாற்கட்டவிழுமென்றமையா லிர
ண்டுமலமும்வருவிக்கப்பட்டது. (உஉ)

(அ-கை.) ஞானாசாரியனா யடைந்தோரும் ஏழூரின் கண்ணொ
ருவன்செய்யுமுபசாரத்தை யங்கீகரிக்கவில்லையோ இவனொன்னையங்
ஙனமங்கீகரியாதிருப்பதெனின் மேற்கூறுகின்றார். *

பிறவாதயோனிபிறந்துபிறந்தெல்லா.................*
மறிவானையொன்றறியா - வறிவை..................*
யறிந்தும்மனங்கடைழிபருந்திற்குஞ்சாய்ப்............*
பிறந்தவர்களேண்டார்ப்பாரின்....................*

(இ-ள்.) (பிறவாதயோனிபிறந்துபிறந்தெல்லா மறிவானையொ
ன்றறிபாவறிவையறிந்து) எ - து, தெய்வமானிடப் பிறப்பன்றி மற்
றைப்பிறவாதயோனிபேதங்களெல்லாவற்றுள்ளும் அளவில் காலஞ்
சென்றுசென்றுபிறந்தெய்த்துப் பின்னர் தெய்வகதியாய்ப் பிறவி
கட்கெல்லாந்தப்பித் தன்னையறிதற்கேதுவாய இம்மானிடப் பிறவி
யிற்பிறந்தும் இத்தேகத்துளிருந் தெல்லாவற்றையு மறிவானாகியயா
ன்யானென் றறித்தெரிதற்கு வறிவை யிம்மானிடதேக மனேகத்தாற்

செய்தசிவபுண்ணியமேலீட்டாலிப்போதறிந்து (மீனண்டவழிபரு ந்திற் நஞ்சாய்ப்பிறந்தவர்களென்பார்ப்பார்பின்) எ-து, நீருள்நு ழைந்து செல்லுமீன்முட்டை வழித்தோன்றுங்குஞ்சு ஆகாயத்திற் செல்லும்பருந்தின்முட்டை வழித்தோன்றுங்குஞ்சாய்ப் பிறந்தது போற் பிறப்புக்கேதுவாய்ப் பிறந்தபிறப்புக்கணீக்கிவீட்டிற் கே துவாய்ப்பிறந்தோர்கண் மற்றையலாப்போலு மூருறவென்றேன் பார்ப்பாரிப்போதென்றவாறு. *

ப-ம். முட்டைவழித்தோன்றலிரண்டிற்குமொத்ததாயினும்மு ன்னீருட்சென்றதும் பின்னாகாயத்திற் செல்வதும் ஒவ்வாததுபோ ன்முன்னருமிப்போதும் பிறந்த மானிடப்பிறப் பொத்ததாயினு முன்பிறப்பிற்சென்றதும் இப்போது வீட்டிற்செல்வதும் ஒவ்வா தாகலின் அங்ஙனமூவமைகூறினர். முற்பிறப்பிற் சிவபுண்ணியமே லீட்டால் இப்பிறப்பிலெளிதிற் றன்னையறிந்தமையாலறிந்து பிறந் தவர்களென்றார், தன்னையறிந்தாற்றல்லவனையு மறியலாமாகலி னொரு தொன்றறியாவறிவையறிந்தென்றார். (உரு)

(அ-கை.) இங்ஙனமூருறவாதியொன்றும் வேண்டார்க்குப்பெ ருமைதான்யாதெனின் மேற்கூறுகின்றார். *

அரசர்க்குடைமையளவற்றபேறே......... ......*
பெருமையானாற்போலப்பெற்ற-வரிபிரமர்க்... ......*
கப்பாலாம்வாழ்வுமணுவாகியாதுமற... ... ... ......*
விப்போபெருமையிவர்க்கு........................*

(இ-ள்.) (அரசர்க்குடைமையளவற்ற பேறேபெருமையானாற் போல)எ-து, அளவற்றதிரவியம் ஆடைபூஷிணாதிகளைப்பெறும்பே றேபரசர்க்குப்பெருமைபானாற்போலப் (பெற்றவரிபிரமர்க்கப்பா லாம்வாழ்வுமணுவாகியாது மறவிப்போபெருமையிவர்க்கு)எ-து,அ வ்வரசர்சுரர்முதலியோர்வாழ்விற்கு மேலாயவாழ்வினைப்பெற்ற அ ரிபிரமர்வாழ்விற்கும் அப்பாலாகிய பதமுத்திவாழ்வுகளும் அணு மாத்திரமின்பமா யழியுமெனக்கண்டு இந்த இகபரவாழ்வுகளியா தொன்றினும்பற்றற்றஇப்பற்றறுதியேயிவர்க்கிப்போது பெருமை யாமென்றவாறு. *

ப-ம். அரசர்க்குடைமையென்றுபொருட்படக்கூறினமையா ல்நால்வகைச்சேனைநால்வகையரணுதேசமுதலியவுங்கொள்க. அ

வர்க்கப்பேறுமேன்மேற்பெறுவது பெருமையானாற்போல் இவர்க்கப்பேறுமேன்மேல்விடுவதுபெருமையென்பதும் அவர்க்கப்பேறின்மை சிறுமையாவதுபோல் இவர்க்கப்பேறுபெறுவது சிறுமையென்பதும்பேற்றின்மேற்பற்றுப்பிறவிக்கேது. அப்பேற்றின்மேற்பற்றறுதிவீட்டிற்கேதுவென்பதும்பிறப்பையடைதல் சிறுமைவீட்டையடைதல்பெருமையென்பதுமிதனாற்காண்க. (௨௪)

(அ-ரை.) இங்ஙனமிருந்தஞானிகள் வீட்டிற்கேதுவாகியசரிதாதிகளைத்தாஞ்செய்பார்களோவெனின் அவர்செய்யுஞ் சரிதாதிகளிவையென்றுமேற்கூறுகின்றார். *

சரிதையுடல்வெறுத்தறன்னையறிதற்.......... ... .......*

கிரியோகங்கூடாமைகேளாத்-திருஞானம்...... ... .......*

வேறின்மைபேரின்பம்விட்டுதியாமேலீடு.......... ... *

பேறின்மைதானேபெறல்.......... .......... ..........*

(இ-ள்.) சரிதையுடல்வெறுத்தறன்னையறிதல்கிரியோகங்கூடாமை)எ-று. அவர்க்குச்சரிதையாவது மலச்சுமை துக்கம்விளக்குந்தூம்பையணித்தியவிருதெனக்கண்டுஉண்டிசுருங்குதல் முதலியவற்றாலுடலத்தைவெறுத்தல்-கிரியையாவதுதத்துவமுப்பத்தாறையுந்தியங்களைந்தவற்றின் முடிவினின்றதம்மையுள்ளபடியறிதல்-யோகமாவது அங்ஙனந்தம்மையறிந்தவிடத்துத் தமக்குயிரா யிருந்ததிருவருளைக்கண்டு அவ்வருளே வடிவாகியிருந்து முன்னீக்கிநின்றகருவிகளோடுங்கூடாமை) கேளாத்திருஞானம்வேறின்மைபேரின்பம்விட்டுதியாமேலீடு பேறின்மைதானேபெறல்) எ-து, அம்மூவகையாலுமுண்டாங் கேட்டறியலாகாதவழகிய ஞானமாவது அவ்வருளேவடிவாயிருந்ததாஞ் சிறிதுந்தோன்றாதபடியேயாகியவேறின்மையும் அதன்மேற்பேரின்பம்விட்டுத்தோன்றுதமேலீட்டினையுமிவ்வின்பத்தைப்பெற்றோரொன்றும் பேறின்மை யினையும்பெறுதல்தானேயாமென்றவாறு. (௨௫)

(ப-ம்.) ஞானசாரியர்மவுனமொழியா லறிவிக்கவறிதலாற்கேளாத்திருஞானமென்றுமின்பமேலிடாமுன் விட்டுத்தோன்றலான்விட்டுதியாம்மேலீடென்றுங்கூறினார். *

துறவு - முற்றிற்று.

ஆக அதிகாரம்-எ-க்கு- திருவெண்பா-௱அஅ;





உ

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது

# அவத்தைத்தன்மை.



அஃதாவது, இங்ஙனஞ்சரிதாதிகளேநீத்துஉட்டுறவுபுறத் துறவு டையராய்ப் பிருதிவிமுதல் நாததத்துவமீறுகச் சொல்லப்பட்ட த த்துவமுப்பத்தாறையுங்கடந்து ஆணவ விருளேயுங் கடந்து ஆன்ம தெரிசனமுதலிய சுத்தாவத்தையி னிற்போரதுதன்மை கூறினமை யால்இவ்வதிகாரத்திற்குஅவத்தைத்தன்மையென்றுபெயராயிற்று.

(அ-கை.) சுத்தாவத்தையினின்று அருளேத் தெரிசித்தோர்க்கு விடயந்துன்பமாய்த்தோற்றுமென் றறிவித்தல். ✻

உண்டொழித்துத்தேடுமுடம்பராயொன்றுமுத... ✻
லண்டர்பதத்தப்பாலுமைம்புலத்து - மூண்டே......... ✻
மழுங்கினர்க்குப்போகம்வருத்தமாய்த்தோன்ற... ...✻
வெழுந்தவருள்கெட்டேனிதென்............ ........✻

(இ-ள்.) (உண்டொழித்துத்தேடுமுடம்பராயொன்றுமுத லண்டர்பதத்தப்பாலுமைம்புலத்து மூண்டேமழுங்கினர்க்கு) எ-து, ஒரு டம்பிற்பிராரத்துவத்தையுண்டொழித்து அவ்வுடம்பி லவ்வினையை யுண்டொழித்தற் கிடையே யிதாகிதங்களாற்றேடு மாகாமி யத்தாற் றென்றுதொட்டுவருமுடம்புகளேயுடையரா யிப்பூலோக மாகிய ஒ ன்றுமுதற்றேவர்பதவிக்கப்பாலும் ஆண்டுச்சென் றிருந்தைம்பொ றிகளானும் அவ்வவ்வுடம்புகட் கேற்ற விடயபோகங்களே யின்ப மாக்கண்டுண்டு அளவில்காலந்தழும்பேறினோர்க்கு (போகம் வரு த்தமாய்த்தோன்ற வெழுந்தவருள்கெட்டேனிதென்) எ-று, அப் போதின்பமாய்த்தோன்றியபோகம் இப்போது துன்பமாய்த்தோ ன்றவுதயமாகியதிருவருள்கெட்டேனிதென்கொல்என்றவாறு. ✻

ப-ம். ஓர்பிரகாரமன்றிச் செய்கவினை யின்பேதப்படியே நூவாணபுவன போகங்களும்பதித்துத் தோன்றலாற் றேகமுடம்பா ரண்டர்பதத்தப்பாலுமைம்புலத்து மூண்டுமழுங்கி னர்க்கென்றூர்- தனுவாதிகள்பேதிப்பதாவன-நல்லதேசத்துநல்லோர்கள் அங்கீகரித்த போகத்தைப் புசித்தலானும் நல்லநினைவோடு நல்லசொல்லோடு நற்றொழிலைச் செய்தலானும் பொல்லாத தேசத்துப் புன்போகங்களைப் புசித்தலானும் பொல்லாத நினைவோடும் பொல்லாத சொல்லோடும் புன்றொழிலைச் செய்தலானும் இவற்றுளொன்று நன்றுமொன்று தீதுமாய்மாறிவருதலானும் இவைமுதலிய வற்றூற் பேதிப்பதெனக்கொள்க. (௧)

(அ-கை.) சொரூபானந்தத்தை விரும்பிச் சுத்தாவத்தை யினிற்போர்க் கிச்சொரூபானந்தங் கிடைத்திலதாயினும் இவ்வானந்தத்தையே விரும்புவதன்றி யசுத்தாவத்தையிற் றிரும்பி யவ்விடயானந்தத்தைவிரும்பலாகாதென்றுகூறுதல். *

வாசகத்துங்கோவையினுமாணிக்கமாகவழங்......*
காசைத்துறைபனந்தமாமதிலே - யாசை..............*
யிருதலைப்பாலேகமெனவிரண்டாமித்தி..............*
லொருதலைக்காமந் துறவன்றே.................. ..........*

(இ-ள்.) (வாசகத்துங்கோவையினுமாணிக்கமாகவழங்காசைத்துறைபனந்தமாம்) எ-து, மாணிக்கமணிபோலாகப் புலவரா னெடுத்துவழங்காநின்ற சங்கத்தார்முதலியோர் கூறிய ஆசிரியப்பாக்களினு மாணிக்கவாசகசுவாமிகளருளிச்செய்த திருச்சிற்றம்பலக்கோவையார்முதலிய கோவைகளினுங் காமத்தினதிலக்கணமாகக் கூறப்பட்ட களவித்துறைகளனந்தமாகும் (அதிலேபாசை யிருதலைப்பாலேகமெனவிரண்டாமித்தி லொருதலைக்காமந்துறவன்றே) எ-து, அக்களவித்துறைகளுட் காமந்தலைவனுந்தலைவியுமாகிய இருவர்பாலுஞ் சமனுறத்துக்கூடுவதாகிய இருதலைக் காமமெனவும் ஒருவர்பான்மிகுந்து மொருவர்பாற்குறைந் துங்காமமொவ்வாது கூடுவதாகியவொருதலைக்காமமெனவு மிரண்டுளடங்குவதாம் இவற்றுட்டலைவன் விழையாதிருப்பத் தலைவிவிழைந்துபற்றும் ஒருதலைக் காமம்போல விடயானந்தத்தைத் துறந்து சொரூபானந்தத்தைப் பெறும் பொருட்டுச் சுத்தாவத்தையினிற்போர்க்கிச் சொரூபானந்தங்கிடைத்திலதாயினும் இவ்வானந்தத்தையே பெறவிரும்பித் தொடர்ந்து

நிற்பதன்றே துறவாவதென்றவாறு. *

க-து, தலைவன்கூடியின்டங்கொடாதிருப்பினுந்தலைவிதனது கற்பாற் பிறனைவிழையாதத்தலைவனைவிழைந்துநிற்றல்போற் சொரூபானந்தந்தனக்குக் கிடைத்திலதாயினுந் தனதுதவக்கற்பால்விடயானந்தத்தை விழையாது சொரூபானந்தத்தையே விழைந்துநிற்க வேண்டுமென்பதுந்தலைவிகற்பினைக்கண்டுதலைவன்காருண்ணியத்தால் அவட்கின்பங்கொடுத்தல்போல் இவன்றவக்கற்பினைக்கண்டுசிவங்காருண்ணியத்தாற் றனதானந்தத்தை யிவர்க்குக் கொடுக்குமென்பதும் இவ்வுவமைக்குறிப்புகளாற் காண்க. வாசகம்போலிருத்தலினுசரியப்பாவைவாசகமென்றார். (௨)

(அ-கை.) ஞானசாதகரிலக்கணமுஞ் சாத்தியரதிலக்கணமுங் கூறுதல். *

சாத்துவிதமெட்டாய்த்தசவவத்தையாய்த்தன்னை *
நீத்தவனுய்த்தானுய்ப்பின்னேயமாய்க்-கூர்த்ததெல்லாஞ்
சுத்தவவத்தைத்துவட்சித்துகளற்ற.........................*
வத்துவிதர்க்கேதுமுறியா.................. ... .........*

(இ-ள்.) (சாத்துவிதமெட்டாய்த்தசவவத்தையாய்த்தன்னை நீத்தவனுய்த் தானுய்ப்பின்னேயமாய்க்கூர்த்ததெல்லாஞ்சுத்த வவத்தைத்துவட்சி) எ-து. இராசததாமதகாரியங்களையெல்லாம்நீக்கிச்சாத்துவிதகாரியமாகியநிராசைமுதலியவெண்குணங்களையுமுடையனுகிஅருக்கியநோக்கமுதலியபத்தவத்தைகளையமுடையனுகி யிந்தநற்குணங்களாற்றத்துவமுப்பத்தாறையுங்கடந்துதன்னைடநிர்தருளைத் தெரிசித்துத்தற்போதமடங்கினவனுகிப் பின்னர் அப்பரமையேதானுகிப்பின்னர்ஞேயத்தழுந்தினேனுகி இந்தன மொருவன்றுண்ணிதாயறிந்துசென்றதெல்லாஞ்சுத்தாவத்தைடனுபவங்களாகும் (துகளற்றவத்துவிதர்க்கேதுமுறியா) எ-து, இந்தச்சுத்தாவத்தையடிந்துசென்றப்பாதமற்றுச்சிவத்தோடுமிரண்டறக்கலந்தஅத்துவிதத்தையுடையோர்க்குமுற்கூறியவனுபவங்களுளவிடாதொன்றேனுந்தோன்றுதிவர்மவுனுனந்தமாயிருப்பரொன்றவாறு. *

ப-ம். சாத்துவிதமெட்டாவன - நிராசை- தவம்-பொறுமை-கிருபை-சந்தோஷம்- வாய்மை - அறிவுடைமை- அடக்கமுடைமை- இவையென்வகையுமெனக்கொள்க. தசவவத்தையாவன- பிரவஞ்சத்தைதமாயாவடிவமாட்க்காணு தருள்வடிவாய்க்காணு மருக்கியநோ

க்கமுங்கருவிகளை நியதிகளையுஞ் சிந்தனையுமுற்பிறவியிற்பட்டதுன்பங்களையுநினைந்துநெட்டுயிர்ப்பெறிதலுந்திருவருண் மேலீட்டால் உடம்பிலிளஞ்சூடெழுதலும்ஊணுறி களைத்துறத்தலும் ஒருவரோடுவாயாடற்குமானமுறுதலும் மவுனமாயிருத்தலும் பித்தேறினாற்போலப் பிரவஞ்சப்பகுப்புத்தோன்றாதிருத்தலும் பிராணவாயுவிறந்து மூர்ச்சித்திருத்தலும் போதமிறந்துநிற்றலுமாகியஇவைபத்துமெனக்கொள்க. சுத்தாவத்தைகளோடுங்கூடிஅவற்றிற் றோன்றுமனுபவங்களைப்போதஞ்சுருங்கிநின்றறிதலானும் அப்போதந்தேய்தல்வளர்தற்குத்தக்கதா யோர்காலுயர்ந்தவனுபவமாயும் ஓர்காற்றாழ்ந்தவனுபவமாயுமாறித்தோன்றலானுந்துவட்சியென்றார். கேவலாவத்தையோடாணவ நீங்கிற்றாயினும்அதனதுகாரணம் போதமிறக்குமளவுமிருத்தலிற்போதத்தைத்துகளென்றார். (௯)

(அ-கை.)அவ்வனுபவங்களையறிந்து சொல்வது வாக்காகலின் இவ்வாக்கினைமவுனமாக்குவதுமுத்தியன்றோவெனின் முத்திநிலையீதென்றறிவித்தல். *

உரையொடுங்கிற்போதமுறிக்குமொழிவே.........*
யருளாமதன்போக்கசையாப்-பரையோகம் ..........*
போனாற்சுகாதீதம்புண்ணியர்க்குப்பொய்யுறியா... ...*
தேனோர்க்குப்பல்விதமாகும்......... ......... ......*

(இ-ள்.)(உரையொடுங்கிற்போதமுறிக்குமொழிவே யருளாமதன்போக்கசையாப்பரையோகம்போனாற்சுகாதீதம்) எ - று, வாக்கினையுமவுனமாக்கினுள்ள போதந்தோன்றுமாகலின் அவ்வாக்குமவுனமுத்தியன்று-ஆயிற்போதமடங்கின்முத்தியோவெனிற் போதமடங்கினருட்டெரிசனமாகலின் அப்போதமடங்கல்முத்தியன்று ஆயினருட்டெரிசன நீங்குதன்முத்தியோவெனின் அவ்வருட்டெரிசன நீங்கிற்போதஞ்சிறிது மசையாதபரையோகமாமாகலின் அவ்வருட்டெரிசனநீங்குதன்முத்தியன்று ஆயிற்பரையோக நீங்குதன்முத்தியோவெனின் அப்பரையோக நீங்கிற்சுகப்பேறுமாகலின் அப்பரையோகநீங்குதன்முத்தியன்று ஆயின் அச்சுகப்பேறுநீங்குதன்முத்தியோவெனின் அச்சுகப்பேறுநீங்குதலேசுகாதீதம் இச்சுகாதீதமே முத்திநிலை (புண்ணியர்க்குப்பொய்யுறியாதேனோர்க்குப்பல்விதமாகும்)எ-று, இச்சுகாதீதமுத்தியையடைந்தபுண்ணியர்க்குமுற் கூறியசுத்தாவத்தையிற்றோன்றும் பொய்களியாவுந்தோன்றா இம்மு

த்தியைப் பெறுதச்சுத்தாவத்தையி னிற்போர்க் கனுபவம்பலவிதமா
ய்த்தோன்றுமென்றவாறு. *

ப - ம். பராயோகங்கூறியதற்கப்பாற்சுகாதீதங்கூறினமையா
லிவற்றிற்கிடையிற்றோன்றுஞ் சுகப்பேறுவருவிக்கப்பட்டது. பரி
பூரணசிவத்திற்குத் தம்மைக் கொடுத்தலான் மெய்ஞ்ஞானிகளைப்பு
ண்ணியரென்றார். சுகாதீதத்திற்குச்சுத்தாவத்தைக் காட்சிபொய்யா
கலிற்பொய்யுதியாதென்றார் *

(அ-கை.) அச்சுகாதீதமுத்தியையடைதற்கேதுவாகிய சுத்தா
வத்தையினிற்போரது குணங்களியாவையென்ற மாணாக்கனை நோக்
கிக்கருவிகணீங்கிய விடத்துவருங் குணமுந்தன்னையறிந்தவிடத்து
வருங்குணமுந் திருவருட்டோன்றியவிடத்துவருங்குணமும் ஆன
ந்தந் தோன்றியவிடத்துவருங்குணமுங்கூறுதல் *

கருவிகழலவனைநோக்காஞ்சிந்தை.....................*
பெருமூச்சாம்போதம்பிறியி - லருளாய்............. *
வெதும்பியுடல்வெறுக்குமின்பாய்விகள...............*
முதிர்ந்துறையுநாணுமொடுங்கும்.........................*

(இ - ள்.) (கருவிகழலவனைநோக்காஞ்சிந்தைபெருமூச்சாம்போ
தம்பிறியில்) எ - து, கருவிகணீங்கவேமலமேனின்றும்நாக்குவோர்
க்குநிலத்தின்கணுள்ள பொருள்களருகித்தோன்றுமாபோலப் பிரவ
ஞ்சமெல்லாம்பொய்யாய்த்தோன்றுவதாம் அக்கருவிகளுள் அதோ
முகமாய்நின்ற போதமவற்றைப் பிறியிலூர்த்தமுகமாய்நின்றுதன்
னையறியும் அங்ஙனந்தன்னையறிந்தபோது இங்ஙனமிருக்கின்றயா
னெறும்பிடைநாங்கூழரிப்புண்டதுபோல் அளவில்காலம் அக்க
ருவிகளா லரிப்புண்டேனேயென்னுஞ் சிந்தனையா னெட்டுயிர்ப்பு
ளவாம் (அருளாய்வெதும்பியுடல் வெறுக்குமின்பாய்விகளமுதிர்ந்
துறையுநாணுமொடுங்கும்) எ - து, தன்னையறிந்தபின்னர் அருட்
டெரிசனமுண்டாய்ப் பின்னர்அவ்வருளேதனக்குவடிவாகி இம்மா
யாவுடம்பைவெதும்பி இதனைவெறுப்பன்பின்னர் ஆனந்தமுண்டா
யிவ்வானந்தமேலீடாகிய வுன்மத்தந் தலைமீக்கொண்டு மவுனமாயி
ருப்பன் அஃதன்றிப்பிரவஞ்சத்தார்க்குநாணுகின்றநாணமுநீங்கு
மென்றவாறு. *

ப-ம். போதம்பிறியிலென்றதனாற் றன்னையறிந்தென்பது வ
ருவிக்கப்பட்டது. அருளாயென்றதனலருட்டெரிசனம் வருவிக்கப்

பட்டது. நாணமொடுங்கலாவது நீராடல் பூசனையாதிசெய்திலனென்று உலகத்தார்பழிப்பது குறித்துவருநாணமெனக் கொள்க. (ஞ)

(அ - கை.) கருவிகளைப் பொய்யென் றறிந்தவிடத்து வருங்குணமுந் திருவருளுதித்தவிடத்துவருங்குணமும்அறிவித்தல் ✱

வேர்க்கும்விழிததும்பும்பொய்யறியின்மெய்வெதும்பி
யார்க்கும்விறைக்குமருளுதிப்பின் - வாக்குமன ........ ...✱
நின்றுபரிபூரணமாய்நேயத்தேகார்க்கதமாய்க்..............✱
கன்றிப்புளகிதமாங்காண்............................... ✱

(இ - ள்.) (வேர்க்கும்விழிததும்பும் பொய்யறியின்மெய்வெதும்பி யார்க்கும்விறைக்கும்) எ - து. பொய்யாகியகருவிகளையுள்ளபடி பொய்யாயறியின் மெய்யில்வெயர்வையரும்பும் விழியினீர்ததும்புமெல்லாம் பொய்யென்றறிந்து கொண்டேனென்று உடலத்திளஞ்சூடெழுவாரபாரிப்பன் பின்னர்த்தன்னை யுள்ளபடிகண்டுஞ்ன்றினையுநாடாதுடல மசைவறவிருப்பன் (அருளுதிப்பின்வாக்குமன நின்றுபரிபூரணமாய் நேயத்தேகார்க்கதமாய்க் கன்றிப்புளகிதமாங்காண்)எ - து. பின்னர் அருள்தோன்றுமிடத்து வாக்குமனங்களினின்று அவ்வருட்பரிபூரணமாய்த்தோன்ற இதற்குமுதலாயநேயத்தையென்றைக்கடைவேனென்று அந்நேயத்தைநாடிமேகங்குமுறுவதுபோலாயுள்ளேகுமுறி யுளம்வெதும்பி யுடலமுரோமாஞ்சலியாமென்றவாறு. ✱

ச - து. வாக்குமனங்களினின்று அருட்பூரணமாய்த்தோன்றுவதாவது மனத்தால்நிலைந்தநினைவு நினைந்ததில்லையாயும் வாக்காற்சொன்னசொற்கள் சொன்னதில்லையாயுந் தனக்கனுபவமாய்த்தோன்றுவதாமெனக்கொள்க. (சூ)

(அ-கை.) அருள்மேலிட்டநாணடக்குங்குணங் கூறுதல்.

பேயைப்பெண்ணென்றிருந்தும்பித்தளைக்குப் பொன்றேற்று
மாயத்தூணுண்டுமனமாண்டுமயல் - போபத்...................✱
திடுக்கமேபித்தாய்த்தெளிமயலானற்போ................✱
னடக்குமருண்மேலிட்டநாள் .........................✱

(இ-ள்.) (பேயைப்பெண்ணென்றிருந்தும்பித்தளைக்குப்பொன்றேற்று மாயத்தூணுண்டுமனமாண்டுமயல்போய) எ - து, பெண்

களைப்பேய்களைப்போலும் பிடித்து வாதிப்பவொன்று கண்டிருப்பதாயும் பித்தளைக்குப்பொன் தோற்றுப்போவதாய்க் காண்பதாயும் உதரவெரியாய்த்தோன்று மாயத்துக்குக்காடிகூழ் முதலியவூண்களியாதுகிடைப்பினும் வாங்கியுண்டு அவைகண்மேல்வைத்த மயலும் போயவற்றை மெய்ப்பொருளாய்க்காணுமனமு மிறந்து ( அத்திடுக்கமேயித்தாய்த் தெளிமயலானற்போ னடக்குமருண் மேலிட்டநாள்) எ-து; அப்பொருந்தலருந்தல்களையும் அவற்றிற்கேதுவாயபொன்னையும்விழைந்து நெடுநாட்பிற வித்துன்பத்தால் வருந்தினேமேயென்னும் அந்தத்திடுக்கந்தானே விடாப்பிராந்தியா யறிவுபயித்தியங்கொண்டோனைப்போலவும்விளங்குந் திருவருள் மேலிட்டகாலத்தென்றவாறு. ✻

ப-ம். பேய்பிடியுண்டு விடுபட்டோனுக்குஒர்காலத்ததனைக் கண்டபோது பயந்தோற்றல்போன் முன்பெண்களால் வருந்தியவருத்தத்தைநோக்கி அவரைக்கண்டபோது பயந்தோற்றலான் அங்ஙனமுவமைகூறினர். பித்தளைக்குப்பொன் தோற்று மென்றதுஅதனினுமிழிவாய்க் கூறினமையால் ஒட்டுச்சின்னங்களையுஞ் சிறுகற்களையும்பொற் காண்பானென்பதாயிற்று. எங்கும்பரிபூரணமா யருள்வடிவாயிருத்தலானும் பொன்பெண்மண் ணூண் உடலென்னுமைவகையும்வெறுத்து உலகத்தாரோடுமாறு பட்டிருத்தலானுந் தெளிமுயலானற்போலென்றார் (எ)

(அ - கை.) கழிந்தநாட்கிரங்குவதொன்றுகூறுதல்.

மலட்டுமகனீங்கிவரக்கண்டதாய்தா.................✻
லலற்றிமகிழுமதுபோ - லுலப்பிலாச்...... ...........✻
காலங்கழிந்ததையுங்காணாத்தைக்கண்டகளிப்... ......✻
பாலுமழுதுசிரிப்பார்... ..............................✻

(இ-ள்.) (மலட்டுமகனீங்கி வரக்கண்டதாய்தா லலற்றி மகிழுமதுபோல்) எ-து.நெடுநாண்மலடிருந்து பின்னர் அரிதாய்ப் பெற்றபுதல்வன் தன்மனைவிட்டு நீங்கியயன்மனையிற்சென்று மீண்டுவரவெதிர்கண்டதாய்சென்றெடுத்து மார்போடணைத்து முன்னர் அவனைப்பெறுதகாலத்தையும் இப்போதவனைப்பெற்றுகண்ட காட்சியையும் நினைந்து தாலாட்டுதலோடழுது அவ்வழுகையோடுஞ் சிரிக்குமதுபோல் (உலப்பிலாக்காலங்கழிந்ததையுங் காணாத்தைக்கண்டகளிப்பாலுமழுதுசிரிப்பார்) எ-து.திருவருளைப் பெறுதளவிறந்தகாலம்

பிறவியில்வீழுளாய்க்கழிந்ததைக்கருதியவதனாலும் அக்காலங்களு ள்ஓர்காலமாயினுங்காணாத அத்திருவருளை யிப்போதுகண்டகளிப் பாலும் அவ்வருளைத்தோத்திரம்பண்ணமேலாடழுது அவ்வழுகையோ டுஞ்சிரிப்பார் திருவருணமேலீட்டைப்பெற்றோமென்றவாறு *

ப-ம். தாலலத்திலென்றுவமைகூறினமையால் அருளைத்தோ த்திரம்பண்ணுதல் வருவிக்கப்பட்டது. அருள்தம்மிடத்துத்தோற் றலான் அதனைமகவாவுவமித்துக்கூறினர் (அ)

(அ-கை.) சுகாதீதமுத்தியைப்பெறாது இங்ஙனந்திருவருண் மேலீட்டைப்பெற்றோர்க்குப் பிறப்புண்டாகாதோவெனின் மேற் கூறுகின்றார்.

நடைதளர்ந்துமெய்ம்மறந்துநாணமழிந்து... ... *
வுடறளர்ந்துகீழ்க்குரலிட்டுண்போய்-மடலெடுப்பாய்ச் *
சத்தாதிகெட்டுமனந்தாக்கற்றுச்சந்தழிந்த............ *
பித்தர்க்குமாகாப்பிணி............................ ... *

(இ-ள்.) (நடைதளர்ந்து மெய்ம்மறந்து நாணமழிந்துவுடறளர் ந்துகீழ்க்குரலிட்டுண்போய்) எ-து, கருவிச்சேட்டைகளடங்குத லின் நடைதளர்ந் தருளேவடிவாயிருத்தலின் உடம்புமறந்துடம்பு மறந்தலிற் பிரவஞ்சிகள்பழிப்பாரென்பது குறித்துவருநாணமழி ந்துஉண்டிமேல்விருப்பின்மையான் உடறளர்ந்து மனமவுனியாயி ருத்தலிற் கீழ்க்குரற்பேச்சாயருளமுதம் பொசித்தலிற் சிற்றுணு ண்பதாய்(மடலெடுப்பாய்ச் சத்தாதிகெட்டுமனந் தாக்கற்றுச்சந்த ழிந்த பித்தர்க்குமாகாப்பிணி) எ-து. அருளேயேயன்றி மற்றொன் றையுநாடாமையின் மடலெடுப்பான்போலாயைந்தவாவு மற்றலமை யாற் சத்தாதி விடயங்களுமிறந்து இச்சத்தாதி விடய மிறந்தமை யான்மன மொன்றோடுந்தாக்கற்று மனமொன்றோடுந் தாக்கற்ற மையால் அருளென்றுந் தானென்றுமின்றி யிரண்டற்றஇவ்வருட்ட ன்மைக்கொண்ட பித்தர்க்குஞ் சுகாதீதமுத்தியை யடந்தோனாப் போற்பிறவிநோயுண்டாகாதென்றவாறு *

ப-ம். அருண்மேலீட்டையும் பிரவஞ்சப்பற்றொழிவையுமு டையோர் தேகாந்தத் தறிவோமென்சென்று சுகாதீதமுத்தியை ய டைவாராதலிற் பித்தர்க்குமாகாப்பிணியென்றார் *

(அ-கை.) ஞானத்தைப்பெற்றோர்குணமறிவித்தல்.

குறும்பாட்டும்புன்சிரிப்புங்கூர்த்திமையாநோக்கும்*
வெறும்போகஞ்சாய்ந்தவிழினு-மறந்த.................*
திகைப்பும்விதிர்ப்புந்திமிர்ப்பும்விறைப்பு............*
முகைப்புந்தெளிந்தறிதலும்..............................*

(இ-ள்.) (குறும்பாட்டும்புன்சிரிப்புங் கூர்த்திமையாநோக்கும்) எ-து, தாமறிந்தபாட்டுகளுள் சிலபாட்டானகுருவைத்தோத்திரம்பண்ணுவதாய குறும்பாட்டும் ஆனந்த மகிழ்ச்சியாற்றோன்றும் புன்சிரிப்புமுட்புறனும் அவ்வானந்தபூரணத்தை நுண்ணிதாய்ப்பார்த்துக் கொண்டிருப்பதாய விமையாநாட்டமும் (வெறும்போகஞ்சாய்ந்தவிழினுமறந்ததிகைப்பும்விதிர்ப்புந்திமிர்ட்பும்விறைப்புமுகைப்புந்தெளிந்தறிதலும்) எ-து. தாமொன்றையும்விழையா திருப்பினுந்தமதுசந்நிதியிற் பொய்ப்போகங்கண் மிகவுஞ் சாய்ந்துவந்துகிடைப்பினும் இத்துன்பங்க ளீண்டேன்வந்ததென்று அவற்றைச்சிறிதுநினையாததிகைப்பும்அவற்றைக்கண்டபோது உடனடுக்குதலும் பஞ்சேந்திரியங்கட்குரிய விடயங்கணேர்படின் அவ்விடயச்சுவை தோன்றாததிமிர்ப்பும்-பேய் புலி காடி முதலியவந்தகாலத்துக்கற்றூண்போல்தேகமசைவறவிருக்கும்விறைப்பும் ஆனந்தமிகவும்வந்துதாக்குதலானெழுந் துகுதித்தாடுமுகைப்பும் அங்ஙனமாடியவானந்தமேலீட்டாற்றோற்றாதவ்வானந்தமேலீடுசிறிது நீங்கியபோதுஇப்போதியாமென்செய்தோமென்று தெளிந்தறிந்துகோடலுமாகிய இக்குணங்களெல்லாம் பனாயோகநீங்கியானந்தம் பெற்றோர்க்குத் தோன்றுவனவாமென்றவாறு. *

ப-ம். இங்ஙனமறிவுந்துறவு முடையஞானிகளைப் பத்தராயுள்ளாரெல்லோரும் அன்னபானம் பழங்காயாடைமுதலிய கொடுவந்துவைத்துவணங்குவராகலின் வெறும்போகஞ் சாய்ந்தவிழினுமென்றார். வெறும்போகம் பொய்ப்போகம் சாய்ந்தென்பது மிகுதிமேலேறிற்று. *

(அ-கை.) இங்ஙனம் பூரணானந்தம்பெற்றோர்க்குஆடலும்பாடலுமுண்டாவதென்னையெனின் மேற்கூறுகின்றார். *

கால்வந்தவர்க்காட்டங்கைவந்தவர்க்காட்ட.........*
மால்முந்திவந்தவர்வாய்ப்பாட்டு -மேல்கொண்ட.......*
வானந்தவுல்லாசத்தாச்சரியமாரறிவா.............*
ரூனம்போற்காணுமுலகு..............................*

(இ-ள்.) (கால்வந்தவர்க்காட்டங் கைவந்தவர்க்காட்ட மால்மூந்தி வந்தவர்வாய்ப்பாட்டு ) எ - து, பிறவிமுடவராயிருந்து இடையிற்றெய்வகதியால்கால் நடக்கவந்தவர்க்காட்ட முண்டாவதும்போலுங் கைவராதிருந்து இடையிற்கைவந்தோர்க் காட்டமுண்டாவது போலுந்தாங் கூடியனுபவித்த பெண்மேலாசை தலைமீக்கொண்டுவந்தவர் வாய்ப்பாட்டும்போலும் (மேல்கொண்ட வானந்தவுல்லாசத்தாச்சரியமாரதிவ ரூனம்போற்காணுமுலகு ) எ - து, தம்மைமறைத்து மேற்கொண்டெழுந்த ஆனந்தவுல்லாசவதிசயத்தால் அவர்க்காடலும் பாடலு முண்டாம் அவ்வானந்தாதிசயத்தை அதனைப்பெற்றஞானிகளறிவதன்றி மற்றையாரறிவார் அவர்க்காடல் பாடல்களைப்பயித்தியமிகுதியாலுண்டாவனபோற்காண்பாருலகத்தார் எ - று*

ப-ப். நெடுநாட் காலுங் கையும் வராதிருந்து இடையிலவை வந்தோர்க்கு ஆட்டமுண்டாவதுபோல் அளவிறந்தகாலமும் மலச்சிறையில்கிடந்தோர்க்கு இப்போதச்சிறை விடுதலையாய்ப் பரிபூரணவடிவைப்பெற்றமையால்இவர்க்காடலுந் தாமனுபவித்த பெண்ணின்பவாசனையுளத்திருத்தலான் அவர்க்குப்பாடலுண்டாவது போற் றுன்பப்போகத்தையே யளவில்காலம்புசித்தோர்க் கிப்போது நிரதிசயானந்தங் கிடைத்தமையாற் பாடலு முண்டென்பது இவ்வுவமைகளாற்காண்க. ஊனம்போலென்றவுமையா லூனமன்றென்பதாயிற்று. உலகென்பதாகுபெயர். கைவந்தவர்க்காட்ட மென்பதற்கருத்தம். ஓர்வித்தையாதி முன்கைவராதிருந்து பின்கைவந்ததுபோது ஆட்டமுண்டாவதும்போலுமென்கினுமாம் (௰க)

(அ-கை,) ஆனந்தமவுன மதனையடைந்தஞானிகள் போதமிறந்தோராகலின்இங்ஙனம் நிர்விகாரியாயிருந்தோர்க் கந்தவிகாரிகள் போலும் ஆடல்பாடலெங்ஙன முண்டாமென்ற மாணுக்கனைநோக்கிஅவர் நிர்விகாரிகளாயிருந்தேயாடுவர்பாடுவரென்றறிவித்தல் ... *

அறிவுபறிகொடுத்திவ்வாக்கையறமாறிப்...... ... *
பெறுதியிழப்புதியாப்பித்தி-னறிசென்... ............ *
றலையற்றநீத்தமோராளற்றகப்ப.....................*
லுலைவுற்றதோநிற்பதோ........................ *

(இ-ள்.) (அறிவுபறிகொடுத்திவ் வாக்கையறமாறிப் பெறுதியிழப்புதியாப் பித்தினறிசென்று) எ - து, முன்னர் விடயானந்தத்திற்குத் தமதறிவைப்பறி கொடுத்ததுபோல் இப்போதுமாதிச் சொரூபானந்தத்திற் கவ்வறிவைப் பறிகொடுத்து முன்னர்க்கூடியிருந்த

இம்மாயாவடிவமறந்துபோக விப்போதருள்வடிவாய் மாறிப்பெற் றஅவ்வருளேவடிவாகலின் ஓர்பொருளைப்பெற்றேமெனனும் பெ றுதியும் ஓர்பொருளையிழந்தோமென்னுமிழப்பும் இவற்றுன்வரு மிதாகிதங்களுந்தோன்றாத ஆனந்தப்பயித்திய மீக்கொண்டோரி டத்துச்சிறிதேனும் விகாரமுண்டாகாதினை யறிவிற்சென்றுபார் த்தறிதி அஃதன்றி (அலையற்ற நீத்தமோராளர்றகப்பலுலைவுற்றதோ நிற்பதோ) எ-து, அலையின்றியசாகரத்தினிற்குமோராளுமின்றிய கப்பல் அசைவுற்றோவசைவற்றுநிற்கிறதோ அஃதெங்ஙனமசைவ ற்றுநிற்கின்றததுபோலும் மவுனானந்தசாகரத்தின் முப்பத்தாறுத த்துவங்களுந் தற்போதமுமிறந்துநின்றஞானிகளும் அசைவிலரொ ன்றுஇத்திட்டாந்தத்தானுங்கண்டுகொளென்றவாறு. *

க-து. அலையற்றநீத்தத்தைமவுனானந்தத்திற்கு மாளர்திருத்த லைக்கருவிகளிறந்துநிற்றற்குமசைவற்றகப்பலைப் போதமிறந்தஞா னிகளதறிவிற்குமுவமித்தார். அறிவுபறிகொடுத்த லானந்தமயமாய முந்தல். (௰௨)

(அ லக.) அவர்பாடினாடினாராயினும்விகாரிகளலரொன்றறி வித்தல். *

செகஞ்சிரிக்கத்தாஞ்சிரித்துச்சிபேயென்றேட்டி *
லகம்புறங்காடெச்சுக்குற்றற்றுத்-திகம்பரியாய்த் ......*
தானந்தம்பாடிவிண்ணிற்றட்டத்துணங்கையடித் ......*
தானந்தக்கூத்துநடிப்பார்.................... ......*

(இ-ள்.) (செகஞ்சிரிக்கத்தாஞ்சிரித்துச்சிபேயென்றேட்டி லகம் புறங்காடெச்சுக்குற்றற்றுத்திகம்பரியாய்) எ-து, உலகநல்லடதெ ரியாதபேயரொன்று சகத்தோர்தம்மை மட்டார்த்துச்சிரிட்டஞானநெ றிதெரியாதமலப்பேயரென்று தாமுமவரைப்பார்த்துச்சிரித்து பு றந்தின்னைபொதுச்சாவடிகளிற்றுமிருந்தவிடத்தவர்வந்து சிபேய ரேபோமென்றேட்டினவியாதொன்றுக்கூறாதவ்விடம் விட்டுநீங்கி புறங்காட்டைநன்மனைபோர்கண்டசுத்தமென்னும் அருவருப்பச்சி றிதுமற்று திகம்பரிகளாயவ்விடத்திருந்து (தானந்தம் பாடிவிண் ணிற்றட்டத்துணங்கையடித்தானந்தக்கூத்துநடிப்பார்) எ-து, தம துபோதநாசமானவிடத்துப்பாடிச் சிதாகாச வெளியிற்பொருந்த நின்று துணங்கைக்கூத்திற்குரித்தாப்படிகையடித்து ஆனந்தநட னம்பண்ணுவார்அவ்வானந்தபூரணராயினரொன்றவாறு. *

ப-ம். உலகர்க்குஞானிகண்மாறுபாடாயிருத்தலானும் ஞானிகட்குலகர்மாறுபாடாயிருத்தலானுஞ்செகஞ் சிரிக்கத்தாஞ்சிரித்தென்றார். உலகத்திற்குஞானம் பேய்-ஞானத்திற்குலகம் பேயென்னுமுலகவழக்குமது பிரவஞ்சமெல்லாம் ஆனந்த பூரணமாய்த்தோற்றலிற்சுடுகாடசுத்தமவர்க்குத்தோற்றாதென்பதறிக. தானந்தம்பாடிபென்றதனாற்போதமிறந்துநின்றுபாடினுரென்பதும் விண்ணிற்றட்டநடிப்பாரென்பதனால்நடிப்பாரென்பதுங்காண்க. (௰௩)

(அ-கை,) நீர்கூறியவாறேயெல்லாவற்றையுந்துறந்து சிவவேடம்பூண்டுகொண்டு தவங்களைச்செய்து சிவாலயங்கடோறு மாடிப்பாடியழுதுசிரிக்கின்றார் நிர்விகாரிகளலரோவெனின் மேற்கூறுகின்றார். *

விபரீதப்பூணுமுடையும்விளியா......................*
லபிமானமு மவராலாட்டுந்-தவசுபோற்................*
செய்யுஞ்சடங்குந்திகைப்புஞ்சிதம்பரத்தி............*
லையன்றனக்கறியலாம்..................................*

(இ-ள். (விபரீதப்பூணுமுடையும்விளியா லபிமானமுமவராலாட்டுந்தவசுபோற்செய்யுஞ்சடங்கும்) எ-து, பார்த்தபேருக்குவிபரீதமாய்த்தோன்றும்படி சிரஞ்செவிகளங்கரமார்புகளின் மிகவும்பூண்டுகொளுமுருத்திராக்கப்பூண்களும் உத்தூளனமும் ஒட்டுவேட்டியுடையும் வார்த்தைபினுல் யாஞ்சிவமதமென்றுபிடித்துப் பேசுமபிமானமும் அவரிடத்துண்டாமாடல்பாடல்களுந்தபசும்பாற்செய்யுமனுசாரங்களும் திகைப்புஞ்சிதம் பரத்திலையன்றனக்கறியலாம்; எ-து. அவ்வேடத்திற்கு நடைக்குமுரியபரிபூரண ஞானமகத்தின்றித்திகைத்திருத்தலுமாகிய இவையுடையாரதுகருத்தினைச்சிதாகாசத்திற்பஞ்சகிருத்தியநடனம்பண்ணுநின்றபரமசிவனதுதிருவுளத்திற்கேயறியலாமன்றிமற்றையர்க்கறியலாகாதென்றவாறு. *

ப-ம். ஆபரணம்போற்பூண்டுகோடலின் உருத்திராக்கத்தைப்பூணென்றார். உருத்திராக்கங் கூறினமைபால் உத்தூளனமும்வருவிக்கப்பட்டது. அகத்துஞானமின்றிப்புறத்திங்ஙனங் காட்டுவனவெல்லாந்தற்போதத்தாலுண்டாவதாகலின் இவர்நிர்விகாரிகளலரென்பதுங்காண்க. இவர்களுஞ்ஞானிகள்போற்பிறர்க்குத்தோற்றலிற்சிதம்பரத்திலையன்றனக்கறியலாமென்றார். (௰௪)

(அ-கை.) இங்ஙனம் ஞானிகள்போல் நடிக்கின்றேரைப்

பொய்ஞ்ஞானிகளென்றறிவித்து மெய்ஞ்ஞானிகளினதுகுண மின்னுங்கூறுகின்றார். *

மாலயனுயிந்திரனுய்வாழுவதாய்மாளுவதாஞ்......*
சாலமயல்பார்த்துத்தலையசைப்பர்-ஞாலமயங் ... ...*
குன்மத்தக்கோரணிபார்த்தோகோவெனச்சிரிப்பர்...*
தன்னைப்பார்த்தாடுவர்தாந்தாம்............................*

(இ-ள்.) (மாலயனுயிந்திரனுய்வாழுவதாய் மாளுவதாஞ்சாலமயல்பார்த்துத்தலையசைப்பர் ஞாலமயங்குன்மத்தக் கோரணிபார்த்தோகோவெனச்சிரிப்பர்) எ-து. தேவர்கட்கெல்லாமேலாய் மாலென்னும் பெயரையுடையனுகியும் அயனென்னும்பெயருடையனுகியும் இந்திரனென்னும் பெயருடையனுகியுஞ் சிறந்துள்ளார்தத்தம் பதவிகளிலழிவின்றிவாழ்வதாய்க் கருதிக்கொண்டிருந்து பன்னுளின்மாண்டுபோவதாகும் அவரதுமிகுந்தவாணவமயக்கத்தைப்பார்த்துஇவ்வாணவமவர்களையும் பொய்யாகிய தேகாதிகளையு மெய்யாய்க்கருதப்பண்ணிமயக்கிற்றுக் கண்டீர்கொலோ வென்றுளத்துநாடிச்சிரக்கம்பங்கொள்வர் அவ்வாணவத்தா னிவ்வுலகத்தார் மயங்காநின்றபயித்தியக்கோரணிக் கூத்தைப்பார்த்து ஓகோவெனப்பிறர்க்குக்கேட்கச்சிரிப்பர்(தன்னைப்பார்த்தாடுவர்தாந்தாம்) எ - து, அஃதன்றித்தம்மைப்பார்த்துத் தம்மைச்சிவபூரணம் விழுங்கிக்கோடலாற்காணுதுதாமச்சிவபூரணந்தாமெனநடனம்புரிவாரென்றவாறு. *

ப-ம். மாலயன் இந்திரன்முதலியோர் இறந்துபோவதாகமப்பிரமாணத்தாலறிவதாகலின் அவரதுமயல் பார்த்துத்தலையசைப்பரென்றார். பித்தமேறினோன் றன்னுடம்புதெரியாதுலகர் நடைக்குமாறுபாடாய்த்திரிவதுபோல் ஆணவமேலிட்டாற்றம்மைத்தெரியாது ஞானிகணடைக்குமாறுபாடாய்த் தேகபோகங்களை விழைந்துகொண்டு அறுவகைத் தொழில்களினுமபேதமாய் முயற்சிப்படலானுன்மத்தக்கோரணியென்றார். அவர்மருளான்மயங்கி நடிக்கின்றார்இவரருளாற் றெளிந்துநடிக்கின்றாரென்பதுங்காண்க. தாந்தாமென்பது அந்நடத்திற்கோர்தாளமுமாமெனக்கொள்க. (௫௫)

(அ-கை.) இதுவுமது.

ஆசைமுதலானவனைத்தும்போய்நானதுவாம்...*
வாசனையுமாண்டுமேறந்தறியா-நேசத்...... ... .........*

துறும்போகவுல்லாசவூமைக்கூத்தாடிக்.......................*
குறும்போக்குவந்துநடப்பார்...............................*

(இ-ள்.)(ஆசைமுதலானவனைத்தும்போய்நானதுவாம்வாசனையுமாண்டுமறந்தறியாம்நேசத்துறும் போகவுல்லாச வூமைக்கூத்தாடி எ-து, ஐந்தவாமுதலியகருவிகளனைத்தும்மிறந்து யானச்சிவத்தோட்த்துவிதமானேனென்பதாகிய வாசனையுமிறந்து தற்றெரிசனந்திருவருட்டெரிசனங்களினின்றோரோர்காலையவற்றைமறந்து மீண்டுமறிவதும்போன் மறந்தறியாத நேயத்துத் தோன்றும் பூரணானந்த போகவுல்லாசத்தோடு மவுனக்கூத்தாடி (குறும்போக்குவந்துநடப்பார்) எ-து, பின்னர்சிறிதிடஞ்சென்று மீண்டுவந்துமுலாவுவாரவ்வத்துவிதானந்தம்பெற்றோரென்றவாறு. *

ப-ம். விடயங்களிற் செல்லு மைந்தவாவுநீங்கவே அவ்விடயங்களைபறிந்துபற்றியவற்று ளழுந்துவதாய இருவகையிந்திரியங்களும் அந்தக்கரணங்களுநீங்கும் இவைகணீங்கவேயொழிந்தகருவிகளும் நீங்குமாகலின் ஆசைமுதலானவனைத்தும்போ யென்றாசையைமுன்வைத்துக்கூறினார். நேயத்தழுந்தியபோது போதமிறத்தலின்மறந்தறியாநேயமென்றார். சிறுபிள்ளைகள்போல்உலாவி விளையாடுவாராகலிற்குறும்போக்குவந்துநடப்பாரென்றார். (மகூ)

(அ-கை.) கருவிகளும்போதமுமிறந்து நேயத்தழுந்தினோர் கருவிகளும்போதமு முடையோரது மயக்கமுந் தமதுந்தெளிவுமெங்ஙனமறிவாரெனின்மேற்கூறுகின்றார். *

நோடுஞ்சுகமுமுதலெல்லாங்கீழ்ப்படுத்திக் ...*
கூடுஞ்சுகம்போலக்கொள்ளாதே-நாடுநகும்......*
பூனைக்கண்ணேரிபொருப்பேறிபோலுச்சிப் ...*
பானுப்போனீயவனைப்பார்.........................*

(இ-ள்.)(நோடுஞ்சுகமுமுதலெல்லாங்கீழ்ப்படுத்திக் கூடுஞ்சுகம் போலக்கொள்ளாதே) எ-து, துக்கமுஞ்சுகமுமிவற்றிற்குமுதலாயுள்ளநேகாதிப்பிரவஞ்சமெல்லாமுங்கீழ்ப்படுத்திநீக்கிநேயத்தைக்கூடும்பரமுத்தர்குணம்போலச்சீவன்முத்தர்குணத்தை நீகருதிக்கொள்ளாதே அஃதெங்ஙனமெனின் (நாடுநகும் பூனைக்கண்ணேரிபொருப்பேறிபோலுச்சிப் பானுப்பேனீயவனைப்பார் எ-து, நாட்டின்கணுள்ளார்பார்த்துநகையாநின்றவிருட்டைச்சிறிதேனுமின்றியிரவினும்பகலினுமதியும் பூனையினது கண்ணைப்போலும் எரிக்கனை

மேலேறினானைப்போலும் மலையின்மேலேறினானைப் போலும் மத்தியானத்துச் சூரியனைப் போலும்நீஅச்சீவன் முத்தரறிவையும் பார்த்தறிதியென்றவாறு. *

ப-ம். பூனைக்கண்ணிற் கிரவினும்பகலினும் பொருள்கடோற் றுவபோலும், எரிக்கரைமேலேறிக் கிருபாலுந்தோற்றுவம்போலும் பொருப்பேறிக்கு நிலத்திற்பொருளும் பொருப்பிற் பொருளுந் தோற்றுமாபோலு, முச்சிப்பானுவிற் குதயமாகுந் தானமு மத்தமிக்குந்தானமுந் தோற்றுமாபோலும், பிறப்பிற்றுன்பமும் வீட்டினின்பமும் அவர்க்குத்தோற்றுமாகலினங்ஙன மூவமை கூறினர். இருளானறியுங்கண்ணிற்கொளியிற் பொருடோற்றாததுபோற் பெத்தர்களென்பது, மொளியானறியுங்கண்ணிற் கிருளிற் பொருடோற்றாததுபோற் பரமுத்தரென்பது, மிருளினுமொளியினுமறியுங்கண்ணைப்போற்சீவன்முத்தரென்பதும், பூனைக்கண்ணென்னுமுவமைக் குறிப்பாற்கொள்க. பரமுத்தர்தனுவாதிகளை நீங்கிநேயத்தழுந்தினோர், சீவன்முத்தர் அத்தனுவாதிகளோடுகூடியுங்கூடாமனின்று நேயத்தழுந்தினோராகலின் இச்சீவன்முத்தராவரிவரென்று இதனுட்பகுத்தறிவித்தார். எரியென்பதனை யெரிக்கரைமேலேறி யென்பதனோடுங்கூட்டுகநாடுநகுமென்பதுபூனைக்கண்ணிற்கடை. (௰௭)

(அ-கை.) ஞானிகளாயினர் மவுனமாயிருப்பதன்றி யிவராடலாதிகளைச்செய்வதென்னையென்று சரிதாதிகளினிற்போர் சொல்லார்களோவெனின் மேற்கூறுகின்றார். *

சூலையும்பேயும்பிடித்துழல்வார்சும்மாநம்... ......*
போலறிவீரொன்றுரைத்தபுத்திபோல் - மூல... ......*
விருளான்மறந்தறிவாரீதென்றுமென்பா...........*
ரருளாலறிந்தறிவாரை..................... ......*

(இ-ள்.) (சூலையும்பேயும்பிடித்துழல்வார்சும்மாநம்போலறிவீ ரொன்றுரைத்தபுத்திபோல்) எ-து, பொதுமாதர் கூட்டரவான் வருஞ்சூலைநோயுநற்குணத்தைமாறுபடுத்தும்பேயும்பிடித்து அவற்றான் வருந்திச்சுழல்வார் இச்சூலையும்பேயுங்கொண்டு சும்மாவெமதறிவைப்போனீருமறிவீரென்று நற்குணத்தோர்க்குச் சொன்ன புத்திபோல் (மூல விருளான்மறந்தறிவாரீதென்றுமென்பா ரருளாலறிந்தறிவாரா) எ-து, மூலமலவிருளாற்றம்மைமறந்து மாயாகாரிய மாகிய தனுவாதிகளை யானெனதென் றறிவா ரருளால் அத்தனுவாதிகளைப் பொய்யென்றறிந்துநீங்கித் தம்மையுந்தமக்குரிய பேரின்பத்தையு

மறிந்துளாரைப்பார்த்து பித்தரைப்போ னீர்செய்யு மாடல்பாடல் களிதென்னேயென்று சொல்வாரதுகொண்டு இவர்க்கோரிகழ்ச்சியு மின்றென்றவாறு. *

ப-ம். சூலேயும்பேயும் பிடித்துளோர்புத்தியை யவை பிடியா தரற்குணத்தோர்கேளாததுபோற் சகலகேவலத்தி னிற்போர்சொற் களையவற்றைநீங்கிச் சுத்தத்தினிற்போர்கேளா ரென்பது இவ்வுவமை யானறிக, சூலேயும்பேயுமென்றது ஏகதாரவிரதியாயிலிங்க விரதியா யிருப்போர்க்குப் பொதுமாதர்கூட்டரவு மைவராசர் முதலியமரு ளேற்றிக்கொள்வதுநன்றென்றுபிறர் கூறுவனபோலென்பதுமாம்.

(அ-கை.) ஞானிகளின்மகிமையை யுலகருஞ் சரிதாதிகளினிற் போருமறிகிலரொன்றுமேற்கூறுகின்றார். *

மருண்மூகர்வாக்கறியவல்லரோமாயா.......... .......*

விருளேயொளியாயிருப்ப - ரருளுருத்த................*

பேயனைப்பேயென்ருரோபித்தநாப்பாலிருட்கண்... *

பார்வைக்குப்பானுபகை.......................... .........*

(இ-ள்.) (மருண்மூகர்வாக்கறியவல்லரோமாயாவிருளேயொளி யாயிருப்பர்) எ-து, பித்தமேறியஆமைகள்நல்லறிவாளர் கூறுமறநெ றிவாக்கினையுட்கொண்டறியவல்லரா அதுபோல் உலகத்தார் ஞானி கள்கூறுந்திருவாக்காணுயினும் அவர்களை ஞானிகளென் றறிய வல்ல ரோஅஃதன்றி தாங்கற்றநூலறிவுஞ்சரிதாதிகளுமாகிய மாயா விரு ளைத்தானே ஞானப்பிரகாசமாய்க்கருதிக் கொண் டிருப்போர் (அ ருளுருத்த பேயனைப்பேயென்ருரோ பித்தநாப்பாலிருட் கண்பார் வைக்குப்பானுபகை) எ-து, மும்மலங்களையுந் தற்போ தத்தையுங் கோபித்தவருளாகிய பூரணப்பேய்பிடித்த பேயனைப் பேயென்று சொல்லார்களோ அங்ஙனமிருந்தோர் இங்ஙன மிருந் தோரைப்பே யென்றிகழ் வானே னெனின்- மதுரமாகியபால் பித்தமேறிய நா விற்குப்பகையானதுபோலும் பேரொளிப்பிரகாசமாயிருந்த பா னுவிருளையொளிவாகக்காணும்இருட்கண்பார்வைக்குப் பகையான துபோலும் ஆனந்தமுந்திருவருளுமலமேலிட்டா லவர்க்குப்பகை யாமாகலின் இவற்றைப்பெற்றஞானிகளும் பகையாய்த் தோறறுவரீ தேயவரிகழ்தற்குக்காரணமென்றறிகியென்றவாறு. *

ப - ம். மருண்மூகர்வாக்கறியவல்ல ரோவென்ற துலகத்தார்க் குவமை-நாலுணர்ச்சியோடுஞ் சரிதாதிகளினிற்போ ரிகழ்வா ரொன்

பது பரஞான மின்மைபாலெனக்கொள்க. பானுப்பகையென்பத னைப்பால்பகை யென்றதனோடுங்கூட்டுக. கைப்பாயுமிருளாயுமாறு படத்தோற்றலிற்பகையென்றார். *

(அ - கை.) ஞானிகண்மகிமையைமானிடரறியாரெனினுந் தேவர்களறிவாரென்றும்மேற்கூறுகின்றார். *

அடைப்புள்ளாயாளடர்ந்தவாமையாய்த்திக்கே... *
யுடுப்பதாயோர்ந்துழல்வார்க்கூரார்-நடைப்பிணமே *
யூமைப்பேயாரெனினுமோலமிடுந்தேவர்குழாஞ் ... *
சேமக்கோலாளிந்திரர்............................. *

(இ-ள்.) (அடைப்புள்ளாயாளடர்ந்த வாமையாய்த்திக்கே யுடுப்பதாயோர்ந்துழல்வார்க்கூரார்)எ - து, நேயநிட்டைமாறுதிருத்தலின்முட்டைகளைவைத்து அவையங்காக்கு மடைப்புட்போலாய்த்தாமிருந்தவிடந்தேடிச் சிலரன்னாதிகளைக் கொடுவந்துவைத்து வணங்கியுபசாரங்கூறினும் இந்திரியங்களைந்தையும் அவற்றிற்செல்லவொட்டா துள்ளடக்கிக் கொண்டிருத்தலின் ஆளடர்ந்தவாமைபோலாயிவ்வுடையைத்துறந்து திக்கெல்லாம்பரிபூரணமாயுள்ள வுடையைத்தம்மைத்தெரியாது சூழவுடுத்திக்கொண்டிருத்தலிற் றிக்கேயுடுப்பதாயிங்ஙனந் தேர்ந்துலாவுவார்க்கூரின்கணுள்ளார் நன்றுகூறினுந்தீதுகூறினுமூரவரோபகைவரோ இவரியாவர் (நடைப்பிணமேயூமைப்பேயாரெனினுமோலமிடுந் தேவர்குழாஞ் சேமக்கோலாளிந்திரர்) எ-து, அஃதன்றிநடையாடியபிணம்போற் றிரிந்தாரெனினும்மூமைப்பேயைப் போலிருந்தாரெனினும் அவரது மான்மியத்தைத்தேவர் கூட்டங்களெல்லாமறிந்து சூழ்ந்துகொண்டு தோத்திரம்பண்ணுநிற்பர்இந்திராதிகளவர்க்கேவற்பணிவிடை செய்யுஞ்சேமக்கோலாள்களாய்த்திரிவரென்றவாறு. *

ப-ம். அடைப்புண்முட்டையைச் செட்டையாலடக்கிக்கோடல்போல் அண்டங்களை யெல்லாந்தமதுபூரணத்தான் மறைத்துக்கொண்டிருப்பரென்பதுமாம். ஆளடர்ந்தபோதாமை யைந்துறுப்பையுமடக்கிக்கோடல்போல் விடயங்கணோர்படின் அவைாைந்தையுமடக்கலின் அங்ஙனமுவமைகூறினார். ஊரென்பதூரின்கண்ணுள்ளார்மேலேறிற்று. தேர்ந்துழல்வார்க்கூரினுள்ளாரியாவரெனக் கூட்டுக,கருவிச் சேட்டைகளிறந்துநிற்றலி னடைப்பிணமென்று மவுனத்தமாயிருத்தலின் ஊமைப்பேயென்று மொன்றினுமவாவற்

றமெய்ஞ்ஞானி தேவருலகத்துமின்மையால் ஒலமிடுந்தேவர்சூழா மென்றுஞ்சேமக் கோலாளிந்திரனொன்றுங் கூறினர். அந்தஞானிகட் சேவல்செய்வனுமிகவுஞ்சிறப்பாகலின் அவர்பிடிக்குங்கோலைச் சேமக்கோலென்றார். உம்பநதிரருளராகலின் இந்திரனொன்றுபன்மை யாய்க்கூறினர். (உய).

(அ-கை.) (இங்ஙன மகிமையுள்ளஞானிகளெத்தேசத்திற் செல் வரெவ்விடத்திருப்பாரெனின்மேற்கூறுகின்றார், *

செத்தவரைப்போலத்திரும்பாமற்போகலுமா... *

மெத்திசையுமொன்றென்றிருக்கலுமா-முத்தர்தமக் ...*
கண்டமனுச்சிற்றிலாடரங்கந்தேகமல்லாற்............ *
கண்டிடுகைக்கேதுமில்லைக்காண்..................... ... ... *

(இ - ள்.) (செத்தவரைப் போலத்திரும்பாமற்போகலுமா மெத் திசையுமொன்றென்றிருக்கலுமாமுத்தர்தமக்கு) எ - து,முத்தர்தம க்குச்செத்தவரைப்போலத்தாமிருந்துநீங்கிய பதிபின்மீட்டுந்திரு ம்பாமற் சேறலுமாதும௦ஃதன்றி எலலாம்பரிபூரணமாய்த் தோற்ற மெனைமக்கெல்லாத்திக்கு மொன்றாகனேயென் றோரிடத் திருத்த லுமாகும் (அண்டமனுச்சிற்றிலாடரங்கந் தேகமல்லாற் கண்டிடுகை க்கேதுமில்லைக்காண்) எ-து, அஃதன்றித் தேகங்களான் மாகட்குச் சிற்றிலிழைத்தற்கிடமெனவுமண்ட மவ்வான் மாக்கட்கு மாயாகோ ரணிக்கூத்தாடற்கு ஓராடரங்கெனவுங் காண்பதல்லாமல் அம்முத்தர் தமக்குவேறுகாண்கைக் கியாதொருபொருளுமில்லையென்றவாறு *

ப - ம். உடற்கணிருந்துநீங்கியவுயிர்மீட்டும் வந்தகனுட்புகாத தூபோற்று மிருந்து நீங்கியபதிபின்மீட்டுவந்துபுகாமையிற் செ த்தவரைப்போலத்திரும்பாமற் போகலுமாமென்றார். அனுவென்ப தான்மா-தேகஞ் சிற்றிலெனவுமண்டமாடரங்கெனவு மாறிக்கூட்டுக. பிரவஞ்சமெல்லாம் அண்டபிண்டங்களுளடங்குமாகலிற் கண்டிடு கைக்கேதுமில்லைக் காணென்றார். முக்தர்தமக்கென்பது நடுநின்றிரு பாலுங்கொண்டுமுடிதலிற் றுப்பிசைப்பொருள்கோளு நடுநிலைத் தீபமுங்காண்க. *

(அ-கை) அவர்நிற்குநிலையும் அவர்நடக்கும்போ திருக்குங்கு ணமும் அவர்க்கோரூர்நியமமின்றென்பதுமேற்கூறுகின்றா ... *

உடற்போகம்போகவுயிர்ப்பகைபோய்ப்பெருங்...*
கெடத்தானுந்தன்னறிவுங்கெட்டோர்-நடக்கும்போ...*

தாகாயஞ்சாணிடல்போலாவதலாற்பூரணர்க்குப்......*
போகாவூருண்டோபுகல்.................... ...........*

(இ-ள்.) (உடற்போகப்போகவுயிர்ப்பகைபோய்ப்பேறுங்கெ டத்தானுந்தன்னறிவுங்கெட்டோர் எ-து, உடம்பானனுபவிக்கும்வி டயபோகம்போக அப்போகமாகிய துன்பத்தை யின்பம் போன் மாறுபாடாய்த்தோற்றுவிக்கும்உயிர்ப்பகையாகிய ஆணவம் போய் ப்பேரின்பத்தைப்பெற்றோமென்னும் பேறும் போகத் தன்னையுந் தனக்கறிவிப்பதாயவருளையுமிழந்துளோர் (நடக்கும் போதாகாய ஞ்சாணிடல்போலாவதல்லாற்பூரணர்க்குப்போகா வூருண்டோ பகல் எ-து, ஓர்திசையிற்செல்லும்போது ஆகாயத்தைச் சாணிட்டளப்ப துபோலப் பரிபூரணர்க்குத் தமதுபூரணத்திற் றான்செல்வதுபொ ற்றோற்றமல்லாமல் இதுதிசையென்றபகுத்துப்பார்த்துப் போகாது. தவிருமூருமுண்டு கொல் நீபுகலுதியென்றவாறு. *

க-து. ஆணவத்தாலின்பமாய்த்தோன்றிய போகந் துன்பமா ய்த்தோன்றியபோது அவ்வாணவங்கெடும் அவ்வாணவங் கெடவே தற்றெரிசனமுந்திருவருட்டெரிசனமும் பரையோகமு மானந்தப் பேறுமுண்டாம் ஆனந்தப்பேறிழந்தவிடத்துத் தானுந் தனக்கறி வித்தவருளுமின்றா மாகலின் உண்டாமவைகளுமின்று மிவைக்குங் காரணமிவையென் றுடற்போகவிழப்பையு முயிர்ப்போக விழப் பையுமெடுத்தறிவித்தார். ஆகாயத்தைச் சாணிட்டளக்கும்போ தள ப்பதுபோற் றோன்றிவிடுத்தபோதளந்தது மின்றுய்விடுத்தது மின் றாயிருத்தல்போற் பூரணர்க்குநடக்கும்போதும் அப்பூரணமாறாத தனுணடப்பதுபோற் றோன்றியோர்தானத்திருந்த விடத்து முன் னடந்தோமென்பது மிப்போதிருந்தோமென்பதுந் தோன்றா கலின் ஆகாயஞ்சாணிடல்போமலென்றுவமைபகூறினர். (௨௨)

(அ-கை.) ஆயினவர்க்குநற்றானமுந்தீதாய தானமுஞ்சரியோ வெனின்மேற்கூறுகின்றார். *

தருவனமென்றண்டுகுடைசாய்மரையாய்வாழு... ...*
நரவனமென்மேல்கீழ்நடுவென் - பரமசிவன்... ......*
றூக்கற்றதுபோலருள்சிவனைச்சாராபோற்...... .. ...*
றூக்கற்றார்க்கெங்குஞ்சமன்...................... ..........*

(இ-ள்.) தருவனமென்றண்டுகுடைசாய்மரையாய்வாழு நரவன மென்மேல்கீழ்நடுவென்) எ - து, தருக்கநெருங்கிய சோலை யாயி

னென்னை, முட்செறிந்தவனமாயினென்னை, சிவிகை கவிகை சாமரைமுதலியனவுடையராய் வாழுநராகிய வடவியாயினென்னை, யுத்தமமத்திமவதமமாயுள்ள தலங்களாயி னென்னை (பரமசிவன்றாக்கற்றதுபோலருளசிவனைச்சாராபோற்றாக்கற்றார்க் கெய்குஞ் சமன்) எ-து, பரமசிவன் எல்லாவற்றோடுங் கூடியிருந்தும் அவற்றுட்டாக்கற்றிருந்ததுபோலுந் திருவருளானது கிருத்தி யங்களைந்துந் தன்னுளடக்கவுஞ் சிவத்தைவிட்டு நீங்காதிருப்பதே யன்றி இக்கிருத்தியங்களைந்தையு மொழித்தச்சிவத்தைச் சார்வோ மென்று சாராதவாறுபோலும் ஒன்றோடுந்தாக்கற்றஞானிகட்கு முற்கூறிய விடமெல்லாஞ்சரியாமென்றவாறு. ✻

ப-ம். கருவிகளெல்லா வற்றோடுங் கூடியிருந்தும் அவற்றுட்டாக்கற்றுநிற்றலாற் பரமசிவன் றாக்கற்றதுபோலென்றுந் தேகவிந்திரிய அந்தக்கரணங்கள் தம் மாற்றொழிற்படினுந் தாஞ்சிவத்தைவிட்டுநீங்காதிருப்பதேயன்றி இத்தேகவிந்திரியாதி களினது தொழில்களையொழித்து அச்சிவத்தையடைவோ மென்பதின்றிப் பரிபூரணமாயிருத்தலின் அருள்சிவனைச்சாராபோலென்றுங்கூறினர்- (உரு)

(அ-கை.) அவாதுகருத்துப்போதமிழந் திருப்பதேயன்றிமற்றொன்றுமின்றென்று மேற்கூறுகின்றார். ✻

தன்னையருளாலறிந்துதாமறிந்ததெல்லாம்போ..... ✻
யிம்மைப்பெருவாழ்வையெய்தினர்க்கு - முன்னே... ✻
நடந்தறிந்தபோதநசிப்பேயிருக்கு............ ...... ✻
மிடம்புறங்காடென்பதில்லை.................. ...... ✻

(இ-ள்.) (தன்னையருளாலறிந் துதாமறிந்ததெல்லாம்போ யிம்மைப்பெருவாழ்வையெய்தினர்க்கு) எ-து, கருவிகண் முப்பத்தாறையுங்கடந்து தம்மையருளாலறிந்து அங்ஙனந்தம்மையறிந்தபின்னர்தம்மையறிவித்த அருட்டெரிசனமுதலாய்த் தாமறிந்தவையெல்லாநீங்கி யிம்மைக்கண்ணேசுகாதீதமாகிய பெருவாழ்வை யடைந்தோர்க்கு (முன்னேநடந்தறிந்தபோதநசிப்பே யிருக்குமிடம்புறங்காடென்பதில்லை) எ-து, கருவிகளையுந் தற்றெரிசனமுதலியவற்றையும் இதுவிதுவென்றறிந்தவற்றை நீங்கிச்சென்று சிவத்தை யறிந்து அதனுளிறந்தபோத மீண்டெழாததனைக் கெடுப்பதே யிருக்குமன்றியிதுசுத்தமாகிய விடமென்பதும் இதுபுறங்கா டென்பது மின்றென்றவாறு. ✻

ப-ம். தற்றெரிசனமுடைய வற்றளூறதியாய்நின்றோர் மறு
மைக்கண்ணடையுஞ்சுகாதீதமுத்தியையிவரிம்மைக்கண்ணே யடை
ந்தாராகலின் இம்மைப்பெருவாழ்வையெய்தினரொன்றார். எல்லாவற்
றையுநீங்கிச் சென்றமையானடந்தென்றார். (௨௪)

(அ-கை.) இங்ஙனமிருந்தஞானிகட்குச் சாதிநடை சமயந
டையின்றோவெனின்மேற்கூறுகின்றார். *

காமாதிவிட்டுக்கரமேகலமாகிப்............ ......*
பூமிதேகைகாலைப்போர்த்துறங்கி - நாமகுணஞ்......*
சாதிகருமமெனும்வாதனையிற்றாக்கற்றார்க்......... ...*
சேதுசமயமெனலாம்...... ....... ............. ......*

(இ-ள்.) (காமாதிவிட்டுக்கரமேகலமாகிப் பூமிதேகைகாலைப்
போர்த்துறங்கி) எ-து. காமக் குரோத லோப மோக மதமாச்சரிய
ங்களையெல்லாம்விட்டுநீங்கிக் கரமேயுண்கலமாகி மனோதாரம்பிச்
சையெடுத்துண்டு பொதுச்சாவடிபுறந்திண்ணைபாழ்ங்கோயில் மு
தலியவற்றுட் பூமியாகியமலரணைமீது கரங்களையுந் தாள்களையும்
போர்வையாகப்போர்த்துக் கொண்டானந்தநித்திரைபண்ணி (நாம
குணஞ் சாதிகருமமெனும் வாதனையிற் றாக்கற்றார் சேதுசம்ப
மெனலாம்) எ-து, பெயர்குணஞ்சாதிகிரியையென்னும் இவற்றி
ன்வாசனையோடுந்தாக்கற்றமெய்ஞ்ஞானிகட்குச் சாதியாதென்று
கூறலாஞ் சமயமியாதென்று கூறலாமாகலின் இவற்றினடைகளு
மவர்க்கின்றென்றவாறு. *

ப-ம். காமாதிவிட்டென்றமையான் மாயாகுணமொன்றுமி
லொன்பதாயிற்று, நாமாதிகளிற்றாக்கற்றொன்றுதவற்றின் வாசனை
யிற் றாக்கற்றொன்றமையான் அவற்றை மறந்துபோயினரென்ப
தாயிற்று, சாதிகருமமென்றமையாற் சாதியேதெனலா மென்பது
வருவிக்கப்பட்டது. (௨௫)

(அ-கை.) ஞானிநடை சாதிநடை சமயநடைகளோடொவ்
வாது இங்ஙனமிருப்பதென்னையெனின் மேற்கூறுகின்றார். *

ஞானிக்குலகநடையென்றுநாம்பார்க்கிற்.........*
சீனக்கண்ணாடியொடுதீபமுமா - மேனோர்க்கும்......*
விப்பிரட்டமேபோலவேறும்விகாரியோ... ...... ...*
வப்பராக்கன்றியதியான்.......................*

(இ-ள்.)(ஞானிக்குலகநடையென்றுநாம்பார்க்கிற்சினக்கண் டியெரிதீபமுமாம்) எ - து. ஞானியினது நடையை யுலகரது சாதி நடைபோலென் றியாம்பார்ப்போமெனின் அவரது நடையிருளி ற்றீபத்தைக்கொண்டு பொருள்காண்பதுபோலுமாம் இவரது நடை யவ்விருளிற் சினக்கண்ணாடிகொண்டு பொருள்காண்பது போலுமா மாகலின் அவரது நடையொவ்வாதானுற் சமயிகணடை யோடொ வ்வாதிருப்ப தெங்ஙனமெனின் (ஏனோர்க்கும் விப்பிரட்டமேபோ லவ்வரும்விசாரியோ வப்பராக்கன்றியறியான்) எ-து, சமயிகள தங்கடவுளரைத்தமக்குரிய நூல்கூறியவாறே வழிபடுவார் அவரக்க டவுளரையெல்லாங்கடந்துநின்ற பரிபூரணசிவத்தையடைந்தவராக லின் அச்சமயிக ணடைக்கு மவர்நடை சுத்தப்பிரட்டமே போல வொவ்வாதேவரும் இங்ஙனஞ்சாதிநடை சமயநடை யொவ்வா தாயின் இவ்விருவகை நடையுமில்லாத பாமரர்போலும் அவர் வி காரியோவெனின் அவர்சிறுவரைப் போலுநிர்விசாரி அவர்நிர்விகா ரியேயாகுற் விகாரமற்றிருக்க வேண்டுமேயன்றிக் கரப்பிச்சைவா ங்கியுண்டன்முதலிய நடைநிகழ்வானேனெனின் அங்ஙனங்காய த்தினிகழ்ந்ததாயினும் அவர்நிர்விகாரமாகிய பராக்கேயன்றி யிவ் விகாரமாகியபராக்கினுள்ளான்றினையுமறியாரென்றவாறு. *

ப - ம். உலகநடையென்றதனுன் ஞானிநடை வருவிக்கப்பட் டது. ஞானிநடைதீபம்போலெனவும் உலகநடை சினக்கண்ணாடி போலெனவுமாறிப் பொருள்கொள்க. இருளிற் றீபத்தாற்பொய்ப் பொருள்தோன்றுவபோல் ஞானதீபநடையான் மெய்ப்பொருள் தோற்றுமென்பதும் அவ்விருளிற் சினக்கண்ணாடியாற் பொய்ப் பொருள்சிறிதுந் தோன்றாதது போல் மாயாந்தகாரத்தோடுஞ் செ ய்யுஞ்சாதிநடையான் மெய்ப்பொருள்சிறிதுந்தோன்றாதென்பதுமி வ்வுவமைகளாற்கொள்க. விகாரியோவென்றமையானுமப் பராக்கன் றியறியானென்றமையானு மவற்றிற்கிடையில் வேண்டுவன வருவிக் கப்பட்டது. *

(அ-கை.) ஞானியினதுகருத்தை யாவரானுமறியக் கூடாதெ ன்றுமேற்கூறுகின்றார். *

ஏற்கவருசாரிமூடனெனப்பண்டிதனு............*
மேற்குலமாமாசாரவித்தனெனப்-பார்க்கி... ...... ...*
லளவைக்களவாகியப்பாலாஞானி.......... ... ...*
தெளிவைத்தெளிபாததென்..........*

(இ-ள்.) (மூர்க்கனனுசாரிமூடனெனப்பண்டிதனு மேற்குலமா மாசாரவித்தனென) எ - து, உலகநடை சமயநடைகளி னிற்போ ர்ஞானிநடையைப்பார்த்துத் தமதுநடையோ டொவ்வாமையான் இவன்பிரட்டநடையை யுடையமூர்க்கனெனவுமாசார வீனனெனவு மொன்றுமறியாதமூடனெனவுங் கூறவிவேகிகளாயினுரவர்நடையை ப்பார்த்து எல்லாவற்றையுந்தெளிந்த பண்டிதனுமெனவு மேலாய ஞானகுலமாமெனவும் ஆசாரத்திற் கெல்லாமோர் வித்தாமெனவுங் கூற. (யார்க்கு மளவைக்களவாகியப் பாலாஞானி தெளிவைத்தெளி யாததென்) எ - து, அவர்நடையை விசாரிக்குமிடத்துஇவராலிவ்வ ளவென்றளவிடுதற்களவிடுவதா யிவ்வளவையுங்கடந் தப்பாலுமாகி யஅந்தஞானியினது நடையினையுந் தெளிவினையும் இவ்வளவென் றொருவராலுமறியக்கூடாதிருந்ததென் கொலோவென்றவாறு *

ப-ம். உலகநூல் சமயநூல்களை யுணர்ந்தோர்கள் அந்நூல்க ளினடையிலின்மையானிகழ்ந்துகூறினர். ஞானநூலுணர்ந்தோர் ஞா னநடையென்றறிந்து புகழ்ந்துகூறினராகலி னளவைக்களவாகி யென்றும் இங்ஙனஞ்செய்வோமென்றுசெய்யாதவரிடத்தின் ஞான நடையியல்பாய்நிகழ்தலின் ஞானநூலுணர்ச்சியாற்புகழ்ந்து கூறி னர். அளவையுங்கடந்துநின்றாராகலின்இம்மூவளவைக்கும் பொது ப்பட வப்பாலா ஞானிதெளிவைத் தெளியாத தென்னென்றுங் கூ றினர். (௨௭)

(அ-கை.) சுகாதீதத்தினிற்போர்க் கந்நடைகளிலவாயினும் அருட்டெரிசன முதலியவற்றினிற்போர்க்கந்நடைகளிலவாயினது பிரட்டன்றேவெனின்மேற்கூறுகின்றார். *

அஞ்சனக்கண்ணுளர்க்கருநிதியந்தோன்றுவபோ*
னஞ்சலகைமாற்றியதிறனுவபோல்-வெஞ்சாப...... *
வீடுபோற்றோன்றுமருண்மேலிட்டால்விப்பிரட்டா *
மோடையின்மண்டுகமொப்போர்க்கு.............. ... *

(இ-ள்.)(அஞ்சனக்கண்ணுளர்க்கருநிதியந்தோன்றுவபோனஞ் சலகைமாற்றியதிறனுவபோல் வெஞ்சாபவீடுபோற் றோன்றுமரு ண்மேலிட்டால்) எ - து, பாதாளவஞ்சனம்போட்டுப் பார்க்குங்க ண்ணினையுடையார்க் கரியசேமநிதிதோன்றுவ போலுந்தம்மேலே றியிருந்தவிடத்தையும் பேயையுமாற்றினதனுற் றெளிவுபிறந்துமு ன்ன ரென்செய்துக் கொண்டோமென்ற வற்றான்மயங்கிச் செய்த

செயல்களைநாடி நாணுவாளைப்போலுங் கொடியசாபத்தினால்வருந்
தினோர்க்கு அச்சாபவிடுதலைபானாற்போலுந் தோன்றுந்திருவருண்
மேலிட்டகாலத்து (விப்பிரட்டாமோடை யின்மண்டூகமொப்போ
ர்க்கு( எ-து,அத்திருவருண்மே லீட்டைப்பெற்றஞானி நடையோ
டையின்மூழ்கிக்கிடக்குந் தவளைபோன் மாயாசமுத்திரத்தின் மூழ்
கிக்கிடப்போர்க்குப்பிரட்டுநடைபோற்றோன்றுமென்றவாறு *.

பா. மன்மறைப் பாற்றெரியா திருந்தநிதி யஞ்சனம்போட்
டுப்பார்த்தகண்ணாளர்க் கம்மண்ணூடுருவி அந்நிதிதோன்றுவபோ
ன்மலமறைப்பாற்றெரியாதிருந்தவருள் அவ்வருட்கண்ணாற் பார்த்த
போது அம் மலமறைப்புநீங்கி யவ்வருளெங்குந்தானாய்த் தோற்று
மாகலின்அஞ்சனக்கண்ணாளர்க் கருநிதியந்தோன்றுவபோலென்று
ம்விட்டமம் பேயுநீங்கியவிடத்து தெளிவுவந்து முன்னரவற்றான்ம
யங்கிச்செய்த செயல்களைநாடி நாணுவாளைப்போல் அச்சகலகேவ
லங்களைநீங்கி அருளைக்கண்டவிடத்து முன்னரவற்றான்மயங் கிச்செ
ய்தசெயல்களை நாடி நாணம்வருமாகலினஞ்சலகை மாற்றியதி ஞானு
வபோலென்றும்,ரிதவனாயிருந்துளாள் சாபத்தால் விலங்காதிகளா
யிருந்து பின்னர்ச்சாபம் விடுதலை யானபோது தேவத்துவத்தைய
டைந்தாற்போலவளவிறந்தகாலமலதேகத் தானாயிருந்தவர்இப்போ
தத்தேகநீங்கித் தன்னையறிவென்றுள்ள படியறிந்தமையால் வெஞ்
சாபவீடுபோற் றோன்றுமென்றுங்கூறினார். ஓடையின்மண்டூக
மொப்போர்க்கென்பது கிணற்றுக்குள் தவளைநாட்டு வளப்பமறியு
மோவென்னு மூலவழக்கக்குறிப்பான் மாயையின்மூழ்கிக்கிடப்
போர்க்குஞானிநடைதெரியுமோவென்றறிவித்தது. (உ௮)

(அ-கை.) நீரீண்டுக்கூறியவாறே துறவுஞ்ஞான நடையுமுடை
யோரை ஞானிகளென்பதன்றி யிவையில்லாரையும் ஞானிகளென்
பதென்னை யென்றமாணாக்கனைநோக்கி துறந்துள ஞானிகளதுவாக்
குக்காயங்களி னிகழுஞ்ஞானநடைக்கு அவரதீதமாயிருந் ததுபோ
ல் இல்லறங் குடும்பசகிதராயிருந்த ஞானிகளதுவாக்குக் காயங்க
ளினிகழுமுலகநடைக்குமவரதீதமாயிருப்பதொன்றறிவித்தல் *

அவரவரைப்போலிருப்பர்தாமவராகாரிபோ ... *
லிவரவர்க்கொப்பில்லையெனினு - மூவமைசொலில்... *
மேசிபணம்வெய்யோன்வீணைவெளிவிசிறி............ *
பசிப்பேய்போலெந்திறு பாவாய்........................ *

(இ-ள்.)(அவரவரைப்போலிருப்பர்தாமவராகார்போ லிவரவர்க்கொப்பிலலையெனினுமுவமைசொலில்) எ-து, குடும்பத்தோடுங்கூடியிருந்தும்ஞானிகளாயிருப்போர் அறிவினால் அக்குடும்பநிவர்த்தியாயிருந்த ஞானிகளைப்போலேயிருப்பர் இக்குடும்பத்தோடுமிருந்தஞானிகள் தாம்நடையினால் அக்குடும்ப நிவர்த்தியா யிருந்த ஞானிகளைப் போலாகாரதுபோல் இந்தக்குடும்பிகளந்தக்குடும்பத்தோடிருந்த ஞானிகளுக்கு நடையினாலொப்பர் அறிவினாலிந்தக்குடும்பிகளந்தக்குடும்பத்தோடிருந்த ஞானிகட் கொப்பிலரெனினும் இன்னுமந்தஞானிகட் குவமைகூறுமிடத்து (வேசிபணம்வெய்யோன்வீணைவெளிவிசிறி யாசியர்போலென்கினுமாவா)எ-து. வேசிபோலென்றுகூறினும் பணம்போலென்றுகூறினும் வெய்யோன்போலென்றுகூறினும் வீணைபோலென்றுகூறினும் வெளிபோலென்றுகூறினும் விசிறிபோலென்றுகூறினும் யாசிப்பார்போலென்றுகூறினுஞ்சரியாவவொன்றவாறு. ✻

ப-ம். வேசிதன் மேனகைகொண்டுவந்தார்மேற் றானுமவர்மேனகை கொண்டாள்போலும் வாக்குக்காயங்களிற் காட்டிமனத்தினவர்மேனகையின்றிப் பொருண்மேல் நசைகொண்டிருப்பதுபோன் மனைவிமுதலியகுடும்பத்தார் தம்மேனகையுற்றிருப்பத்தாமுமவர்மேனகையுற்றார்போலும் வாக்குக்காயங்களிற்காட்டி மனத்தினவர்மேலாசையின்றிமெய்ப்பொருண் மேலாசையுற்றிருத்தலின் வேசியென்றும் பணம்எவரொவரோமதேமதென்ற பிமானிப்பினுந்தனக்கவர்மேல் அபிமானமற்றிருத்தல்போற் சுற்றத்தார் நட்புமுதலியோர் எம்மவரெம்மவரென்றபிமானிப்பினுந் தாமவர்மேலபிமானமற்று நிர்விகாரிகளாயிருத்தலிற்பண மென்றும் வெய்யோனுலகத்தார் தொழிற்படினும்இவர்செய்யுநன்றுதீது அவனுக்கின்றாயதுபோற்றமது வாக்குக் காயங்களிலியாது நிகழினும் இவற்றான்வரு மிதாகிதங்களிற்றாம் சாராதிருத்தலின் வெய்யோனென்றும் வீணைவாசியா திருந்தபோதும் வாசித்துவிடுத்தபோதுஞ் சும்மாவிருந்து வாசிக்கும்போது அவன்பாடும் பாட்டின்படி தான்சொல்வதேயன்றிமற்றொன்றுஞ் சொல்லாதொழிதல் போல் ஒருவர்ஓர்காரியம்வந்துபேசாமுன்னரும் பேசியொழிந்தபின்னருந் தாமோர்காரிய விசாரணைபண்ணாது சும்பாயிருந்து காரியக்காறர்வந்து பேசும்போது அவர்பேசுங்காரியப்பேச்சுமாத்திரம் பேசிமற்றொன்றுஞ் சொல்லாதொழிதலின் வீணையென்றும் வெளியெல்லாவற்றிற்கு மிடங்கொடுத் திருந்

றும் அவற்றுட்டாக்கற்று நிற்றல்போற் குடும்பத்திற்செல்லாந் தாம்பிரதானமாயிருந்தும் அவற்றொடுந்தாக் கற்றிருத்தலின்வெளியென்றும் விசித்திரன்னைமெய்யுற்று விசித்திக்கொள்வார்க்குப் பயன்கொடுப்பதன்றி அவராற்றனக்குப் பயன்வேண்டாதிருத்தல்போற் றம்மைக்கொண்டு பிறர்பயன்படுவதன்றி அவராற்றனக்குப் பயன்வேண்டாதிருத்தலின் விசித்திரியென்றும் யாசியர் குற்றமுடையாரையுங்குணமுடையாரையுங்குணமாய்ப்புகழ்தல்போல் இவர் குற்றமுடையாரையுங் குணமுடையாரையுஞ் சமனாக்கண்டு நன்மொழிகூறலின் யாசியரென்றுங் கூறினர் போமெலன்கிலுமென்பதனை யெல்லாவற்றொடுங்கூட்டுக. (உகூ)

(அ-கை.) இங்ஙனங்குடும்பத்தோடுங் கூடியிருந்தும் பற்றற்றிருப்போராஞானிகளெப்படிசுபாயம் சிவிகைகவிகை முதலியவற்றோடும் அரசர்போலவாழ்கின்றோரையும் எங்ஙன ஞானியென்று சொல்வதெனின்மேற்கூறுகின்றார். *

நண்டுகுடையாளராய்சாதுரங்கம்பேரரசர்... ... ...*
தொண்டர்குழாம்போற்றச்சுகித்தாலு முண்டுசுத்தர்...*
போகத்தாரோசுடர்போற் பொய்ப்போக மெய்ப்பெருக்காய்ச்
சாகப்போவார்கடன்றீர்த்தல்......... ....... . ......*

(இ-ள்.)(நண்டுகுடையாளராய்ச் சாதுரங்கம்பேரரசர்தொண்டர்குழாம்போற்றச்சுகித்தாலு முண்டுசுத்தர் போகத்தாரோ) எ-து, நால்வகைச்சேனையுஞ் சிவிகைகவிகை முதலியவுமுடையராய் வாழும்பேரரசரைப்போலச்சிவிகைகவிகை முதலியவுடையரா யடிமைக்கூட்டங்கள் சூழ்ந்துநின்றுபசரிப்பமகாபோகங்களை யனுபவித்தாரெனினும் அவற்றொடுந்தாக்கற்றுநின்று சுத்தநிலை பெற்றாருமுண்டு அவரிப்பிரவஞ்சிகள்போலும்போகமயமாயழுந்துவரோ அழுந்தார் அஃதெங்ஙனமெனின் ( சுடர்போற்பொய்ப்போக மெய்ப்பெருக்காய்ச் சாகப்போவார்கடன்றீர்த்தல் ) எ-து. எண்ணெய்வார்க்குந்தோறுந் தன்னிடத்தில்வாங்கிக்கொண்டு தான்மிகவும் பிரகாசிக்குந் தீபம்போற் பொய்ப்போகம்வருந்தோறும் அதனைத் தற்போதத்தாற்பற்றியனுபவியாது அருட்கண்ணாற்பார்த்துத் தாமற்றனுபவித்தலின் அதுமெய்ப்பொருட்காய் அப்பொய்ப்பிரகத்தான் மெய்ப்பொருண்மிகவும் பிரகாசமாய்த்தோன்றுமாகலின் இங்ஙனமென்றறிதியாயின் மெய்ப்பொருளை யறிந்தோர் பொய்ப்போகத்

தோடுங்கூடியிருந்தனுடலைப்பதென்லையெனின் அக்கினியில்வீழ்ந் திறக்கப்போவார் தமக்குரியராயுள்ளார் கொடுக்கும் போகமாகிய கடனைவாங்கியதனுள்விருப்பமற்றவனுந் தீர்த்துக்கோடல்போல் அவருமித்தேகத்தையெப்போதொழிப்பாமென்னுங் கருத்தராயிதற்கமைத்தபிராரத்தக்கடனைவிருப்பமற்றநுபவித்துத் தீர்த்துக்கொள்வாராகலின் அவரதனோடுங்கூடியிருத்த லிம்முறைமையென்றறிதியென்றவாறு. *

ப-ம். போகம்வருந்தோறுந் தமக்கென்றுந் தற்போதத்தாற்பற்றியநுபவியாது அப்போதமற்று அருள்வடிவாயிருந்து அப்போகத்தைத்தாமநுபவிப்பதுபோற் சிவத்திற் காக்குமது மெய்ப்பத்தி யிப்பத்தியினலச்சிமாவது போதஞ் சிறிதெழினு மதனையமூங்கிக்கொண்டுநின்று பிரகாசிக்குமாகலிற் பொய்ப்போக மெய்ப்பெருக்காமென்றார். சாகப்போவார் போகத்தை விரும்பாதிருக்கவுஞ் சுற்றத்தாராயுள்ளா ரவரைவேண்டிக் கொடுவந்து புசிப்பித்தல்போன் ஞானிகள் போகத்தைவிரும்பாதிருக்கவும் பிராரத்தம் வலியக்கொடுவந்துபுசிப்பித்தலினிங்ஙனமுவமைகூறினர். (௫௰)

(அ-கை,) ஞானிகளநுபவிப்பதும் பிராரத்த மற்றையரநுபவிப்பதும் பிராரத்தமாயினவர்க்கு மிவர்க்கும் பேத மென்னையெனின்மேற்கூறுகின்றார். *

பெருநோவுக்கேயென்னப்பெற்றதுடற்போக... *
நரகேழுமூட்டுமிதுநாஞ்செத் - தருவத்துத்... ......*
தாமல்லாற்போகிப்ப...லவ...ர்பதங்......... ...*
காவலாட் ...ர்காண் ............. .............*

(இ-ள்.) ...ருநோவுக்கேயென்னப்பெற்றதுடற்போக நரகேழுமூட்டுமிது...செத்துருவத்துத்தாமல்லாற்பெ கிப்பதல்ல எ-து உடலாகியபெருநோவுக்கென்னகருதிப் போகத்தை யநுபவிப்பது தானேபிறவியாகிய நரகேழினுங்கொடுசென்று அவற்றிலுண்டாகிய துன்பங்களைப் புசிப்பிக்குமிஃதெங்ஙன மெனின் இவரநுபவிக்குமிப்பிராரத்தந்தற்போதமாண்டுஇத தேகத்துத் தாமிருப்ப தல்லாமல்அருள்வடிவாயிருந்தநுபவிப்பதல்லவாகலின் (அதுவன்பர் பதங் காவலாட்கைத்தளைபோற்காண்) எ-து. திருவடியைப்பிரியாதுநின்றஅம்மெய்யன்பர் தம்பிராரத்தந் தற்போத மாண்டுதேகந் தாமல்லாதுதிருவருடாமாயிருந்தநுபவிப்பதாகலின் அப்பிராரத்தந் தே

கமிருக்குமளவுங் காவலாட்போலுங் கைத்தனைபோலுமிருந்து தே கநீங்கும்போது அதனோடுந்தானுநீங்குமாகலின் அவர்க்குமறுபிற வியுளவாகாவென்றறிதியென்றவாறு. ✱

ப-ம். தேகந்தானும் போகந் தானுங் கருதிக்கொண்டு தற் போதத்தால் அப் போகத்தைப் பற்றி யனுபவித்தலின் இராகிதங்க ளும் இவ்விராகிதங்களாலிருவினைகளும் இவ்விருவினைகளான் மறுபி றவியும் இங்ஙனந்தொன்றுதொட்டுவருமாகலினாகேழ மூட்டுமெ ன்றார். போதமிறந்திருத்தலானும் பூரணவடிவாயிருத்தலானும் வி னைசார்தற்கிடமின்மையான் அவர்க்குமறுபிறவியின்றென்பதுங்கா ண்க. உடம்புமூப்புபிணிக்கிடமாகலின் அதனைப் பெருநோ வென் றார். நாஞ்செத்துருவத்துத் தாமல்லாற் போகிப்பதல்ல வென்றவர் க்குஉண்மையாயகுணங்களையிவர்க்கின்மையென்றெடுத்துக் கூறின மையால் அவர்க்கவைவருவிக்கப்பட்டது இதுவென்ப திவர்பிரார த்தமேனின்றது அதுவென்ப தவர்பிராரத்த மேனின்றது பதந்தி ருவடிபதத்திணையுடைய வன்பனெனப் பொருள்கொள்க. போகமா ய்வந்துசூழ்ந்து கோடலானும் பரமுத்தனுகவொட்டாதுதேகத்தில வனைத்தமித்துநிற்றலாலும் பிராரத்தத்தைக் காவலாளென்றுங் கைத் தலையென்றுங்கூறினூர். (௩௯)

(அ-கை.) ஒருவர்செய்தவினை மற்றொருவரைச் சாராமையான் அவர்செய்தவினை அவரைச்சாராதிருப்பதெங்ஙன மெனின் மேற்கூ றுகின்றார். ✱

சுகிக்கில்லைத்துக்கஞ்சுடுகாடுசொர்க்க...... ... ......✱

மகத்துக்குஞ்சொர்க்கநரகாய்ந்தார் - சுகிப்பதுவு ✱
மத்துவிதானந்தர்க்காகாரமற்றது..............✱
பத்திசெய்வார்க்கேர்க்கும்பயன்............ ... ... ✱

(இ-ள்.) (சுகிக்கில்லைத்துக்கஞ் சுடுகாடுசொர்க்க மகத்துக்குஞ் சொர்க்கநரகாய்ந்தார்சுகிப்பதுவுமத்து விதானந்தர்க்காகார மற்றது எ-து, பரமசுகமேவடிவாயிருப்போர்க்குத் துக்கமென்ப தில்லைத் துக்கமின்மையாற் சுகமுமின்று சுத்தமாகிய விடமென்னுங் கருத் துச்சிறிதெழினுமதுவே நரகமாய்த்தோற்றலின் அசுத்தமாயுள்ளசு கோடேயவர்க்குச்சுவர்க்கம் அஃதன்றித் தாமானந்த வடிவா யிருத் தலே சுவர்க்கமெனவுந்தேகந்தாமென்று சிறிதெழுங் கருத்தே நரக மெனவும் புறத்திற்குச் சொர்க்கநரகாய்ந்தாற்போல் அகத்திற்குஞ்

சொர்க்கநரகமாய்ந்தார் அஃதன்றி அவரனுபவிப்பதுமத் துவிதானந் தமேயாம்இங்ஙனமிருந்தவத்துவிதானந்தர்க்கவ்வாகாமிய வினைபுசிப்பதற்றுநின்றது. இங்ஙனமவர்க்குப்புசிப்பற்றுநின்றால் அவ்வினைதானெவ்விடத்துச்செல்லுமெனின் (பத்திசெய்வார்க்கேர்க்கும் பயன் எ-து, அவர்மேலன்பாயிதஞ்செய்வோர்க்கும் வெறுப்பாயகிதஞ்செய்வோர்க்கும் அவ்விருவினைப்பயன்களுஞ்சாருமென்றறிதி-எ-று.

ப-ம். ஆனந்தமேவடிவாயிருத்தலிற் றனுவில்லை அவ்வடிவிற்றற்போத மின்மையாற்கரணமில்லை சுடுகாடேசுவர்க்கமாய்க்காண்டலாற்புவனமில்லை அவ்வானந்தத்தையே யனுபவித்தலாற் போகமில்லை. இங்ஙனந் தனுகரணபுவனபோகங்களையெல்லாங்கடந்து நின்றோரை அவ்வினை சாரமாட்டாமையி னுகாரமற்றதுவென்றார். தேகத்தையுடையவனைத்தேகியென்றாற்போற் சுகடிவா யிருந்தோரைச்சுகியென்றார். (௯௨)

(அ-கை.) இங்ஙன மிருந்த ஞானியடைந்தபேரின்பத்துக்குவமையாதெனின்மேற்கூறுகின்றார்.

அரிபிரமரிந்திரர்களாதிகளார்தானச்..............*
சரிவிரத்தனின்பத்தைச்சாற்றிற்-பரமசிவன்... ......*
றானேசரிமீட்டுஞ்சாற்றுகிற்றான்றான் சரிவே..............*
றானானைவேதமறியா............................ .........*

(இ-ள்.)(அரிபிரமரிந்திரர்களாதிகளார்தானச்சரிவிரத்தனின்பத்தைச்சாற்றில்) எ-து, அரிபிரமரிந்திரர் முதலியமதவர்களின்பமெல்லாமொன்றாகக்கூட்டி னவ்விரத்தனின்பத்திற் கவமைசொல்லுமிடத்துச்சரி (பரமசிவன்றானேசரிமீட்டுஞ்சாற்றுகிற்றான்றான்சரிவேறானானைவேதமறியா) எ-து. அஃதன்றிப் பரமசிவன் அதுபரிபூரணானந்தந்தானேசரிபின்னுஞ்சொல்லுமிடத்துத்தன்னினுந்தன்னிடத்துத்தன்னின்பமேசரி இங்ஙனமெய்ப்பொருள்கட்கும்வேறாய்நின்றடைந்தாரின்பத்தை வேதங்களும் இவ்வளவென்றளவிட்டுக் கூறவறியமாட்டாதென்றவாறு. *

ப-ம். பரமசிவனது பரிபூரணானந்தமெல்லாந்தாமாகி நின்றனுபவித்தலிற்பரமசிவன்தானேசரியென்றும் தன்னின்பம்போலன்றி யாவர்க்குமின்மையாற் றான்றான்சரியென்றும் அவ்வின்பமுந்தாமாகாதவனை யனுபவிப்போராயிருத்தலின் வேறானானையென்றுங்கூ

றினர். இன்பத்திற்குவமைகூறினமையான் அவர்சரியென்றதையவ ரதின்பஞ்சரியென்றுகூறப்பட்ட தஃதாகுபெயர் இதனான்ஞானிக ளதின்பப்பெருமைகூறியவாறுகாண்க. (௯௩)

(அ-கை.) சித்தாந்தஞானம்போல வேறுஞானமின் றென்று ம்இந்தஞானம்பெற்றோர்ளாவழிபடுவார்பெருமையே பெருமையெ ன்றுமறிவித்தல். *

சா லோகமாதிதருஞ்சைவசித்தாந்தி............ ...*
பாலேகம்பார்க்கப்பணியுமவன்-மேலே..............*
யுருகித்திருவுளத்துக்குற்றபணிசெய்வார்...... ... ...*
பெருமைக்கேதுண்டோபிற...... ........ ... ...... ..*

(இ-ள்.)(சாலோகமாதிதருஞ்சைவசித்தாந்தி பாலேகம்பார்க்கப்பணியுமவன்மேலே) எ-து, தன்னைவந்தடைந்தோரதுபத்திப ணிவிடைக்கேற்ப அவர்க்குச்சாலோகசாமீப சாரூபமாகிய பதமு த்திகளையுங்கொடுக்குஞ் சித்தாந்தஞானிபாலேகமாயிருந்த மெய் ப்பொருளையறியும்பொருட்டுவந்து மனமொழி மெய்களான்வண ங்கும்அறிபக்குவன்மேல் ( உருகித்திருவுளத்துக்குற்றபணிசெய்வா ர்பெருமைக்கேதுண்டோபிற) எ-து, பேரன்பு வைத்துள்ளுருகிய வனது திருவுளத்திற்கேற்றபணிவிடைகளைச்செய்வோரதுபெருமை க்குமேலாயபெருமைபிறிதியாதுண்டென்றவாறு *

ப-ம்-வந்தடைந்தோர் பக்குவா பக்குவங்களை யறிந்து சரியா திகளைவருவித்துச் சாலோக மாதிபதமுத்திகளைக் கொடுப்பதும் அ திதீவரபக்குவனுய்வந்தோனுக்குத் தற்போதத்தைக்கெடுத்து நிரதி சயவின்பத்தைக்கொடுப்பது மற்றைச்சமயங்களி லின்மையாற்சா லோகமாதிதருஞ் சைவசித்தாந்திபாலேகம்பார்க்கப்பணியமவனெ ன்றார். இய்யனமிருந்தசித்தாந்தியைப் பணியுமவனைப்பணிவோர்க்கு ம் அம்முத்தியின்பமுண்டாமாகலின் உற்றபணி செய்வோர்பெருமை க்கேதுண்டோபிறவென்றார். (௯௪)

(அ-கை.) இதுவுமது.

கா லமுடன்றேசந்திக்குக்கருமமுடற்...... ... ...*
கோலஞ்சமயங்குறிப்பறிதல்-சீலந்...... ...... ......*
தலையோடுபோனவுயிர்தான்போலத்தன்றே...... . . *
டுலையாஞ்சியன்னையிவன்.................. ..........*

(இ-ள்.) (காலமுடன்றேசந்திக்குக் கருமாமுடற்கோலஞ்சமயங்குறிப்பறிதல்சிலம்) எ-து, இன்னகாலத்தின்னவிரதஞ் செய்வதென்னுங் காலமுங்காசிமுதலியன நன்றுமற்றையன தீதென்னுந் தேசமும் இன்னதிக்குநன்று இன்னதிக்குதீதென்னுந்திக்கு மின்னகருமஞ்செய்வ தின்னகருமந்தவிர்வதெனுங்கருமமும் உடலிற்சமைந்தவேடங்களும் அவ்வேடங்கட்குரியகடவுளரை யிங்ஙன மிருப்பரெனக்குறிப்போடு தியானிப்பதாய குறிப்பறிதலும் இன்னசாதிக் கின்னதாசாரமென்று செய்யுஞ்சிலமுமாகிய வினையெல்லாம் (தலையோடுபோனவுயிர்தான்போலத் தன்னோ டிலையாஞ் சிவனேயிவன்) எ-து. தலைபோனவிடத்து அதனோடும் போன வுயிர் போலத் தற்போதமிறந்தவிடத்து அதனோடுமிலவாய்நீங்கு மாகலின் மவுனந் தமாயிருந்தசிவனேயிவனுமென்றவாறு. *

ப-ம். கைகான்முதலிய வுறுப்புகள்போனவிடத்து மிருந்தவுயிர்தலையோடும்போன துபோலப் போதஞ்சிறிதிறந்தவிடத்து மிருந்தகிரிகைத்தொழில்களது முற்றுமிறந்தவிடத்து அதனோடுநீங்குமாகலின் இங்ஙனமுவமைகூறினர் அவற்றைச்செய்தவ னிறந்தமையால்அவனாற்செய்யப்படுமவையுமிலவென்பதுங்கொள்க. மவுனந்தமாயுள்ளசிவனையடைந்தவன் மவுனந்தியாகலிற் சிவனே யிவனென்றார். (௬௫)

(அ-கை.) இங்ஙனமவர்க்கு விதிவிருத்தங்க ளில்லையென்று நீர் கூறியதென்னையெனின்மேற்கூறுகின்றார். *

௬௬ சாவேபெருநோன்பாய்ச்சசந்தற்றசத்தியர்க்குத்... *

தேவாரங்காலந்தியானமறம் - பாவம்...... ...... ...*
விதிவிருத்தம்பேசுகைக்குவேதாகமங்க... ............*
ளதிசயிக்குமேலுரைப்பாரார்..................... ......*

(இ-ள்.) (சாவேபெருநோன்பாய்ச்சந்தற்றசத்தியர்க்குத்தேவாரங்காலந்தியானமறம்பாவம் விதிவிருத்தம்பேசுகைக்கு) எ-து. தற்போதமிறப்பதே பெருந்தவமாய்க்கொண்டு அதனைக் கெடுத்துச் சிவத்தோடிரண்டறக்கலந்த சத்தியஞானிகட்குத் தேவார முதலியதோத்திரங்களையோதலுங் காலாகாலங்களறிந்து சிவாலயங்களிற் சென்றுபணிதலும் ஓரோர்பாவனையைக்கருதி தியானித்தலுஞ் சிவபூசையாதிபுண்ணியங்களைச் செய்தலும் இவையன்றிப் பாவங்களைச்செய்தலுமாகிய இவ்விதிவிருத்தங்க ளுளவென்று சொல்வதற்கு

(வேதாகமங்களதிசயிக்குமேலுரைப்பாரார்) எ-து, வேதங்களுமாகமங்களும் அதிசயிக்குமெனின் அவற்றிற்குமேன்மற்றியாவர் சொல்வாரென்றவாறு. *

ப-ம். போதஞ்சிறிதெழினு மதனைக்கெடுத்துச் சிவத்தோடுங்கலந்திருப்பதே யவர்க்குச்சகலநோன்புகளுமாகலிற் சாவேபெருநோன்பாய்ச் சந்தற்றசத்தியமென்றார். அங்ஙனஞ் செய்வதே நோன்பாய்க்கொண்டோர்க்கு அதற்குமேன்மற்றநோன்பொன்று மின்மையான் அவர்க்குவிதிவிருத்தமிலவாயின-வேதாகமங்களதிசயிக்குமென்றமையான் அவற்றுன்விதிவிருத்தமறிவோர்க்கு வேறுசொல்வதற்கிடமின்மையான் மேலுரைப்பாராரென்றார். விதியாவது வேதாகமங்கள் சிவபூசாதிகளைச்செய்கவென்று கூறுவது-விருத்தமாவது மதுபானாதிகளைவிடுகவென்றுகூறுவது. (௫௬)

(அ-௫௭.) எமக்குமிங்ஙனமிருக்குமென்று ஞானிகளதருமையறிவித்தல். *

மோனிகளைப்பார்த்திமையாமோகமும்வெண்டிங்கண்
மேனியழகெழுதாமேற்பந்தி - யான..................*
பதுமாதனன்கண்ணும்பானுவும்போற்றனு...... ...*
யெதிராகுஞ்சொப்பனத்திலும்...................*

(இ-ள்.) (மோனிகளைப்பார்த்திமையா மோகமும் வெண்டிங்கண்மேனியழகெழுதா) எ-து, அந்தஞானிகள் தம்மைப்போற்சுகாதிமுத்தியைப்பெறும்பொருட்டுப் புறத்துநின்ற போதத்தையுள்ளடக்கி யிதனைக்கெடுப்பதே விரதமாய்க்கொண்ட மவுனிகளை யிமைபாநாட்டத்தோடும்பார்த்து இவர்மேல்வைத்தமோகமும் உத்தானத்தால் வெண்டிங்கள் போலும் விளங்காநின்ற அழகெழுதக்கூடாதஅவரதுதிருமேனியும் (மேற்பந்தியானபதுமாதனன்கண்ணும்பானுவும்போற்றனுவெதிராகுஞ்சொப் பனத்திலும்) எ-து, பிரமனதுநான்குமுகங்களினு மேன்மைபெறுபந்திபோல்விளங்குவதானவெண்கணகளும் அக்கண்கட்கெதிர்தோன்றும் பானுவும்போல்யாம் வருதாதிருப்பினும் அவைதாமாய் வந்தெமதுளக்கண்ணிற்குமெதிரேவிளங்குவதாஞ்சொப்பனத்திலுஞ்சாக்கிரத்திலுமென்றவாறு. *

ப-ம். சுகாதிமுத்தியையடைந்த ஞானிகட்கு ஞானசாதனைக்கண்டாற் பாசங்களெல்லாங்கடந்து இவ்வளவுவந்தா ரென்ற

வர்மேற் சந்தோஷமும்பிறக்குமாகலின் மோனிகளைப்பார்த்திலை யாமோகமுமென்றார். யான்பெற்றபேறுபெறுக இவ்வையகமெ ன்பதுமது-ப துமாதனைவிலமபா நாட்டத்தையும் அதற்கெதிர்தோ ன்றும்பானுவையும் உவமைகூறினமையான் அவர்மேல்வைத்தமோ கத்தையும் அவரது திருமேனியையுந் தமதுளமறவா தென்பதாயிற் று. எனதென்னும் பெயரொஞ்சிநின்றது- சொப்பனத்திலுமென்ற வும்மையாற் சாக்கிரத்துமென்றுவருவிக்கப்பட்டது. (௬௭)

(அ-கை.) ஞானிகளைப்புகழ்ந்துகூறுதல்.

உருகுபரமசுகவுல்லாசநோக்குந்.................. *
திருமுகமும்புன்முறுவற்றேசுந் - திருநீறுந்... ......*
தற்பாவமாண்டசரீரத்திலோர்சாத்து.................. *
மற்றேவெறுமனழகாம்.................................. *

(இ-ள்.)(உருகுபரமசுகவுல்லாச நோக்குந்திருமுகமும்புன்மு றுவற்றேசுந்திருநீறும்) எ-து, உள்ளமுருகப்பண்ணுகின்ற பரமசுக வுல்லாசத்தோடுங்கூடியதிருநோக்கமும் அவ்வின்பக்களிப்பாற்றெ ய்வத்தாமரை யலர்ந்ததுபோல்விளங்காநின்ற திருமுகமும் அவ்வி ன்பம்பொங்கி மேன்மேலெழலாற்றோன்று மந்தகாசப்பிரகாசமு ந்திருமேனிமுழுதும்பூசுந் திருவெண்ணீற்றழகும் (தற்பாவமாண் டசரீரத்திலோர்சாத்து மற்றேவெறுமனழகாம்) எ-து, பஞ்சபூத குணங்களாகியதற்பாவமிறந்து நின்றசிறும்பணியிற் கூடியுங்கூடா திருந்தஞானிகளத் திருமேனியிற் றோற்று மவையங்ஙனந் தோற்று வனவன்றியவற்று னவர்க்கியாதுசிறப்புமின்று அவைவாளாத்தோற் றுமழகுகளாமென்றவாறு. *

ப- ம். ஆனந்தந்தோன்றும்போதுஉள்ள நெக்குருகத்தோன் றுமாகலின் உருகுபரமசுகமென்றுஞ் சடசித்துக்களாயுள்ளபொ ருள்களெல்லாம் அவர்க்குச்சுகசொரூபமாய்த் தோற்றுமாகலின் அ வர் நோக்கைப் பரமசுகவுல்லாச நோக்கென்றுங்கூறினார். வினைப்ப ன் மனத்துத் தேனையும் பாலையுங் கன்னலையும் மதுரத்தையுமொத் தானையுமென் பினையுமுருக்கா நின்றவொண்மையனே யென்பதுமது பூதானுந்தலைசுமப்பவென்றதும்போற் றோற்றுமென்பதைச் சாத்து மென்றருமைதோன்றக்கூறினார். உல்லாச நோக்குமுதலியனவவர்க ருக்காற்றோற்றுது இயல்பாய்த் தோற்றலினற்றே வெறுமனழகா மென்றார். வெறுமனென்பதுபார்ப்பார்சொல். (௬௮)

(அ-கை.) ஞானிகளதருமைகூறுதல்.

வாடன்மணம்போல்வருந்தாவயிராக்யத்......... *
தோடுமெலிந்தவுடம்புடனே - கூடா.....................*
திருவிடயானந்தசுகநீங்காதநோக்குந்... ...... ......*
திருமுகமுமென்னைவிடாது.............................*

(இ-ள்.) (வாடன்மணம்போல் வருந்தாவயிராக்யத் தோடுமெலிந்தவுடம்புடனேகூடா) எ-து, வாடற்பூவின்மணஞ்சிறிதுதோன்றுதல்போற்சிறிது தோன்றும்பிராரத்தவாசனை யோடும்போதத்தான்வருந்திச் செய்யாதபாசவயிராக்கியத்தோடுந்தளராநின்றதிருமேனியுடனேகூடியிருந்துங் கூடாராகியஞானிகளது (திருவிடயானந்தசுகநீங்காதநோக்குந்திருமுகமுமென்னைவிடாது) எ-து, திருவிடயமாய்த்தோன்றும்ஆனந்தமாகியசுகம் உட்போற்புறத்துநீங்காதஅவ்வானந்தத் திருநோக்குந் திருமுகமும் எமதுள்ளத்தையெப்போதும்விட்டுநீங்காதென்றவாறு. *

ப-ம். வாடன்மணம் போலென்றவுவமையாற் சிறிதுபிராரத்தவாசனையோடுமென்பது வருவிக்கப்பட்டது - வருந்திச்செய்யும் போதமுடையாரது வயிராக்கியம்போலன்றி . யிவர்க்கியல்பாய்த்தோற்றலின் வருந்தாவயிராக்கிய மென்றார், விடயானந்தம் போலெதிரீடாய்த்தோற்று தெதிரீடற்றவிடத்திற்றோற்றலின் திருவிடயானந்தமென்றார். (௫௯)

(அ-கை.) ஆயின்இந்தஞானிகட்குப் பெயரியாதெனின் மேற்கூறுகின்றார். *

தத்துவத்தின்போர்வைசரிந்ததிகம்பரியே......... *
ரத்துவிதியேகாந்தியானந்தி - சுத்தன்.....................*
துரியனவதூதன்றுறவிசிவயோகி...... ............... *
நிருவாணியெனவிரத்தனென்.............. . ...... *

(இ-ள்.)(தத்துவத்தின்போர்வைசரிந்ததிகம்பரியேர்)எ-து-முப்பத்தாறுதத்துவங்களாகிய போர்வைசரிந்தவதனாற் றிகம்பரியாயிருந்தஞானியினதுபெயர்சொல்லுமிடத்து (அத்துவிதியேகாந்தியானந்திசுத்தன்றுரியனவதூதன் றுறவி சிவயோகி நிருவாணியெனவிரத்தனென்) எ-து,சிவத்தோடத்துவிதமாயிருத்தலின் அத்துவிதியென்றும் அங்ஙனமத்துவிதமாயிருப்பினுந் தானசிவமாகா

மையினேகாந்தியென்றும் பூரணானந்தமெல்லாந்தானாய்நின்றனுப வித்தலின் ஆனந்தியென்று மலத்திரயங்களை நீங்கிநிற்றலாற் சுத்த னென்று மேலாயபொருளை யடைந்தோனாகலிற் றுரியனென்றும் வன்னாச்சிரமங்களைக்கடந்து நிற்றலானவதூதனென்றுந் தேகாதிப் பிரவஞ்சங்களெல்லாந்துறந்துநிற்றலாற் றுறவியென்று மற்றொன் றோடுங்கூட்டரவின்றிச்சிவத்தோடுங்கூட்டரவாயிருத்தலிற் சிவயோ கியென்றுமத்துவாவாறையுங்கடந்து நிற்றலா னிருவாணியென்றும் அச்சிவத்தோடத்துவிதமாயிருக்கின்றேனென்னும் வாசனையுமிறந் துபோயிருத்தலின் விரத்தனென்றுநீசொல்லுதி-எ-று. *

ப - ம், உடம்பைப்போர்த்துநின்று நீங்கியபோர்வைபோல் உயிரைப்போர்த்துநின்றுநீங்கினமையாற்றத்துவத்தின் போர்வைக ரிந்தவென்றார். அஃதன்றிப்பூதகஞ்சுகப்பிரகிருதிகஞ்சுகம் கலாதி கஞ்சுகம்வயிந்துவகஞ்சுகம் சத்திகஞ்சுகமென்னும் இப்பஞ்சகஞ் சுகங்களையுநீக்கிநின்றானெனினுமாம். அத்துவிதியென்ற தாதியிக்கு ணங்களெல்லாமுடையனாகலி னிப்பெயர்களெல்லா மவர்க்குரித்தா யின. (௬௰)

(அ-கை.) இங்ஙன மகத்துள்ளாசையற்றுத் துறந்தோரையுமகத் துளாசையிருக்கத்துறந்தோரையுமெங்ஙனமறியலாமெனின்மேற்கூ றுகின்றார். *

அடங்கத்துறந்தார்க்குமாசையறப்பாவித்.........*
தொடும்பக்குவந்தெரியாதோகோ-மடந்தேடிப்... ...*
பிச்சையாய்மூலையிற்பெண்பேச்சாய்வரினடக்கைக் *
கிச்சையாய்க்கைக்கெதிர்நீட்டும்......................*

(இ-ள்.)(அடங்கத்துறந்தார்க்குமாசையறப்பாவித்தொடும்பக் குவந்தெரியாதோகோ) எ-து, அகத்தாசையிருக்கப்புறத்தாசையற ப்பாவித் தடங்கத்துறந்தாரையும் இயல்பா யகத்தாசையற்றடங்கத் துறந்தாரையும் அவரோடுநிகழும்பக்குவாபக்குவங்களினாலே யோ கோதெரியாதோ அஃதெங்ஙனமெனின் ( மடந்தேடிப் பிச்சையா ய்மூலையிற்பெண்பேச்சாய்வரினடக்கைக் கிச்சையாய்க்கைக்கெதிர் நீட்டும்)எ-து,அவர்நற்பிச்சையிடுமடந்தேடிச்சென்றுபிச்சையேற் பதாய்ப் புதியமருமகப்பெண்மூலைக் கண்ணிருந்து மெல்லெனப் பேசுவதாயபேச்சுபோற்றமக்கெனவோரொடுக்கம்பற்றி அதனுள்ளி ருந்துமாரீசத்தோடு மெல்லெனப்பேசுவதாயிவர்பெரியரெனக்கரு

